ஃபியோதர் தஸ்தயேவ்ஸ்கி

எழுதிய முதல் நாவல்

# பாவப்பட்டவர்கள்



AMTI வெளியீடு : 2

தலைப்பு : பாவப்பட்டவர்கள்

வகைமை : நாவல்

நூலாசிரியர் : ஃபியோதர் தஸ்தயேவ்ஸ்கி

மொழிபெயர்ப்பாளர் : கவிஞர் புவியரசு

பதிப்பாசிரியர் : முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்

பதிப்பாளர் : அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் மொழிபெயர்ப்பு மையம்
*NPTC - MCET வளாகம், மாக்கினாம்பட்டி (அஞ்சல்)*
*உடுமலை ரோடு, பொள்ளாச்சி - 642 003,*
*கோவை மாவட்டம்.*
*தொலைபேசி : +91-4259-236030 / 40*
*அலைபேசி : +91-94430 29736*
*மின்னஞ்சல்* : amti@drmcet.ac.in
*இணையதளம்* : www.drmti.in

இணைப் பதிப்பாளர் : வர்த்தமானன் பதிப்பகம்
*21, இராமகிருஷ்ணா தெரு, தியாகராய நகர்,*
*சென்னை - 600 017.*
*தொலைபேசி : +91-44-2814 0347*
*அலைபேசி : +91-99418 63542*
*மின்னஞ்சல்* : varthashree@gmail.com

பதிப்பு : முதல் பதிப்பு - அக்டோபர் 2015



நூல் அளவு : 1/8 டெம்மி

பக்கங்கள் : 204

விலை : ₹ 135

வடிவமைப்பு-தயாரிப்பு: அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் மொழிபெயர்ப்பு மையம்

ஆப்செட் அச்சு : ஆர்.கே. பிரிண்ட்ஸ், சென்னை -14.

## அறிமுகம்

ஐம்பது வயதுக்காரருக்கும் இருபது வயது இளம் பெண்ணுக்கும் இடையில் ஏற்படும் புதிய உறவின் ஊசலாட்ட உணர்ச்சி நாடகமே இந்த நாவல்.

ஆசிரியர் கூற்றாக அல்லாமல் இரு உள்ளங்களின் நேரடிப் பதிவாகக் கடிதங்கள் மூலம் கதை நிகழ்கின்றது. எதிரெதிர்க் கட்டடங்களில் வாழும் இவர்கள் சந்தித்துக் கொள்வது குறைவுதான். ஆனால் பார்த்துக் கொள்வதன் மூலமும் கடிதங்கள் மூலமும் பாசம் பாய்கின்றது.

இருவரையும் இணைத்தது கொடிய வறுமையும் அனாதைத் தன்மையும்தான். ரஷ்யாவின் பீட்டர்ஸ் பர்க் நகரின் மிகவும் பின்தங்கிய அடித்தட்டு மக்களின் அல்லல்கள் நிறைந்த வாழ்வுச் சூறாவளியில் அகப்பட்டு அகப்பட்டுத் தத்தளிக்கும் இரு உள்ளங்கள் திக்கற்ற நிலையில் ஒன்றையொன்று இறுகப் பற்றிக் கொள்கின்றன.

பெரியவர் ஆரம்பப் பள்ளிப் படிப்பைத் தாண்டாதவர். ஆனால், அழகிய கையெழுத்து காரணமாக பத்திரப் பதிவு அலுவலகத்தில் நகலெடுக்கும் பணி கிடைக்கிறது, அற்பச் சம்பளம். அவள்,

தொடர்ந்து உடல் நலக் கேட்டுடன் தையல் வேலை செய்து பிழைக்கிறாள். அவர் படிப்பின்மைக்கு ஏற்றபடி பேச்சு மொழியில் தப்பும் தவறுமாகக் கடிதங்கள் எழுதுகிறார். படித்த அவள் திருத்தமாக எழுதுகிறாள்.

ஒரே உலகில் இருவேறு உலகங்கள். பாவப் பட்ட மக்களின் வாழ்வே இப்படைப்பு. காலப் போக்கில் உறவு, அன்பாகி, அன்பு பாசமாகி, பாசம் நேசமாகி, நேசம் காதலின் எல்லையை எட்டும்போது நிகழும் எதிர்பாராத திருப்பம் நெஞ்சை நெகிழவைப் பது. அவள், வார்வரா அலெக்சியேவ்னா. அவர், மகார் அலெக்சியேவிச். உலக எழுத்துமேதை தஸ்தயேவ்ஸ்கியின் எல்லாப் படைப்புகளின் அடிநாதம் இதில் நுட்பமாகப் பொதிந்திருக்கிறது.

இந்த மகானின் முதல் நாவலையும், கடைசி நாவல் கரம்சோவ் சகோதரர்களையும் தமிழுக்கு அறிமுகப்படுத்த நேர்ந்தது என் பெரும்பேறு.

அன்புருவான சகோதரர் திரு. ம. மாணிக்கம் அவர்கட்கும், நண்பர் கவிஞர் சிற்பி அவர்கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகள்.

- கவிஞர் புவியரசு

## பதிப்புரை

ஃபியோதர் தஸ்தயேவ்ஸ்கி (**1821- 1881**) உலகின் தலைசிறந்த நாவலாசிரியர்களில் ஒருவர். நாவல் இலக்கியம் அவருடைய படைப்பாற்றலின் குவிமையம் என்றாலும் சிறுகதை, கட்டுரை என்ற இலக்கிய வகைமைகளிலும் அவருடைய ஆற்றல் தளும்பி நின்றது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் ரஷ்யா ஏற்றத் தாழ்வுகள் நிரம்பிய, இரக்கமற்ற ஜார் ஆட்சியின் சர்வாதிகாரம் கொலுவீற்றிருந்த களமாக இருந்தது. சிந்தனையிலும் எழுத்தாற்றலிலும் சிறந்திருந்த பலரையும் புரட்சிக்காரர்களாகச் சித்திரித்துக் கொடுந் தண்டனைக்கு இரையாக்கி வந்த காலமாகவும் அது அமைந்தது.

வறுமையும், பிரபுத்துவமும் நேரெதிர் முரண் களாக விளங்கிய அந்த நாட்டில், அந்தக் காலத்தில் வாழ்ந்தார் தஸ்தயேவ்ஸ்கி. நாவல் இலக்கியக் கலையில் அதே நாட்டில், அதே காலத்தில் வாழ்ந்த லியோ தல்ஸ்தோய் இந்த இலக்கிய வகைமையைச் செழுமைப்படுத்திய இன்னொரு படைப்பாளியாவார்.

இளம் வயதில் நிகோலாய் ராணுவப் பொறியியல் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்று பொறியியலாளராகப் பணிபுரிந்து வந்தார் தஸ்தயேவ்ஸ்கி. ஆயினும் அவரது உள்ளம் இலக்கியத்திலேயே நாட்டம் கொண்டு நின்றது. இலக்கியப் பணியில் ஈடுபட்டிருந்த காலத்தில் புரட்சியாளரென ஐயுறுப்பட்டு மரண தண்டனை விதிக்கப்பட்ட போதிலும் சைபீரியாவுக்கு நாடு கடத்தப்படுவதெனத் தீர்மானிக்கப்பட்டதால் உயிர் பிழைத்தார். ஏறத்தாழ ஐந்தாண்டுகள் சைபீரியச் சிறைவாசம் அனுபவித்து வந்த பின்னும் கட்டாய ராணுவப் பணியில் ஈடுபட நேர்ந்தது.

அப்போதே வலிப்பு நோயால் பாதிக்கப்பட்ட அவர் விரைவில் சூதாட்டத்திலும் நாட்டம் கொண்டார். 'எல்லாம் இங்கோர் சூதாட்டம்- இரவும் பகலும் மாறாட்டம்' என்ற பாணியில் வாழ்க்கை விரைந்த போதிலும் இருபத்தைந்து வயது முதல் இறுதி நாட்கள் வரை எழுதிக் குவித்தார்.

**11** நாவல்கள், **17** குறுநாவல்களுடன், பல சிறு நாவல்களையும் எழுதிய தஸ்தயேவ்ஸ்கியின் படைப்புகளில் நிகரற்ற சிறப்புடையவை என குற்றமும் தண்டனையும் (**1866**), அசடன் (**1869**), காரம்மசோவ் சகோதரர்கள்(**1880**) ஆகிய மகத்தான படைப்புகளைக் குறிப்பிட வேண்டும். புகழ்பெற்ற அவருடைய நாவல்கள் தமிழிலும் ஏறத்தாழ **170** உலக மொழிகளிலும் வெளி வந்துள்ளன.

தஸ்தயேவ்ஸ்கியின் எழுத்துக்களில் மனிதனின் சொல்லொணாத் துயரங்களுக்கும், சோதனை களுக்கும் மத்தியில் அன்பும், கருணையும், மன்னிப்பும் கொட்டிக் கிடப்பதைக் காண்கிறோம். மறக்க முடியாத பாத்திரப் படைப்பு தஸ்தயேவ்ஸ்கி யின் கலை நேர்த்தியின் அடையாளமாகும். தஸ்தயேவ்ஸ்கியின் மனித சாசனமாகத் தன்

படைப்புகளைத் தந்திருக்கிற காரணத்தால் ஆன்டன் செகாவ், ஹெமிங்வே, நீட்ஷே, சார்த்தர், முதலிய அரிய படைப்பாளிகள் அவரை ஆதர்சமாகக் கொண்டிருந்தார்கள்.

இந்த நூல் "பாவப்பட்டவர்கள்" **1846**இல் வெளி வந்த "Poor People" என்ற நாவலின் மொழிபெயர்ப்பாகும். இதன் தனிச்சிறப்பு தஸ்தயேவ்ஸ்கியின் முதல் நாவல் இது என்பதும், அவருடைய பெயரை இலக்கிய உலகுக்கு அறிமுகம் செய்தது என்பதுமாகும்.

புதுமையான முறையில் இந்த நாவல் உருவாக்கம் பெற்றுள்ளது. வார்வரா அலெக்சி யேவ்னா என்ற ஏழைப் பெண்ணுக்கும் மகார் தேவுஸ்கின் என்ற எளிய மனிதருக்கும் இடையே மெல்ல மெல்ல அனுதாபம் பிறந்து காதலாக மாறுவதை அவர்களுடைய கடிதங்கள் புலப்படுத்து கின்றன. படிப்பறிவு போதாத காதலனின் கொச்சை மொழியும், சற்றே கற்ற காதலியின் திருந்திய மொழியும் கடிதங்களின் வழியே வெளிப்படு கின்றன. அதே சமயம் மொழி கடந்த காதல் ஒரு பூப்போல் விரிகிறது. ஆனால் அது சட்டெனத் தகர்ந்து போகிற அவலத்தோடு கடிதங்கள் முடிவடைகின்றன.

இந்த முதல் நாவலைத் தேடியெடுத்துத் தம் அனுபவம் செறிந்த கரங்களால் கவிஞர் புவியரசு அருமையாக மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார். அவருக்கு அருட்செல்வர் மொழிபெயர்ப்பு மையம் மிகுந்த நன்றி பாராட்டுகிறது.

மொழிபெயர்ப்பு மையம் தீவிரமாகச் செயல்பட உந்துதல் தந்து வரும் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம், துணைத்தலைவர் திரு. மா. ஹரிஹரசுதன் ஆகியோருக்கு மையம் நன்றி செலுத்துகிறது.

ஒருங்கிணைப்பாளர் பேராசிரியர் சி. இராமசாமி, ஆலோசகர் பேராசிரியர் ஆ.செந்தில் குமார், அலுவலகப் பொறுப்பாளர் திரு. வி. பாலசுப்ரமணியன் ஆகியோரைப் பாராட்டி மகிழ்கிறேன்.

பொள்ளாச்சி
**01.08.2015**

**சிற்பி பாலசுப்பிரமணியம்**
இயக்குநர்

“உணர்வின் உந்துதல்களுடன்
கண்ணீர்விட்டபடி இந்த நாவலை
நான் எழுதி முடித்தேன். இதை
எழுதியபோது நான் கடந்து சென்ற
கணங்களெல்லாம் வெறும் கற்பனையோ,
கானல் நீரோ, கபட உணர்வோ அல்ல.”

- *ஃபியோதர் தஸ்தயேவ்ஸ்கி*

அடச்சே, இந்தக் கதை சொல்லிகளை நினைத்தால் எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது. சகிக்க முடியவில்லை. ஏதாவது வளர்ச்சிக்கான, உற்சாகமூட்டும், மகிழ்ச்சி தரும் நல்ல விஷயங்களைச் சொல்வார்களா என்றால், ஆழக் குழி தோண்டி அழுக்குச் சேற்றை அள்ளியெடுத்து வெளியே போட்டு நாற அடிக்கிறார்கள். என்ன வெட்கக் கேடு! நீங்கள் வேறு அவற்றையெல்லாம் படித்துத் தொலைக்கிறீர்கள். அப்புறம் அந்தக் குழியில் விழுந்து விடுகிறீர்கள். அந்தக் குப்பை கூளங்கள் எல்லாம் உங்கள் மண்டைக்குள் ஏறிவிடுகின்றன. அதனால் - அவர்கள் எழுத்திற்குத் தடை விதிக்கப்போகிறேன்! ஆமாம், அவ்வாறெல்லாம் எழுதக் கூடா தென்று தடை விதிக்கவே போகிறேன்!

இளவரசர்
***- விளாதிமீர் ஃபியோதரவிச் ஒடேவ்ஸ்கி***

ஏப்ரல் 8

விலை மதிக்க முடியாத என்னருமை

வார்வரா அலெக்சியேவ்னா,

நேத்து நான் எவ்வளவு சந்தோசப்பட்டேன் தெரியுமா? அடடா என்ன ஆனந்தம் போ! நெனச்சிப் பாக்க முடியாத அளவுக்கு ஒரே ஆனந்தம்! அடி முரட்டுப் பெண்ணே, வாழ்க்கையில் ஒரே ஒரு தடவைதான் நான் சொன்னபடி நீ கேட்டிருக்கே.

நேத்து சாயந்திரம் சுமார் எட்டு மணி இருக்கும். நான் தூங்கி எந்திருச்சு ஒரு மெழுகுவர்த்தி பத்த வச்சேன். [வேல முடிஞ்சப்பறம் நான் கொஞ்சம் தூங்கி ஓய்வெடுப்பேன்கறது உனக்குத் தெரியுமே] காகிதங்களையெல்லாம் ஒழுங்கா அடுக்கி வெச்சிட்டு, இறகு பேனா முனையை சீவி சரி செஞ்சிட்டு, ஜன்னல் வழியா பாக்கறேன், எதிர் ஜன்னல்ல நீ!

என்னோட இருதயம் அப்படியே பொங்கி எந்திரிச்சு தாவிடுச்சு! எப்பிடியோ என்னோட ஆசய நீ புரிஞ்சுகிட்டெ. என்னோட சின்ன இருதயம் இதுக்குத்தானே ஆசப்பட்டுச்சு. உன் ஜன்னல் திரை ஒரு மூலையில் கீழ இறக்கி ஒரு பூத்தொட்டியில சொருகி வச்சிட்டே. நான் சொன்னபடியேதான்.

ஒரு இடைவெளியில சட்டுண்ணு உன் முகம் என்னெப் பாத்தது. நீயும் என்னெ நெனச்சுகிட்டுத்தான் இருந்திருக்கறே. ஆனா உன்னோட மூஞ்சியெ முழுசாப் பாக்க முடியலையே! எனக்கு ரொம்ப வருத்தம். அன்பானவளே, நாம ஒருத்தர ஒருத்தர் நல்லாப் பாத்துகிட்ட காலம் ஒண்ணு இருந்துச்சே. ஆனா, என்ன செய்யறது, எனக்கும் வயசாயிப் போச்சு. கண்ணு மங்கலாயிடுச்சு. எல்லாமே தெளிவில்லாமத்தான் தெரியிது. இப்பிடியே எழுதிகிட்டிருந்தா, காலைல கண்ணு செவந்துதான் போயிடும். நம்மையறியாமெ கண்ணுல இருந்து கண்ணீர் வடிஞ்சிட்டே இருக்கும். மத்தவங்க முன்னாடி நிக்கவே அவமானமாத்தான் இருக்கும்.

ஆனா, என் சின்ன தேவதையே, உன்னோட புன்சிரிப்பு என் கண் முன்னால அப்பிடியே நிக்கத்தான் செய்யிது. அது அன்பான நேசமான புன்சிரிப்பு. உனக்கு முத்தம் குடுத்தபோது எம்மனசு எப்படி பரவசப்பட்டதோ அப்படியேதான் இப்பவும்.

வரென்கா, என்னோட தேவைதையே, அது உனக்கு நெனப்பிருக்கா? இப்போதும் நீ விரலை வளைச்சு என்னெக் கூப்பிடற மாதிரிதான் தோணுது. குறும்புக்காரி, நீ அப்பிடிச்

செஞ்சியா? இத எல்லாம் உன்னோட கடுதாசியில விளக்கமா எழுதணும்.

என்னருமைப் பெண்ணே, எப்படியெல்லாம் நாம் யோசிக்கிறோம் பார்! இதுக்கெல்லாம் கடிதங்கள்கூடத் தேவையில்லெ. இது ஒரு தந்திரம்தானே! இதெல்லாம் என்னோட யோசனையாக்கும். இந்த மாதிரி விவகாரங்கள்ல நான் திறமைசாலி. என்ன நெனைக்கிறே, வார்வெரா அலெக்சியேவ்னா?

நேத்து ராத்திரி நான் நல்லாத் தூங்கினேன்கிறதெ உனக்குத் தெரிவிச்சிக்கிறேன். எதிர்பார்த்ததவிட நல்லபடியா. முன்னாடியெல்லாம் தூக்கமே வர்றதில்லே. என்னென்னவோ மனக்குழப்பம்.

இண்ணக்கிக் காத்தால புத்துணர்ச்சியோட உற்சாகமாவே முழிச்சிகிட்டேன். எவ்வளவு சந்தோசம் தெரியுமா? என்ன அழகான காலைநேரம் ஜன்னல் அகலமாத் திறந்தா எவ்வளவு வெளிச்சம்! இந்த வசந்த காலத்து வாசனையெ எல்லாம் வாரிகிட்டு வீசுது தென்றல் காத்து. இயற்கையே உயிர்த்துடிப்பா இருக்கு. எல்லாமே ஒரு ஒழுங்கா ஒத்திசைவா அமைஞ்ச மாதிரி.

இண்ணக்கிக் காத்தால எனக்கு ஒரு கனவுகூட வந்தது வரென்கா. என்னோட கனவுகள்ள எல்லாம் நீயேதான் வர்றே! உன்னெ ஒரு தேவலோகப் பறவைகூட ஒப்பிடறேன். மனிதருக்கெல்லாம் சந்தோசம் தரக்கூடியதாகவும், இயற்கையோட அலங்கார ஆபரணமாகவும் படைக்கப்பட்ட சொர்க்கப் பறவை அது. கஷ்ட நஷ்டங்கள்ல துன்பப்படற நமக்கெல்லாம் அத நெனச்சா பொறாமையாதான் இருக்கும். என்னமோ, பொருத்தமில்லாத உவமையைச் சொல்றனோ.

எனக்கொரு புத்தகம் கெடச்சுது. அதில இதுதான் இருந்துச்சு. விளக்கமான விவரம் இருந்தது. கனவுகள் பலவிதம். இல்லயா, அன்பே? இது வசந்தகாலம். அதனால, என் எண்ணங்கள் எல்லாமே சந்தோசமா, புத்தம் புதுசா, தெளிவா, இனிமையா இருக்கு. எல்லாமே இளஞ்சிவப்பு நிறத்தில! அதனாலதான் இதயெல்லாம் நான் எழுதறேன். இதெல்லாம் அந்தப் புத்தகத்தி லிருந்து எடுத்ததுதான். அந்த நூலாசிரியர் தம்மோட நோக்கத்தெத் தெளிவா கவிதை நடையில சொல்றாரு.

"நான் ஏன் ஒரு

பறவையாகக் கூடாது,

கொள்ளையடிக்கும்

பறவையாக?"

என்கிறாரு அவரு. இந்த மாதிரி வேற சிந்தனைகளும் அதுல உண்டு. இருக்கட்டும்!

இன்றைக்குக் காலைல நீ எங்க போய்ட்டு வந்தே வார்வெரா அலெக்சியேவ்னா? அவ்வளவு நேரத்தில நான் எந்திரிச்சு தயாராகக்கூட இல்லெ. ஆனா, நீ, வசந்தகால சிட்டுக் குருவி மாதிரி சிறகடிச்சு உன் அறையெவிட்டுப் போயி, அந்த முற்றத்தில எவ்வளவு அழகா நடந்துபோன! அதப்பாத்து நான் எவ்வளவு உற்சாகமடைஞ்சேன் தெரியுமா?

ஆ! வரென்கா, வரென்கா! நீ துக்கப்படவே கூடாது. கண்ணீர் சிந்தவே கூடாது. என்னால அதத் தாங்கிக்கவே முடியாது. தெரியுமா உனக்கு. அனுபவத்தினால சொல்றேன். இப்ப நீ அமைதியா இருக்க, இல்லையா? இப்படியே உன் உடம்பையும் பாத்துக்க. ஃபெடோரா எப்படி இருக்கா? என்ன அன்பான பெண்மணி! அவளப்பத்தி எழுது. அவகூட இருக்கறது சந்தோசமாத் தான இருக்கு? கொஞ்சம் முணுமுணுத்துக்கிட்டே இருப்பா. ஆனா அதயெல்லாம் கண்டுக்காதெ வரென்கா. இருந்திட்டுப் போகட்டும்! பாவம், அன்பான பெண்.

இங்க தெரிசாவப் பத்தி உனக்கு முன்னாடியே எழுதியிருக்கேன். நல்ல அன்பான பெண்மணிதான். அவங்க இல்லேண்ணா நம்ம கடுதாசி எல்லாம் எப்படித்தான் ஆகும். நமக்கிடையில தூதுபோக அவங்களெ ஆண்டவன்தான் அனுப்பி இருக்கார். அமைதியா இருப்பாங்க. வாய் பேசவே மாட்டங்க. ஆனா, எங்க வீட்டுக்கார எசமானி அம்மா இருக்காங்களே, ஈவிரக்கமே இல்லாதவங்க. தொளச்சி எடுத்திருவாங்க.

நான் இருக்கிற எடத்தப் பத்தி என்ன சொல்ல வார்வெரா அலெக்சியேவ்னா! அய்யோ, அத என் கேக்கறே! ஆனா, நான் ஒரு சாமியார் மாதிரிதான் இங்க வாழ்ந்திட்டிருக்கேன். எல்லாமே அமைதியாத்தான் இருக்கு. என்னோட ரூம்ல ஒரு ஈ பறந்தாக்கூட அதோட சத்தத்தக் கேக்கலாம். ஆனா, வீட்டுக்கார அம்மா போடற அதிகாரக் கூச்சல் இருக்கே, அத சகிச்சுக்கவே முடியாது.

இங்க, அமைப்பு எப்பிடி இருக்கு தெரியுமா. லாட்ஜ் மாதிரி வரிசையா ரூமுக. சின்ன குறுகலான நடைவழி. எதிர்ல பெரிய சுவர். எதையுமே பாக்க முடியாது. இடைவழி பூரா இருண்டு, அழுக்குப் புடிச்சிருக்கு. வரிசையா இருக்கற அறைகள்ள தனி ஆளுகளும் இருக்காங்க ரெண்டு மூணுபேர் சேந்தும் இருக்காங்க. ஒழுங்கே கெடையாது - நோவாவின் கப்பல் மாதிரி!

ஆனா, ஆளுக நல்லவங்கதான். படிச்சவங்க. ஒரு அறையில ஒரு அரசாங்க உத்தியோகஸ்தர் இருக்காங்க.

அவருக்கு எதோ இலக்கிய சம்பந்தமான வேலை. ஹோமர் எல்லாம் படிச்சவர். பெரிய ஆளுகளைப் பத்தியெல்லாம் சொல்லுவாங்க. ரொம்பப் புத்திசாலி. இந்தக் குடியிருப்பில ரெண்டு ஆபிசர்கூட இருக்காங்க. எப்பவும் சீட்டாடிக்கிட்டே இருப்பாங்க. பொறு இனிமேல எழுதப்போற கடிதத்தில இதையெல்லாம் விவரமாகச் சொல்றன். இப்ப வீட்டு எசமானி பத்தித்தான் சொல்லணும்.

அந்த அழுக்குக் கெழவி, பழைய செருப்பப் போட்டுக்கிட்டு தரக்தரக்குண்ணு இழுத்துகிட்டு, நாள் முழுசும் தெரிசாவெத் திட்டிக்கிட்டே இருப்பா. நான் சமையலறையிலதான் இருக்கேன்! சமையலறையைப் பிரிச்சு ஒரு தடுப்பு. அதுதான் என்னோட அறை. சமையல்கட்டு சுத்தமா வெளிச்சமாவே இருக்கும். எனக்கு ஒரு மூலை ஜன்னல் இருக்கு. ஆனா சமையற்கட்டுச் சத்தம் கேட்டுக்கிட்டே இருக்கும்.

ஆனா, மத்த குடியிருப்பு ஆட்களைவிட நான் தனியாதான் இருக்கேன். ஒரு சிறு படுக்கை ஒரு சிறு மேசை நாற்காலி எல்லாம் இருக்கு. ஒரு சிலுவைகூட தொங்கவிட்டிருக்கேன். நல்லாவே இருக்கு. இதவிட சவுகரியமா இருக்க சரிப்பட்டு வராது. இங்கிருந்து நீ போறது வர்றதெல்லாம் பாக்க முடியுமே! இது மலிவானதும்கூட.

இங்கெ ஒரு சின்ன அறைக்கு, முப்பதஞ்சு ரூபிள் நோட்டுக் குடுக்கணும். அது நம்மால முடியாது. இப்ப என்னோட வாடகை, ஏழு ரூபிள் நோட்டுகள், அஞ்சு வெள்ளி நாணய ரூபிள்களும். ஒட்டுமொத்தமாகப் பாத்தா இருவத்தி நாலு ரூபிள், அஞ்சு கொப்பெக். மொதல்ல முப்பத்தஞ்சுதான் குடுத்திட்டிருந்தேன். அதனால எத்தனையோ தேவைகளெத் தியாகம் பண்ண வேண்டி வந்தது. முதல்ல தேநீர் குடிக்க முடியலெ. இப்ப தேநீர், சக்கரைக் கெல்லாம் சேமிக்க முடியிது.

அன்பே, தேநீர் குடிக்காமெ இருக்கறது அவமானம் இல்லையா? இங்க மத்தவங்க வசதியானவங்க. மத்தவங்களுக் காச்சும் குடிக்கணும், இல்லயா வரென்கா? செலவுக்குக்கூட இப்ப கொஞ்சம் காசு மிஞ்சுது. அப்புறம், பூட்ஸ், கோட் செலவெல்லாம் இருக்கே. மொத்தச் சம்பளமும் சரியாப் போகுது. அதுக்கு மேல எதிர்பார்க்கக்கூடாது. திருப்தியாத்தான் இருக்கு.

இன்னும் கொஞ்ச காலத்துக்கு இது போதும். அப்பப்ப கொஞ்சம் போனசு கூடக் கெடைக்கும். சரி. விடைபெறுகிறேன் என் தேவதையே. கொஞ்சம் பூத்தொட்டிகள் மலிவு விலைக்கு வாங்கினேன். பால்சம், ஜிரேனியச் செடிகள். உனக்கு மிகோனெட் பிடிக்குமே. தேவப்பட்டா எழுது. விவரமா எழுது. என்னப் பத்தி, என் அறை வாடக பத்தி, என்ன சந்தேகம் இருந்தாலும் எழுது.

எதுவேணுமானாலும் வாங்கி அனுப்பறேன். வசப்பட்டதெ வாங்கி அனுப்புவேன். இந்த வசதிதான் என்னெ வளச்சிப் போடுது. அதாவது கொஞ்சம் காசு சேத்து வச்சிருக்கேன் கண்மணி. கவலப்படாதெ. நான் அமைதியாத்தான் இருக்கேன். ஒரு ஈ தன் சிறகால என்னெத் தாக்க முடியுமாங்கறதெப் பாக்கப் போறென் ஆமாம், அன்பே, நான் அப்படியேதான் இருக்கேன். உறுதியாத்தான் இருக்கேன்.

சரி. விடை பெறுகிறேன், என் தேவதையே ரெண்டு முழுநீளக் காகிதத்தில் எழுதியாச்சு. வேலைக்கு முன்னாடியே போயிருக்கணும். நேரமாச்சு. உன்னோட சின்ன விரல்களை முத்தமிடுகிறேன் என் அன்பே.

என்றும், உன்னுடைய பணிவான பணியாளும்,

நன்றியுள்ள நண்பனுமான,

மகார் தேவுஷ்கின்.

பி.கு:

ஒரு வேண்டுகோள். முடிஞ்ச வரெ விரிவாக விடை எழுது. இத்தோட ஒரு பவுண்டு இனிப்புகளை அனுப்பியிருக்கேன். வரென்கா நீ இதை உண்டு மகிழ்வாயாக! என்னப் பத்திக் கவலப்படாதே! என்மேல வெறுப்புக் காட்டாதே! சரி. அன்பே, விடை பெறுகிறேன்.

ஏப்ரல் 8

அன்பிற்குரிய அய்யா, மகார் அலெக்சியேவிச் அவர்களே!

கடைசியில் நான் உங்கள் பக்கம் சுத்தமாகச் சாயச் சம்மதித்துவிட்டேன் என்பது உங்களுக்குத் தெரியுமா? மகார் அலெக்சேவிச், நீங்கள் அன்புடன் அனுப்பும் பரிசுகளை ஏற்றுக் கொள்ளவே முடியவில்லை என்பதைச் சத்தியமாகச் சொல்கிறேன். எனக்குத் தெரியும் அவற்றின் விலை என்ன என்பதும், அதனால் உங்களுக்கு என்ன இழப்பு என்பதும், அதன் காரணமாக நீங்கள் என்னென்ன அடிப்படைத் தேவைகளை இழக்க நேரிடுகிறது என்பதும்.

எத்தனை தடவை சொல்லி விட்டேன். எனக்கு எதுவும் வேண்டாம், ஒன்றுமே தேவையில்லை என்று சொல்லியும், நீங்கள் என்மீது பொழியும் பரிசுகளுக்கு ஈடாக எதுவுமே என்னால் திருப்பிச் செலுத்த முடியாது.

எனக்கு எதற்கு பூத்தொட்டிகள்? பால்சம் சரி. ஜிரானியம் எதற்கு? ஒரே ஒருமுறை வாய்தவறி நான் சொல்லிவிட்டதற்காக ஜிரானியம் வாங்கி அனுப்பிவிட்டீர்களே! அது மிகவும் விலை அதிகம், இல்லையா? அடடா, இந்த மலர்கள்தாம் என்ன அழகு! செக்கச் செவேலென்று சின்னச் சிலுவைக் குறிகளுடன்! எங்கே கிடைத்தது இந்த அழகிய ஜிரானியம்?

அதைச் சாளரத்தின் நடுவில், நன்றாகப் பார்வையில் படும்படி வைத்திருக்கிறேன். மற்ற மலர்களை ஒரு பெஞ்சின்மேல் வைத்திருக்கிறேன். அதனால் நான் ஒரு செல்வச் சீமாட்டி ஆகிவிட்டேன். ஃபெடோராவுக்கு இதில் மிகுந்த மகிழ்ச்சி. தூய ஒளிமயமான சுவர்க்கமே எமது அறைக்குள் வந்துவிட்டதுபோல!

அப்புறம், இந்த இனிப்புகள் எல்லாம் எதற்காக? உங்கள் கடிதத்திலிருந்து சட்டென ஓர் உண்மை தெரிந்தது- உங்கள் சுவர்க்கம், இளவேனிற் பருவம், நறுமணம் தவழ்வது, பறவைகளின் கீச்சொலி - எல்லாமே சந்தேகத்திற்குரியவையாக எனக்குப் புலப்படுகின்றது. இங்கே இருப்பது போலத்தான் அங்கேயும். எந்தவிதமான கவித்துவ அம்சமும் இல்லை.

மகார் அலெக்சியேவிச், மென்மையான உணர்வுகளும், இளஞ்சிவப்புக் கனவுகளும் மட்டுமே அங்கிருக்கின்றன. இங்கே, சாளரத்திரை பற்றி நான் எதுவுமே திட்டமிடவில்லை. அது தானாகவே விலகி, தொட்டியில் செருகிக் கொண்டிருக்க வேண்டும். நான் தொட்டிகளை ஒழுங்கு படுத்தும்போது அது நேர்ந்திருக்க வேண்டும்!

ஆ! மகார் அலெக்சியேவிச் அவர்களே, உங்கள் வருவாய் என்னவாக இருந்தாலும் சரி, என்னை ஏமாற்ற, என்ன வரவு செலவு கணக்கு என்னிடம் சொன்னாலும் சரி, அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால், உங்களது ஊதியம் முழுவதையும் உங்களுக்காகவே செலவு செய்ய வேண்டும். இனி எதையும் என்னிடத்தில் மறைக்க முடியாது! எனக்காக நீங்கள் உங்கள் தேவைகளைக் குறைத்துக் கொள்ளக் கூடாது. உங்கள் அறை வாடகை, உங்கள் வசதிக் குறைவு, மற்றவர்களால் உங்களுக்கு ஏற்படும் அவமதிப்பு எல்லாம் எனக்குச் சரியாகப் படவில்லை.

உங்களுக்குத் தனிமை வேண்டும். அது அங்கே இல்லை. உங்கள் வருவாயைப் பார்க்கும்போது, நீங்கள் இன்னும் கொஞ்சம் வசதியாக இருக்கலாம். நீங்கள் முன்பு நன்றாக இருந்ததாக ஃபெடேரா சொன்னாள். வாழ்நாள் முழுவதும் இப்படியே வாழ்ந்து கொண்டிருக்க முடியுமா? தனிமை இல்லாமல், பற்றாக்குறை இல்லாமல், மகிழ்ச்சி இல்லாமல், நட்பு இல்லாமல், ஆதரவான ஒரு பேச்சுகூட இல்லாமல், அந்நியன் போல ஒரு மூலையில் ஒடுங்கி வாழ்வதா?

என் அன்பு நண்பரே, உங்களை நினைத்தால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. கொஞ்சம் உங்கள் உடல்மீதும் கருணை காட்டுங்கள். உங்கள் கண்கள் பலவீனப் பட்டுவிட்டதாகக் குறிப்பிட்டிருந்தீர்கள். அதனால், மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் எழுதாதீர்கள். ஏன் எழுதுகிறீர்கள்? உங்களது நிலைமை உமது மேலதிகாரிகளுக்குத் தெரியாதா என்ன!

மீண்டும் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன், எனக்காக அதிகம் செலவு செய்யாதீர்கள். நீங்கள் என்னை நேசிப்பது எனக்குத் தெரியும். ஆனால், நீங்கள் வசதியானவர் அல்லவே...

இன்று காலை, கண்விழித்தபோது இங்கே எல்லாம் உற்சாகமாகவே இருந்தது. ஃபெடோரா உழைத்துக் கொண்டு தான் இருக்கிறாள். இன்று எனக்குக் கொஞ்சம் வேலை வாங்கிக் கொண்டு வந்து தந்தாள். எனக்கு மிகவும் மகிழ்ச்சி. கொஞ்சம் பட்டுத் துணி வாங்கத்தான் வெளியில் போனேன். வாங்கி வந்ததும் வேலை ஆரம்பித்துவிட்டேன். இன்று காலைப்பொழுது முழுவதும் உற்சாகமாகவே கழிந்தது.

ஆனால், இப்போது இருண்ட நினைவுகள் என்னைப் பற்றிக் கொண்டுவிட்டன. சோகம் சூழ்ந்து கொண்டது. என் நெஞ்சம் தொடர்ந்து வலிக்க ஆரம்பித்துவிட்டது.

ஆ! இனி எனக்கு என்ன நேரப் போகிறது என் தலைவிதி தான் என்ன? எதுவே நிச்சயமாகப் புலப்படவில்லை. எனக்கு ஒரு

எதிர்காலமே இல்லையா? இனி என்ன வரப்போகிறது என்பதை என்னால் ஊகிக்கவே முடியவில்லை. பின்னோக்கித் திரும்பிப் பார்த்தால் பயமாக இருக்கிறது. எங்கும் துன்ப துயரங்களே காணப்படுகின்றன. என் இதயம் இரண்டாகக் கிழிக்கப்பட்டு விட்டது. அந்த மோசமான நினைவுகள் மட்டுமே மிச்சம். என்னைச் சிதைத்து நாசமாக்கிய கயவர்களின் நினைவுகள் மட்டுமே மிச்சம்.

இருட்டிக் கொண்டு வருகிறது. இனி வேலைகளை ஆரம்பிக்க வேண்டும். உங்களுக்குப் பல விஷயங்களை எழுதத்தான் ஆசை. ஆனால், குறிப்பிட்ட நாளுக்குள் வேலை முடித்துத் தர வேண்டி இருக்கிறது. அவசரம்தான். கடிதம் எழுதுவது நல்ல அம்சம்தான்.

ஆனால், எல்லாம் மந்தமாகவே இருக்கிறது. ஏன் நீங்கள் எங்களை வந்து பார்க்கக் கூடாது? மகார் அலெக்சியேவிச்? அப்படியொன்றும் தூரம்கூட இல்லையே. கொஞ்சம், நேரத்தை ஒதுக்கலாமே. தயவு செய்து வருகை தாருங்கள்.

உங்கள் தெரிசாவைத்தான் நான் பார்க்கிறேன். அவர்களுக்கு பாவம், உடல்நலமில்லை. எனக்கு வருத்தம்தான். இருபது கொப்பெக் கொடுத்தேன்.

ஆ, மறந்துபோனேனே, எல்லாவற்றையும் விளக்கமாக எழுதுங்கள். உங்களது அன்றாட வாழ்வை விரிவாகச் சொல்லுங்கள். உங்களைச் சுற்றியிருப்பவர்களுடன் நீங்கள் இணக்கமாக இருக்கிறீர்களா? எல்லாம் விரிவாக எழுதுங்கள். இன்று மாலை சாளரத் திரையை, நானே உயர்த்துகிறேன். சீக்கிரம் படுக்கப் போங்கள். நேற்று நள்ளிரவு வரை உங்கள் அறையில் வெளிச்சம் தெரிந்ததைக் கண்டேன். சரி. விடை பெறுகிறேன். இன்று சலிப்பும் சோகமும்தான். இப்படி அடிக்கடி ஏற்படுவதுதான்.

வணக்கம்.

உங்கள்

வார்வெரா துப்ரொசெலோவா

ஏப்ரல் 8

மேடம், வார்வெரா அலெக்சியேவ்னா,

ஆமா இனியவளே, ஆமா அன்பே, இப்பல்லாம் இந்த மாதிரி சோகம் வந்து புடிச்சிக்குது. என்னெ நீ கேலிகூட செய்யலாம் வார்வெரா, வயசாளிதானே! எல்லாமே என்னோட தப்புதான். ஆமா என்னோட தப்பேதான். சின்ன வயசில காதல் விளையாட்டுகள்ல ஈடுபட்டதால தலையில ஒரு சின்னக் கொத்து மயிர்தான் மிச்சம்!

இன்னொரு விஷயம். மனுசங்க வேடிக்கையானவங்க. எப்பிடியெல்லாம் ஔர்றாங்க பாரு. அப்பறம் அதத் தொடர்ந்து ஜாஸ்தி ஔரல். எனக்கு அதனால கோவம் ஒண்ணுங் கெடயாது. உனக்கு பைத்தியக்காரத்தனமா எழுதினதையெல்லாம் நெனச்சுப் பாத்தா, எல்லாமே குப்பைதான். கொஞ்சம்கூட அழகே இல்லாத மடத்தனம்தான்.

இண்ணக்கி நான் வேலைக்கிப் போனேன். நடந்தல்ல! குதிச்சுக் குதிச்சுப் போனேன்! மனசுல அப்பிடி ஒரு வெளிச்சம். உற்சாகம். அப்பறம் அங்கெ வேலயெ ஆரம்பிச்சேன். அப்பறம் பாத்த எல்லாம் அப்பிடி அப்பிடியே இருக்கு! சுத்தியும் சாம்பல் நிற மந்தமான இருட்டு.

அதே மேசை. அதே மைக்கறை. அதே காயிதங்க. அதே ஆளு! நாந்தான்! ஆமா, நானேதான். அப்படியே மாறாமெ! சிறகுகள் கொண்ட சொர்க்கக் குதிரை மேல ஏறிச் சுத்திச் சுத்தி வந்து என்ன பிரயோஜனம்? இதெல்லாம் எங்கிருந்து வந்திச்சு?

சூரியன் ஆகாசத்தில் இருந்து எட்டிப் பாத்தானா, ஒரே நீலமா மாறிட்டான்! ஏன் அப்பிடி? எங்க ஜன்னலுக்கு கீழ, முற்றத்தில ஏன் இவ்வளவு வாசனெ எனக்கு இப்படித் தோண்றதே என் முட்டாள் தனத்தினாலதான். சில பேருக்கு இப்படியெல்லாம் தோணும். சொந்த உணர்வுகள்ல ஆழ்ந்து போறப்ப இப்பிடியெல்லாம் மடத்தனமாத் தோணும்போல இருக்கு. வேற காரணமே இல்லை. எல்லாமே மனசோட மடத்தனந்தான்.

வீட்டுக்குத் திரும்பறபோது மெல்லத்தான் நடந்து வந்தேன். ஒரே தலவலி. ஒவ்வொண்ணா, ஒண்ணுக்குப் பின்னால ஒண்ணா வந்துகிட்டே இருக்கு. முதுகு ஜிவ்வுண்ணு இழுத்துக்குது. வசந்த காலம் வந்ததில சந்தோசத்தான். படுமுட்டாள் மாதிரி, கனமில்லாத லேசான கோட்டு போட்டுகிட்டு வெளில போயிட்டேன்.

என்னோட உணர்ச்சிகளப் பத்தித் தவறாப் புரிஞ்சுக்கிட்டெ அன்பே, அது பொங்கி வழியிறதெ தப்பாத்தான்

நெனச்சிட்டே. இது ஒரு அப்பா பாசம் அம்மா. சுத்தமான உண்மையான தந்தை பாசந்தான் வார்வெரா. உன்னோட உண்மையான அப்பா எடத்தெ நான் எடுத்துக்கிட்டேன்.

உன்னோட குழந்தெப் பருவம் எவ்வளவு கொடூரமா இருந்திருக்கு! அனாதயா எப்பிடியெல்லாம் தவிச்சிருக்கே! என் ஆத்மாவோட அடியாழத்தில இருந்து இதச் சொல்றேன். ஒரு சொந்தக்காரங்கற உரிமையில. எப்பிடிப் பாத்தாலும், உன்னோட சொந்தம்னு இருக்கற ஆளு நா மட்டுந்தான். உன்னோட பாதுகாவலனும் நாந்தான். உனக்கு ஆபத்து வந்தாலும், உன்னெ யாராச்சும் மோசஞ்செஞ்சாலும் உன்னோட பாதுகாப்புக்கு வரக்கூடிய ஆள் நான் ஒருத்தன்தானே.

கவிதையெப் பத்திச் சொன்னா, எனக்கு வயிசாயிடுச்சா, அதெல்லாம் வரமாட்டேங்குது. கவிதை ஒரு தாவர கோழி. அது பிடிபடாது. இந்தக் காலத்தில் பள்ளிக்கூடப் பசங்களெ கவிதை எழுதச் சொல்லி அடிக்கிறாங்க.... பாத்தியா.

வார்வெரா அலெக்சியேவ்னா, நீ எனக்கு வசதியப் பத்தியும், சமாதானத்தப் பத்தியும், இந்த மாதிரியான விஷயங்களைப் பத்தி ஏன் எழுதறே? எனக்கு எந்த ஆசையும் இல்லெ. இப்ப இருக்கற மாதிரி முன்னால நான் எப்பவும் இருந்ததில்லெ. நல்லாவே இருக்கேன். இந்த வயசான காலத்தில இதுக்கு மேல எதுக்கு? நல்லா சாப்பிடறேன். நல்ல துணிகளெ உடுத்திக்கிறேன். அப்பறம் எதுக்குப் பெருசு பெருசா யோசிக்கனும்? நாமென்ன பிரபு வம்ச ஆட்களா?

எங்க அப்பா பாத்த உத்யோகத்துனால எங்க குடும்பத்துக்கு எந்த மரியாதையும் கெடைக்கலெ. என்னெவிட கம்மியாத்தான் சம்பளம் வாங்கினாரு. நான் இதுக்கு முன்னாடி இன்னும் வசதியா இருந்தேன். கொஞ்சம் சுதந்திரமாக் கூட இருந்திச்சு. இப்பவும் மோசமில்லெ. சொல்லப் போனா உற்சாகமாகக்கூட இருக்கு? வித்தியாசமா இருக்கு.

குத்தம் சொல்றதுக்கு ஒண்ணும் இல்லெ. ஆனால், முன்னாடி தங்கியிருந்த எடம் இதுவிட வசதியாத்தான் இருந்துச்சு. என்னப் போல வயசாளிகளுக்கெல்லாம் பழைய விஷயங்கதாம் புடிக்கும்-எடம் சிறுசுதான். அந்தச் சுவருதான்.. சரி, என்ன சொல்றது! எல்லாச் சுவரும் சுவருதான் வேற என்ன?

ஆனா, கடந்த காலத்தெ நெனச்சா ஒரு சோர்வு வந்திருது. வேடிக்கைதான். இல்லயா? கொஞ்சம் கஷ்டந்தான். நல்ல நினைவுகளா இருந்தா சந்தோசம். சில சமயம் மோசமான அம்சங்களெச் சுத்தப்படுத்திட்டு நல்ல அம்சங்க மட்டும் கவர்ச்சியா வரும். எப்படீன்னா, இப்பிடி....

நான் இங்க அமைதியாகக் காலங்கழிக்கறேன். வீட்டு எசமானக் கெழவி செத்துப் போயிட்டா. அவளெ நெனச்சி நான் கவலப்படக்கூட செய்வேன். அவ நல்ல பொம்பளதான். வாடகை ரொம்பக் கம்மியாத்தான் வாங்கறா. எப்பவும் ஒரு துணியெ மடியில போட்டுக்கிட்டுப் பின்னிகிட்டே இருப்பா, நீளமா. எங்க ரெண்டு பேருக்கும் ஒரே வெளக்குதான். ஒரே மேசைதான். அவளுக்கு ஒரு பேத்திகூட இருக்கா. பேரு மாஷா- இவளக் கொழந்தையில இருந்து எனக்குத் தெரியும். இப்ப பதிமூணு வயசு. ரொம்ப சுறுசுறுப்பா உற்சாகமா இருப்பா. எங்களெ எப்பவும் சிரிக்க வெச்சுகிட்டே இருப்பா. இப்பிடி நாங்க மூணுபேரும் வாழ்ந்திட்டிருக்கோம்.

குளிர் காலத்தில வட்டமேசையெ சுத்தி உக்காந்திட்டு சூடா தேநீர் குடிப்போம். அப்பறம் வேலெ செய்வோம். மாஷா தப்பு செய்யவே மாட்டா. பாட்டி கத சொல்லுவா. அவங்க கத சொன்னா அறிவாளிகூட மயங்கிடுவான். சில சமயம் நான் என்னோட புகையிலக் குழாயெப் பத்த வெச்சுக்குவேன். வேலயக்கூட மறந்து கத கேப்பேன். மாஷா தன்னோட சிவந்த கன்னத்தில கை வெச்சுக்கிட்டு, வாயத் தொறந்தபடி கத கேப்பா. பாட்டிகூட ஒட்டிக்குவா. மெழுகுவர்த்தி உருகித் தீந்து போனதுகூடத் தெரியாது. வெளியில புயலடிக்கிறது தெரியாது, பனிக்காத்து சுழன்றடிக்கிறது தெரியாது.

எல்லாம் நல்லபடியாப் போயிட்டு இருக்கு. இருபது வருஷமா இப்பிடித்தான் எல்லாம் போயிட்டு இருக்கு. நான் இப்பிடி சுத்தி வளச்சிப் பேசறது உனக்குப் பிடிக்காது. எனக்கு இப்படியெல்லாம் நெனச்சுப் பாக்கறது சிரமந்தான். சரி அந்தி சாயற நேரம். தெரிசா என்னவோ சுறுசுறுப்பா செஞ்சுக்கிட்டிருக்கா. எனக்கு ஒரே தலவலி. முதுகு வலிக்கிறது. என்னமோ பழைய யோசனை. அதுவும் வலிக்கவே செய்யிது.

வாரென்கா, எனக்கு எழுது! நான் எப்பிடி உன்னெ வந்து பாக்கறது? பாக்கறவங்க என்ன நெனப்பாங்க? நான் அந்த முற்றத்தைக் கடந்து போறத இங்க இருக்கறவங்க பாத்திருவாங்களே. அப்பறம் கேள்வி கேப்பாங்களே. என்னென் னவோ அர்த்தம் எடுத்துக்குவாங்களே. அப்பறம் எங்கியும் ஒரே வதந்திதான்.

வேண்டாமம்மா. நாளைக்கி ராத்திரி கோவில் பிராத்தன சமயத்தில அங்க உன்னெ சந்திக்கிறேன். அதுதான் ரெண்டு பேருக்கும் நல்லது வருத்தப்படாதே இந்த மாதிரி எழுதறதுகூட எனக்குச் சங்கடமாத்தான் இருக்கு. எனக்கு வயசாயிடுச்சு வாரென்கா. படிப்பும் இல்லெ. சின்ன வயசில என்னெச் சரியாப் படிக்க வெக்கலை. இப்பப் படிக்க ஆரம்பிச்சா என்னோட மூளை ஏத்துக்கமாட்டேங்குது.

*எனக்கு விவரிச்சுச் சொல்ற தெறமையும் இல்லேங்கறதெ ஒத்துக்கறேன். மத்தவங்க யாரும் கேலி செஞ்சிடாத அளவுக்குக் கொஞ்சம் நாகரிகமா எழுத முயற்சி செய்யறேன். ஆனா கடைசில எல்லாம் மடத்தனமாத்தான் முடிஞ்சிருது.*

*நான் இண்ணிக்கு உன்னெ ஜன்னல்ல பாத்தேன். திரையை இறக்கினப்ப. சரி வணக்கம். ஆண்டவன் உனக்கு அருள் புரிவாராக. வணக்கம் வார்வெரா அலெக்சியேவ்னா.*

*உனது ஆர்வமில்லாத நண்பன்*

மகார் தேவுஷ்கின்.

*பி.கு:*

*யாரையும் நான் கேலி செய்யல. வயசாயிடுச்சு இல்லயாம்மா. வார்வெரா அலெக்சியேவ்னா, ஒரு ரஷ்யப் பழமொழி மாதிரிதான் ஆயிடுச்சு. 'வல விரிச்சவன் அந்த வலைலயே விழுவான்!'*

ஏப்ரல் 9

அன்பிற்குரிய அய்யா, மகார் அலெக்சியேவிச் அவர்களே,

என் நண்பரும், பாதுகாவலருமான மகார் அலெக்சியேவிச் அவர்களே, இவ்வாறு கவலைப்படுவதற்கும், சலனப்படுவதற்கும் உங்களுக்கு வெட்கமாக இல்லையா. நீங்கள் எனக்கு எதிராக எதையுமே எண்ணவில்லை. நான்தான் கவனக் குறைவாக இருந்துவிட்டேன். என்னுடைய மொழிகளைக் கேலி செய்வதாக நீங்கள் எடுத்துக் கொண்டு விட்டீர்கள். உங்களைப் போன்ற ஒரு வயசாளியிடம் அப்படி நான் கேலிசெய்து எழுதுவேனா? எல்லாம் என் அற்பத்தனத்தால் விளைந்தது. அல்லது என்னுடைய சலிப்புணர்வின் காரணமாகவோ உமது சலிப்புணர்வாலோ தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுவிட்டது. நீங்கள் வேடிக்கையை விரும்புகிறீர்கள் என்று நான் நினைத்துக் கொண்டு விட்டேன். நீங்கள் என்மீது சங்கடப்படுவது கண்டு நான் மிகவும் வருத்தப்படுகிறேன். என் நண்பரும், பாதுகாவலருமான அய்யா, நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். நல்லுணர்வும், நன்றியுணர்வும் இல்லாமலும் நான் இல்லை. நீங்கள் எனக்கு என்னவெல்லாம் செய்திருக்கிறீர்கள்! கயவர்களின் கொடுமைகளிலிருந்து என்னைக் காப்பாற்றியிருக்கிறீர்கள். உங்களுக்காக நான் எப்போதும் ஆண்டவரை வேண்டிக் கொள்வேன். என் பிரார்த்தனைகளை இறைவன் செவிமடுப்பார். பரலோகம் உங்கள் மீது அருள் மழை பொழியும். நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்கள்.

எனக்கு இன்று உடல்நிலை சரியில்லை. குளிர்காய்ச்சல். ஃபெடோரா என்னைப் பற்றி மிகவும் கவலை கொண்டிருக்கிறாள். நீங்கள் இங்கே வருகை தருவது பற்றி அவமானப்பட வேண்டியதே இல்லை. மற்றவர்கள் யார் இது பற்றிப் பேச. நீங்கள் எங்களோடு தொடர்பு கொண்டுள்ளவர். அவ்வளவுதானே...... மகார் அலெக்சியேவிச், விடை பெறுகிறேன். இனி எழுத எதுவும் இல்லை, இப்போதைக்கு. என்னால் தொடர முடியவில்லை. என்மீது சினம் கொள்ள வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். என்றென்றும் மரியாதையும், உறவும் நிரந்தரமாகக் கொண்டுள்ளேன்!

உங்கள் மீது மிகவும் பற்றும் மரியாதையும்
கொண்டிருப்பவளும், உமது அடக்கமுள்ள பணியாளுமான

வார்வெரா டொப்ரோசிலோவா

ஏப்ரல் 12

மேடம் வார்வரா அலெக்சியேவ்னா!

ஆ! என் அன்பானவளே, உனக்கு என்னதான் ஆச்சு? ஒவ்வொரு தடவையும் நீ என்னைப் பயமுறுத்தறெ. ஒவ்வொரு கடுதாசியிலும் நான் உன்னோட ஒடம்பப் பாத்துக்கச் சொல்லி எழுதிகிட்டேதான் இருக்கேன். குளிர்ல வெளில போகறப்ப கம்பளியப் போத்திக்கிட்டுப் போகணும். கவனமா இருக்க வேண்டாமா? என் சின்னத் தேவதையே, நான் சொல்றதெ நீ கேக்கறதே இல்ல. சின்னக் கொழந்த மாதிரி நடந்துக்கறயே. எவ்வளவு பலவீனமாக இருக்கே. ஒரு வக்கப் புல்லு மாதிரி. கொஞ்சம் குளிர் காத்தடிச்சாலும் தாங்க மாட்டேங்கறெ. அதனால, கவனமா இருக்கணும். ஒடம்பப் பாத்துக்க. ஆபத்து வராமெப் பாத்துக்க. உனக்கு வேண்டியவங்க உன்னெ நெனச்சி மனச் சோர்வும் கவலையும் பட்டிறக்கூடாது.

என்னோட அன்றாட வாழ்க்கை பத்தியும், என்னோட சுற்றுப்புறங்களப் பத்தியும் தெரிஞ்சுக்க விருப்பம் தெரிவிச்சிருக்கே. உடனே அதெ நிறவேத்தி வச்சிடறேன்.

அன்பே, அத, ஆரம்பத்திலிருந்தே ஆரம்பிக்கிறேன். ரொம்ப ஒழுங்கா சொல்லிடறேன். மொதல்ல முன்வாசல், அப்பறம் மேல போற படிக்கட்டு. எல்லாம் ஒழுங்காத்தான் இருக்கு. சுத்தமா, சுடரா, அகலமா, இரும்பும், தேக்கும் வச்சு செஞ்சது. அப்பறம், பின்பக்கம் இருக்கற சுழல் படிக்கட்டப் பத்திக் கேட்றாதெ. ஈரமா, அழுக்குப் புடிச்சு, ஒடஞ்சு, படிகள் பொளந்துபோயி, பாசம்புடிச்சு இருக்கு. சுவத்தில சாஞ்சா பிசுபிசுண்ணு ஒட்டிக்கும். மேலேபோனா எங்க பாத்தாலும், ஒடஞ்சு போன மேசை, நாக்காலி அலமாரி, செதறிக் கெடக்கும். அங்கங்க கந்தலான சாக்குப் பைகள் தொங்கிட்டிருக்கும். ஜன்னல்க எல்லாம் ஒடஞ்சு போய்தான் இருக்கு. எங்கயும் குப்பை கூளம் அழுக்கு, முட்டை ஓடுக, மீன் செதில்கதான். ஒரு கெட்ட வாசம் அடிச்சிகிட்டே இருக்கும். சுருக்கமா சொன்ன எதும் நல்லா இல்லெ.

முன்னாடியே எங்க அறைகளப் பத்தி எழுதியிருக்கேன். ஒண்ணும் தப்பு சொல்ல முடியாது. வசதியாத்தான் இருக்கு. நெசமாத்தான். கொஞ்சம் அடைப்பா, காத்தோட்டமில்லாமெதான் இருக்கு. ஆனா, வெளில மாதிரி நாத்தம் அடிக்காது. கொஞ்சமா வாசனெகூட இருக்கும். முதல்ல பாத்தா மோசமாத்தான் தெரியும். ஆனா போகப்போக எல்லாம் பழகிப் போயிடும். நீ இங்க வந்து ஒரு ரெண்டு நிமிஷம் இருந்தா, கெட்ட வாசனெ தெரியும். என்ன நம்ம ஒடம்பு நாறுதோ, உடைதான் நாறுதோ, கைதான் நாறுதோ

அப்படீண்ணு ஒரு சந்தேகம் வரும். ஆனா, கொஞ்ச நேரத்தில பழக்கமாயிடும். சிட்டுக்குருவி எல்லாம் இங்க தாக்குப் புடிக்காது. செத்துப் போயிரும். நடு அறைக்காரரு தரக் குறைவானதெ யெல்லாம் வாங்கி வந்து வளர்ப்பாரு. எல்லாம் செத்துப் போயிரும்.

எங்க சமயலறை பெருசா வெளிச்சமா இருக்கு. காலைல கொஞ்சம் பொகை இருக்கும். மீனு, மாட்டுக்கறி, எல்லாம் வறுப்பாங்க இல்லயா. அப்பொ கொஞ்சம் பொகை, மிச்சந் தொச்சம் கீழ சிந்திக் கெடக்கும். அவ்வளவுதான். மத்தபடி எல்லாம் நல்லாவே இருக்கும். சாயந்திரம் பாத்தா சொர்க்கம்தான். சமயலறைல மேல துணி காயப்போட்டிருப்பாங்க. என்னோட அறை அதை ஒட்டி இருக்கிறதனால, துணி வாசம் கொஞ்சம் சிரமமாத்தான் இருக்கும். ஆனா கொஞ்ச நாள் இங்க இருந்தாலே, எல்லாம் பழகிப் போயிரும்.

காலைல எல்லாம் பரபரப்பா இருக்கும். ஆளுக எந்திரிக்கவும் கதவுகளெத் தட்டவும், தெறக்கவும், சாத்தவும் ஒரே இரைச்சல்தான். எல்லாருக்கும் வேல இருக்கு இல்லயா? வெளிவேல, இல்லாட்டி சொந்தவேல. எல்லாரும் மொதல்ல செய்யற வேல தேநீர் வெக்கறதுதான். சமோவார் அடுப்புக எசமானி அம்மாளோடது. அவசர அவசரமா முந்திகிட்டு தேநீர் வெக்க முண்டியடிச்சுப் போவாங்க. மத்தவங்க காத்திருக்க வேண்டியது தான். நான் மொத ஆளா அடுப்பப் பத்த வெச்சிடுவேன்... சரி. இதெல்லாம் எதுக்கு எழுதணும். தெரிஞ்ச விஷயம்தானே.

நடுரூம்காரர்தான் எனக்கு மொதல் பரிச்சயமானாரு. வெளிப்படையான மனுசன். தன்னோட அப்பாவப் பத்தி, அம்மாவப் பத்தி, தங்கச்சி பத்தி, துலா மாவட்டத்தில் அவளெக் கல்யாணம் கட்டிக் குடுத்தது பத்தி, கிரான்ஸ்டாட் ஊரப் பத்தி எல்லாம் நெறய சொல்லியிருக்காரு. எனக்குப் பாதுகாப்பா இருக்கறதாகவும் வாக்களிச்சிருக்காரு. தன்னோட அறைக்கு அழைச்சு தேநீர் குடுத்தாரு.

ஒரு பொது அறையில எல்லாரும் சீட்டாடுவாங்க. அங்க போனப்ப தேநீர் குடுத்தாங்க, கூட உக்காந்து சீட்டாடச் சொன்னாங்க. என்னெ அவங்க கேலி செய்யறாங்களோண்ணு ஒரு சந்தேகம் எனக்கு. ராத்திரி பூரா வெளயாடிகிட்டே இருந்தாங்க. நான் போய்ப் பாத்தப்ப எல்லாம் ஆடிட்டே இருந்தாங்க. சீட்டுக்கட்டு, சாக்பீசுக, ஒரே பொகெ, எனக்குப் பிடிக்கலெ. நான் தத்துவார்த்தமா பேசி ஒதுங்கிட்டேன். அப்பறம் யாரும் எங்கிட்ட எதுவும் பேசலெ. அதனால எனக்கு சந்தோசம்தான்.

அதுக்கப்பறம் நான் அங்க போறதெ நிறுத்திட்டேன். அது சூதாட்டம், சுத்தமான சூதாட்டம்! இலக்கியம் சம்பந்தமா அரசாங்க வேல பாக்கற ஆளு பரவாயில்லெ. சாயந்திரம் நேரங்கள்லெ சந்திப்போம். நல்ல மனுசன். இனிமையான ஆளு. நாகரிமாகவும், சாமர்த்தியமாகவும் நடந்துக்குவாரு.

வாரென்கா, நான் சொன்னனில்லே, எங்க வீட்டுக்காரக் கெழவி மகா மோசமானவ. பிசாசு. தெரிசாவெப் பாத்திருப்பயே. எப்பிடி இருக்கா பாவம். அவ அப்பிடி ஆனதுக்கு இந்தக் கெழவிதான் காரணம். தெரிசா வியாதி வந்த கோழிக்குஞ்சு மாதிரி ஆயிட்டா. இந்த கட்டடத்துக்கு ரெண்டே வேலக்காரங்க. ஒண்ணு தெரிசா. மத்த ஆளு ஃபால்டம். கெழவியோட ஆம்பள வேலக்காரன். இது அவனோட சொந்தப் பேரோ என்னமோ. ஆனா அப்பிடிக் கூப்டாதான் வருவான். பாத்தா எஸ்டோனியன் மாதிரித் தெரியறான். ஒத்தக் கண்ணு. சப்ப மூக்கு ரொம்ப மொரட்டுத்தனம். எப்பவும் தெரிசாகூட சண்டெப் போட்டுக்கிட்டே இருப்பான். கைகலப்புகூட நடந்திருக்கு. சொல்லப்போனா இங்க இருக்கறது சங்கடமாத்தான் இருக்கு. தூங்கிட்டா இந்தச் சத்தம் சந்தடியெல்லாம் கேக்கவே வேண்டியதில்லெ. ஆனாத் தூக்கந்தான் வரமாட்டேங்குதே. என்னேரமும் சீட்டாட்ட சத்தம் வேறே. எனக்கு எப்பிடியோ எல்லாம் பழக்கமாயிடுச்சு.

குடும்பத்து ஆளுக எப்பிடித்தான் இதயெல்லாம் சகிச்சுக்கிறாங்களோ இங்க ஒரு குடும்பம்கூட இருக்கு. இந்த மூலை அறையில. பாவம் அமைதியான குடும்பம். இருக்கறதே தெரியாது. தடுக்கப்பட்ட சின்ன அறையில அவங்க எப்பிடியோ காலந்தள்ளறாங்க. அந்த ஆளு ஏதோ அரசாங்க வேலையில இருந்திருக்கணும். இப்ப வேல போச்சு. ஏழு வருசமா இப்பிடிக் கஷ்டப்படறாரு. அவரு பேரு கோர்ஸ்கோவ். தலெ நரச்ச அப்பாவி மனுசன். அழுக்குப் புடிச்ச கிழிஞ்ச சட்டயப் போட்டுகிட்டு வெளில போறதெ நான் பாத்திருக்கேன். பாக்கப் பரிதாபமா இக்கும். அவரோடு கை நடுங்கிட்டே இருக்கும்; மொழங்காலு நடுங்கும் என்னமோ வியாதி. யாரப் பாக்கவும் அவருக்கு பயம். யாராச்சு எதுக்க வந்தா ஒதுங்கிப் போயிடுவாரு. சம்சாரம், மூணு குழந்தைகளோட ரொம்ப கஷ்டப்படறது தெரியிது. மூத்த பையன் அப்பா மாதிரியே அவனும் நோயாளி. அந்தம்மா பாக்க சுமாரா இருப்பாங்க. எல்லாரும் கந்தல் உடைதான். வாடகை பாக்கிக்காகக் கெழவி கத்திகிட்டே இருப்பா.

அந்த ஆள்மேல ஏதோ வழக்கு நடந்திட்டிருக்கு. விசாரணை அது இதுண்ணு படாதபாடு படறாரு. தெய்வமே! என்ன பரிதாபம்! அவங்க அறை எப்பவுமே அமைதியா இருக்கும். ஆள் இருக்கறதே தெரியாது. ஒரு தடவை நான் அதக் கடந்து போகும்போது, ஏதோ

குசுகுசுப்புச் சத்தம் காதுல விழுந்தது. கட்டடமே அமைதியா இருந்த அந்த நேரத்தில அது நல்லாக் கேட்டது- அப்புறம் யாரோ விம்மி அழுகற மாதிரி கேட்டது. மறுபடியும் மெல்ல அழுகற சத்தம். பாவம்! என்னால தாங்கவே முடியலெ. அண்ணக்கி ராத்திரி எனக்குத் தூக்கமே வர்லே.

சரிம்மா. முடிச்சுக்கறேன். என்னருமை விலை மதிப்பில்லாத சின்னத்தோழி வாரென்கா, நீ கேட்டுகிட்ட மாதிரி எல்லாத்தையும் விளக்கமா எழுதிட்டேன். இன்றைக்குப் பூரா உன்னப் பத்தியேதான் நெனச்சுகிட்டு இருந்தேன். உன்னெ நெனச்சா எனக்கு ரொம்ப வருத்தமாத்தான் இருக்கு, வாரென்கா. உனக்கு நல்ல வெதுவெதுப்பு தர்ற மேல் கோட்டுகூட இல்லை. இந்த பீட்டர்ஸ்பர்க் நகரத்து வசந்தகாலம் எவ்வளவு மோசம். காத்தும் மழையும் பனியும் சேந்தடிக்கிது. ஆண்டவன் நம்மைக் காப்பாராக!

என்னோட எழுத்தப்பத்தி தப்பா எடுத்துக்காதே. அது அழகா இல்லதான். எனக்குப் படிப்பிருந்தா அழகா எழுதியிருப்பனே. எதோ மனசில தோண்றதெ அப்பிடியே எழுதிடறேன். உன்னெ உற்சாகப்படுத்தத்தான் நான் இந்த மாதிரி எழுதிகிட்டிருக்கேன். கொஞ்சம் பள்ளிக்கூடப் படிப்பு வாய்ச்சிருந்தா.....சரி இப்ப நெனச்சு என்ன செய்யறது?

உன்னோட நிரந்தர நன்றியுள்ள நண்பன்,

மகார் தேவுஷ்கின்.

25 ஏப்ரல்

அன்புள்ள அய்யா, மகார் அலெக்சியேவிச்,

என் உறவுக்காரப் பெண் ஷாஷா இன்று வந்திருந்தாள்! என்ன பயங்கரம்! பாவம், அப்பாவிப் பெண் அடியோடு நாசமாக்கப்பட்டு விட்டாள்!

அப்புறம் ஆன்னா ஃபியோதரோவ்னா பற்றியும் கேள்விப்பட்டேன். என்னைப் பற்றிய விவரங்களை விசாரிக்க ஆரம்பித்துவிட்டாளாம். என்னை மன்னிக்க விரும்புகிறாளாம். கடந்த காலத்தில் நடந்த எல்லாவற்றையும் மறந்துவிட்டு என்னை வந்து பார்க்க விரும்புகிறாளாம்.

நீங்கள் என் உறவுக்காரர் அல்லவாம். நம் குடும்ப உறவுகளுக்குள் பிரவேசிக்க உங்களுக்கு எந்த உரிமையும் இல்லையாம். உங்கள் பாதுகாப்பில், உங்கள் நிதி ஆதரவில் வாழ்வதற்கு நான் வெட்கப்பட வேண்டுமாம்....

நான் அவளது ஆதரவை மறந்துவிட்டேனாம். என்னையும், என் தாயாரையும் அவள்தான் சாகாமல் காப்பாற்றினாளாம். இரண்டரை ஆண்டுக்காலம் அவள்தான் எங்களுக்கு சாப்பாடு போட்டு வளர்த்தாளாம். நான் கடன் பட்டிருக்கிறேனாம்.

என் அம்மாவைக்கூட அவள் விட்டுவைக்கவில்லை. எனக்கு என்ன பாதகம் செய்தார்கள் என்பது என் அம்மாவுக்கு மட்டும் தெரிந்தால்...... அதற்கெல்லாம் ஆண்டவரே சாட்சி! எனக்கு வரப்போகும் அதிர்ஷ்டத்தை எவ்வாறு காப்பாற்றிக் கொள்வது என்பது எனக்குத் தெரியவில்லை என்கிறாள் ஆன்னா. நான் மடத்தனமாக நடந்து கொள்கிறேனாம். ஆன்னா, என்னை அந்த அதிர்ஷ்டத்தை நோக்கி அழைத்துப் போக முயல்கிறாளாம்.

எவ்வாறு கவுரவத்தோடு நிற்பது என்பதுகூட எனக்குத் தெரியாதாம். எனக்குக் கவுரவமாக வாழ்வதில் விருப்பமே இல்லையாம். இதற்கெல்லாம் யாரைக் குற்றம் சொல்ல. கடவுளே!

திருவாளர் பைகோவ்தான் எனக்குப் பொருத்தமான கணவராம். வேறு யாரையும் நான் மணந்து கொள்ளக்கூடாதாம்.... ஓ, இதையெல்லாம் எழுதி என்ன செய்ய? அந்த மாதிரிப் பொய்களைக் கேட்பது சித்ரவதையாக இருக்கிறது, மகார் அலெக்சியேவிச்!

எனக்கு என்னதான் நேர்ந்து கொண்டிருக்கிறதென்றே தெரியவில்லை. என் மனம் நடுங்குகிறது. கண்ணீர் வருகிறது. தேம்பித் தேம்பி இரண்டு மணிநேரம் அழுதபின்தான் இந்த மடலை

நான் எழுத ஆரம்பித்தேன். ஆன்னா, தான் செய்த பாவங்களை என்னிடம் முறையிடுவாள் என்றுதான் நினைத்திருந்தேன். ஆனால், பாருங்கள் எல்லாம் நேர்மாறாக இருக்கிறது!

அருள்கூர்ந்து எனக்காக கவலைப்பட வேண்டாம். எனது நலம் விரும்பியும் பாதுகாவலரும் தாங்கள்தான். ஃபெடோரா எல்லாவற்றையும் மிகைப்படுத்தித்தான் சொல்வாள். நான் உடல் நலம் குன்றி இருக்கவில்லை. நன்றாகவே இருக்கிறேன். கொஞ்சம் சளி பிடித்தது, அவ்வளவுதான்.

நேற்று நான் வால்கவோவ் கல்லறைத் தோட்டத்திற்குப் போயிருந்தேன். அம்மாவின் சமாதிக்கு வழிபாடு செய்ய. நீங்கள் ஏன் என்னுடன் வரவில்லை? உங்களை எவ்வளவு கெஞ்சினேன்!

ஆ! என் பாவப்பட்ட அப்பாவி அம்மா, நீ உன் கல்லறைக் குழியிலிருந்து மேலே எழுந்து வந்து, அந்தப் பாவிகள் என்னைப் பாடுபடுத்தினார்கள் என்பதை மட்டும் அறிந்தால்.....

வா.டொ.

20 மே

என் இனிய வாரென்கா,

உனக்குக் கொஞ்சம் திராச்சப் பழங்க அனுப்பியிருக்கேன். தாகத்துக்கு நல்லதுண்ணு சொன்னாங்க. மருத்துவரும் தாகத்துக்கு நல்லது அப்பிடீண்ணு பரிந்துரை பண்ணினாரு. நோயில படுத்திருந்து எந்திரிச்ச பெறகு ஒடம்பு தேற நல்லது திராச்சை.

உனக்கு ரோஜாண்ணா ரொம்பப் புடிக்குமே. அதனால கொஞ்சம் ரோஜாப் பூக்களெ நேத்து வாங்கி வெச்சிருந்தேன். இப்ப அனுப்பி வெச்சிருக்கேன்.

உனக்குப் பசி இருக்கா? நம்ம கஷ்ட காலத்துக்கெல்லாம் ஒரு விடிவுகாலம் வந்திருச்சு. அதுக்காக தெய்வத்துக்கு நன்றி சொல்லணும்!

புஸ்தகங்களப் பத்தி சொல்லப்போனா எங்க நல்ல புஸ்தகங்க கெடச்சாலும் ஒடனே வாங்கிடுவேன். ஒரு நல்ல புஸ்தகம் இருக்கு. நல்ல அழகான நடையில எழுதப்பட்டதா சொல்றாங்க. நாங்கூட படிச்சுப் பாத்தேன். எனக்காக ஒரு பிரதி வேணும்னு கேட்டேன். குடுக்கறதா சொல்லியிருக்காங்க. ஆனா உன்னோட பசியத் தீக்க முடியாது. அனுப்பறேன். படிச்சுப் பாக்கறயா?

உனக்குக் கவிதை ரொம்பப் புடிக்கும். சிந்தனை ஆழம் கொண்ட கவிதை, காதல் கவிதை- இப்பிடி நல்ல கவிதைகளெ ஒரு நோட்டுல காப்பி பண்ணி எழுதி வச்சிருக்கேன்.

நான் நல்லாத்தான் இருக்கேன். கவலப்படாதே. ஃபெடோரா என்னப் பத்தி உங்கிட்ட சொன்னெதெல்லாம் சுத்தப் பொய். இப்படியெல்லாம் பொய் சொல்லி வதந்தி பரப்பக்கூடாது அப்பிடீண்ணு நீ அவகிட்ட சொல்லி வை.

நான் என்னோட புது யூனிபார்மெ வித்திட்டதா சொல்லியிருக்கா. நான் அதெ எதுக்காக விக்கணும்? எனக்கு நாப்பது ரூபிள் போனசா வரப்போறதா சொல்லியிருக்காங்க. அப்படி இருக்கும்போது என்னோட உடுப்பை நான் எதுக்கு விக்கணும்? நீ கவலையே படாதெ. ஃபெடோரா ஒரு சந்தேகப் பேர்வழி. அவளெ 'சந்தேகப் ஃபெடோரா' ண்ணுதான் சொல்லணும்.

நம்ம வாழ்க்கை இப்பதான் ஆரம்பமாகுது கண்ணே. என் தேவதையே நீ சீக்கிரம் குணமடையணும். இந்த வயசாளியப் பத்திக் கவலப்படாமெ சீக்கிரமா குணமடையணும். நான் மெலிஞ்சு

போயிட்டதா உனக்கு ஆரு சொன்னது? வீண்பழி. ஆமா, மறுபடியிம் பழிபோடறாங்க. நான் நல்லா இருக்கேன். கொஞ்சம் ஒடம்புகூட போட்டிருச்சு! எனக்கே வெக்கமாத்தான் இருக்கு. நல்லா சாப்பிடறேன். ஆனா, மொதல்ல நீ குணமடையணும். சரி என் தேவதைக் கண்ணே, இத்தோட முடிச்சுக்கறேன். உன்னோட எல்லா விரல்களுக்கும் என் முத்தங்கள்.

உன்னோட நிரந்தர, மாறா நண்பன்,

மகார் தேவுஷ்கின்.

பி.கு:

என் அன்பே, எதுக்கு இப்படி என்னெ வரச்சொல்லி எழுதிகிட்டிருக்கே! அது எப்படி முடியும்? முடியுமாண்ணு கேக்கறேன். ராத்திரி இருட்டுண்ணா சரி. இப்பல்லாம் ராத்திரிகள்லே இருட்டறதே இல்லயே. இந்த மாசங்கள்லெ அப்படித்தானே இருக்கும். என் அன்புத் தேவதையே, நீ ஒடம்பு சரியில்லாமெ படுத்திருக்கிறப்ப நான் கூடவே இருந்தனே. அப்பறம்தானே வர்லே ஆளுக வீண் வதந்தி கௌப்பிடு வாங்களே. இப்பவே ஆரம்பிச்சிட்டாங்க. நான் தெரிசாவத் தான் நம்பியிருக்கேன். அவ வாயே தொறக்க மாட்டா. அது கெடக்குது. நீ உன்னோட ஒடம்பெக் கவனி. நம்மோட தொடர்பெ அவங்க தெரிஞ்சுகிட்டா உன்னோட நிலமெ என்ன ஆகறது? அதனால தைரியமா இருந்து குணமடைய ணும். அப்பறம் நாம ரெண்டுபேரும், வெளில எங்கியாவது ரகசியமாகச் சந்திச்சுக்குவோம்.

ஜூன் 1

அன்பு மிக்க மகார் அலெக்சியேவிச்!

நீங்கள் என்மீது கொண்டுள்ள நேசத்திற்கும் பாசத்திற்கும், எனக்காகச் செய்துவரும் உதவிகளுக்கும் எடுத்துவரும் முயற்சிகளுக்கும், கைம்மாறாக நீங்கள் மகிழும் வண்ணம் ஏதாவது செய்ய வேண்டும் என்பது என் எண்ணம்.

நான் சலித்துப் போயிருந்ததொரு வேளையில், எனது பழைய மேசை இழுப்பறைகளை எல்லாம் இழுத்துத் திறந்து சோதனைசெய்து கொண்டிருந்தேன். அப்போது ஒரு குறிப்பேடு அகப்பட்டது. நீங்கள் சிறிது காலமாக என்னுடைய பூர்வீகம் என்ன, என் கடந்த காலத்துன்ப அனுபவங்கள் என்னென்ன, ஆன்னா ஃபியாதரோவ்னாவுடன் வாழ்ந்திருந்த காலத்தில் என்ன நேர்ந்தது, என் அம்மாவுக்கு என்ன நேர்ந்தது என்பது பற்றியெல்லாம் அறிந்து ஆவலில் கேட்டிருந்தீர்கள். இவற்றிற்கெல்லாம் விடையளிக்கக் கூடிய இந்தக் குறிப்பேட்டை உங்களுக்கு அனுப்பி வைத்திருக்கிறேன். அதில் மகிழ்ச்சியும் அடைகிறேன். இது எழுதப்பட்ட காலத்தைவிட எனக்கு இப்போது இரு மடங்கு வயதாகிவிட்டது. சரி, மகார் அலெக்சியேவிச், எனக்கு இப்போதும் சலிப்பாகத்தான் இருக்கிறது. உறக்கமின்மையும் இப்போது என்னை பற்றிக் கொண்டுவிட்டது. என் உடல்நலம் மெல்லத்தான் முன்னேறி வருகிறது!

வா. டொ.

## 1

என் தந்தையார் காலமானபோது எனக்குப் பதினான்கு வயது. அந்தப் பருவம்தான் என் வாழ்க்கையின் ஆனந்தமான பருவம். அது இங்கே அல்ல. வெகுதூரத்திற்கு அப்பால் ஒரு கிராமத்தில் இருந்தது.

அப்போது என் தந்தையார் இளவரசர் அவர்களின் பண்ணை மாளிகையில் ஒரு மேலாளராக வேலை பார்த்து வந்தார். எங்கள் வாழ்க்கை ஆனந்தமயமாகவும், நிம்மதியாகவும் கழிந்த காலம் அது....

நான் துடிப்புள்ள சின்னப் பெண். நான் கிராமப்புறத்து வயல் வெளிகளிலும், மேடு பள்ளங்களிலும், தோட்டம் துரவுகளிலும், ஓடித்திரிந்த காலம். யாரும் எதுவும் என்னைக் கேட்க மாட்டார்கள்.

என் தந்தையார் தம்முடைய அன்றாடப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டிருப்பார். என் அம்மா தன் வீட்டு வேலைகளில் மூழ்கியிருப்பாள். எனக்குப் படிப்புச் சொல்லித்தர யாரும் இருக்கவில்லை. எனக்கும் அதில் சந்தோசம். காலையிலேயே நான் வெளியே ஓடிவிடுவேன். குளக்கரைக்கோ தோப்புக்கோ போய்விடுவேன். வைக்கோல் போர் குவிந்துள்ள இடத்திற்கோ, அறுவடை நடக்கும் பகுதிக்கோ ஓடிவிடுவேன். வெயில் அடிப்பதைப் பற்றிக் கவலைப்பட மாட்டேன். செடி கொடிப் புதர்கள் வழியாக ஓடும்போது, முட்கள் குத்தி என் ஆடைகள் கிழிந்து போகும். அதைக் கண்டு அம்மா திட்டுவார்கள். ஆனால், அதை நான் காதில் போட்டுக் கொள்ளவே மாட்டேன்.

அந்த வாழ்க்கை ஆனந்தமாக இருந்தது. அந்தக் கிராம வாழ்க்கையைவிட்டு வெளியேற எனக்கு விருப்பமே இல்லை. நான் அங்கேயே இருக்க விரும்பினேன். ஆனால், அந்த இளம் பருவத்திலேயே என்னை அங்கிருந்து கட்டாயமாக வெளியேற்றி விட்டார்கள்.

அந்த எளிய அழகான சிற்றூர் வாழ்க்கை எனக்கு மிகவும் பிடிந்திருந்தது. அந்தக் சூழலைவிட்டு நான் வெளியேற விரும்பவே இல்லை. என் வாழ்நாள் முழுவதும் நான் அங்கேயே வாழ்ந்துவிட விரும்பினேன். ஒரு சிறுமி என்றும் பார்க்காமல் என்னை அங்கிருந்து வெளியேற்றிவிட்டார்கள். எனக்கு அப்போது பன்னிரண்டு வயது.

நாங்கள் பீட்டர்ஸ்பர்க் நகரத்தில் குடியேற வேண்டும். அடடா, நாங்கள் இடம்பெயர என்னென்ன ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்தது! பரிதாபம்! நான் அழுதேன். நான் நேசித்த ஒவ்வொரு பொருளிடத்திலும் அழுது அழுது விடைபெற்றேன்.

நான் என் தந்தையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதேன். இன்னும் சில நாள்களாவது அங்கே தங்கிச் செல்ல அனுமதி வேண்டினேன். என் அப்பா சத்தம் போட்டார். அம்மா அழுதாள். வேறு வழியில்லை நாம் போய்த்தான் ஆக வேண்டும் என்று அம்மா சமாதானம் சொன்னாள்.

மூத்த இளவரசர் காலமாகிவிட்டார். அவருடைய வாரிசுகள் அப்பாவின் சேவை தேவையில்லை என்று அவரைப் பணியிலிருந்து நீக்கிவிட்டார்கள்! என் தந்தை நாம் சேமித்திருந்த சிறு தொகையை எதிலோ முதலீடு செய்திருந்தார். அவர்கள் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்தார்கள். அதனால் வாழ்வாதாரத்தின் தொகையைப் பெற அவர் நகரில் இருக்க வேண்டியிருந்தது. இதையெல்லாம் நான் பிற்காலத்தில்தான் தெரிந்து கொண்டேன். அம்மாதான் சொன்னாள். புறநகரில் எங்கள் வாழ்க்கை துவங்கியது. அப்பா காலமாகும் வரை நாங்கள் அங்கேயேதான் இருந்தோம்.

புதிய நகர வாழ்வோடு ஒத்துப் போவது எனக்கு மிகவும் சிரமமாக இருந்தது. நாங்கள் குடிபெயர்ந்தது இலையுதிர் காலத்தில். அந்த நாளில் பளிச்சென்று வெயில் அடித்தது. எல்லாம் வெதுவெதுப்பாகவும், பிரகாசமாகவும் இருந்தன.

அறுவடை முடித்திருந்த நேரம், கோதுமைப் பயிர்கள் எங்கும் குவிக்கப்பட்டிருந்தன. பறவைகள் தம் கரகரத்த குரல் எழுப்பியபடி மேலே வட்டமிட்டுக் கொண்டிருந்தன. எங்கும் உற்சாகமும் மகிழ்ச்சியும் நிறைந்திருந்தன. ஆனால், எங்கள் நகர்நோக்கிய பயணம் வேதனை தருவதாகவே அமைந்தது. ஊருக்குள் பிரவேசிக்கும்போது பனிமழை. எங்கும் ஈரம்; சேறு; குப்பை; நாற்றம்; கடும்குளிர். அறிமுகமில்லாத மனித முகங்கள், நேசமற்ற பார்வை; ஆதரவற்ற வெறுத்த மனோபாவம் கொண்ட மனிதர்கள்.

நாங்கள் நல்ல இடத்தில்தான் குடி அமர்ந்தோம். எல்லாரும் எதற்கோ சுறுசுறுப்பாக அலைந்து கொண்டிருந்தார்கள். புதிய வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். அப்பா எப்போதும் வெளியில்தான் அலைந்து கொண்டிருந்தார். அம்மாவுக்கு ஒருநிமிடம்கூட ஓய்வில்லை- அமைதியில்லை. என்னை என் பெற்றோர் அடியோடு மறந்துவிட்டார்கள். காலை முதல் இரவு வரை நான், வீட்டில் சோகத்தில் ஆழ்ந்திருந்தேன். முதல் நாள் இரவில் ஆரம்பித்த சோகம் அது. காலையில் கண்விழித்தபோது பற்றிக் கொண்ட சோகம் அது.

எங்கள் வீட்டுச் சாளரங்கள் வெளியே பார்த்தபடி அமைந்திருக்கின்றன. வெளியே ஒரு மஞ்சள் நிற வேலி. தெருவெல்லாம் குப்பைக் கூளம்; அழுக்கு. மனிதர் அந்தத் தெரு

வழியாக அரிதாகவே கடந்து போனார்கள். அவ்வாறு சென்றவர்களும் குளிருக்கு இறுக்கமாகப் போர்த்திக் கொண்டு தான் போனார்கள்.

வீட்டிலோ கவலையும், வெறுமையும் எப்போதும் கொட்டிக் கிடந்தன. எங்களுக்கு அங்கே உறவினர்களும் இல்லை; அக்கம்பக்கத்து நேசமும் இல்லை. என் தந்தையார் ஆன்னா ஃபியோதரோவ்னாவின் வலையில் வீழ்ந்துவிட்டார். [அவளிடம் அவர் கடன் வாங்கியிருந்தார்.]

வியாபார விஷயமாகத்தான் மக்கள் எங்கள் வீட்டிற்கு வந்துபோய்க் கொண்டிருந்தார்கள். வந்தவர்கள், வாதிடுவதும் வழக்காடுவதுமாக ஒரே இரைச்சல். ஒவ்வொருமுறை அப்பா வீடு திரும்பும்போதும், கோபமும் வெறுப்பும்தான் அவரிடம் காணப்பட்டன. அவர் ஒரு வார்த்தை பேசாமல் மூலைக்கு மூலை மணிக் கணக்கில் நடந்து கொண்டே இருப்பார், முகத்தைச் சுழித்தபடி. அம்மா அந்த வேளைகளில் அவருடன் பேச பயந்து வாயை மூடிக் கொள்வாள்.

நான், கையில் ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு ஒரு மூலையில் பேசாமல் அமர்ந்துவிடுவேன். அசைய மாட்டேன்.

பீட்டர்ஸ்பர்க் நகருக்கு வந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு என்னை, ஓர் உண்டு உறைவிடப் பள்ளியில் சேர்த்துவிட்டார்கள். எல்லாமே புதிதாக இருந்ததால் நான் பட்ட வேதனைக்கு அளவே இல்லை. எங்கும் மந்தமும், வறட்சியுமாகக் காணப்பட்டது. எங்கள் மேற்பார்வையாளரான பெண்மணி, எப்போதும் கத்திக் கொண்டே இருப்பாள். நாங்கள் அவளை ஏளனம் செய்து கொண்டே இருப்போம். நான் முரட்டுத்தனமாக மாறினேன். வாழ்க்கை அங்கே கடுமையும், கட்டுப்பாடுகளும் கொண்டதாக இருந்தது.

எல்லாமே அந்தந்த நேரப்படி நடந்தது. ஒன்றாகச் சேர்ந்தே சாப்பிட்டோம். ஆசிரியர்கள் சலிப்பூட்டினார்கள். ஆரம்ப காலத்தில் அங்கு எல்லாமே சித்திரவதையாக இருந்தது. என்னால் நிம்மதியாகத் தூங்க முடியவில்லை. இருண்டு குளிர்ந்த பனி இரவுகளில் நான் அழுதுகொண்டே படுத்துக் கிடந்தேன். மாலை வேளைகளில், மாணவிகள் அனைவரும் பாடங்களைப் படித்துக் கொண்டிருப்பார்கள்.

நான் பேசாமல் உட்கார்ந்திருப்பேன். எப்போதும் என் வீட்டின் நினைவுதான் எனக்கு. நான் அமர்ந்திருந்த எங்கள் வீட்டின் மூலை, என் அப்பா, அம்மா, கதை சொல்லும் பாட்டி நினைவுதான் என்னை வாட்டியது. வீட்டில் நடந்த சின்னச் சின்ன நிகழ்வுகள், சின்னச் சின்ன சந்தோசங்கள், என் நினைவில் வந்து கொண்டே இருந்தன. வீட்டில் இருந்தால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்!

சோமவார் அடுப்பைச் சுற்றி நாங்கள் அமர்ந்திருப்போம், எங்கள் வீட்டின் சிறிய அறையில் அது எவ்வளவு இனிமையான அனுபவம்! அம்மாவை நான் எவ்வளவு இறுக்கமாகக் கட்டிப் பிடித்துக் கொள்வேன்! நினைத்தால் கண்ணீர் பெருகுகிறது.

அந்த நினைவுகள் என் மனதில் அலையடிக்கும்போது, பாடம் எதுவும் மூளையில் பதியவே இல்லை. இரவெல்லாம் வீட்டுக் கனவுகள். அரைத்தூக்கத்தில் படித்தவை எல்லாம் காலையில் மறந்துபோகும். அப்புறம் வகுப்பறையில் முட்டிபோட வேண்டியது தான். உணவும் ஒருவேளை மட்டுமே, என்பது தண்டனை! நான் உற்சாகமிழந்தேன்; கவலையில் மூழ்கிக் கிடந்தேன்.

ஆரம்பத்தில் என் தோழிகள் அனைவரும் என்னைப் பார்த்துச் சிரித்தார்கள்; கேலி செய்தார்கள்; என்னை ஒதுக்கியும் வைத்தார்கள்; என்னைக் கிள்ளவும் செய்தார்கள். மேற்பார்வை யாளரிடம் கோள் வைத்தார்கள். நான் அவர்களுக்கு எந்தத் தீங்கும் செய்யவில்லை. அப்படியிருந்தும் காரணமே இல்லாமல் அவர்கள் என்னைத் துன்புறுத்தினார்கள்.

சனிக்கிழமைதோறும் என்னை அழைத்துப்போக என் பாட்டி அங்கே வருவாள். அடடா, அதுதான் சுவர்க்கம்! நான் அவளைக் கட்டிப் பிடித்துக் கொள்வேன். பத்து ஆண்டுகள் பிரிந்திருந்து கூடியதுபோன்று பேரானந்தம். அருகில் உள்ள அனைவரையும் தழுவிக் கொள்வேன்.

அப்புறம் என்ன, கதைகள்தான். நான் மகிழ்ச்சியால் கூச்சலிடுவேன்; ஆடுவேன்; பாடுவேன். எனக்குப் பாட்டி நல்ல ஆடைகளை அணிவிப்பாள். அப்பாவுடன்கூட தீவிரமாகப் பேசுவேன். அறிவியல் பற்றி, என் ஆசிரியர்களைப் பற்றி, பிரஞ்சு பாடம் பற்றி, இலக்கணப் பாடம் பற்றியெல்லாம் பேசுவேன். அதையெல்லாம் நினைத்துப் பார்க்கும்போது, இப்போதும் எனக்கு மகிழ்ச்சியும், உற்சாகமும் ஏற்படுகின்றன.

நான் நன்றாகப் படித்து அப்பாவை மகிழ்விக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். எனக்காக அவர் எல்லாவற்றையும் இழக்கச் சித்தமாக இருந்தார். பாவம், அவர் என்னவெல்லாம் பாடுபட்டார். நாளுக்கு நாள் அவருடைய போக்கு மாறிக் கொண்டே வந்தது.

அடிக்கடி அவருக்குக் கோபம் வந்தது. எப்போதும் ஏதோவொரு இருண்ட சிந்தனையில் மூழ்கியிருப்பார்; வெறுப்பாகத்தோன்றுவார். நாளுக்குநாள் அவரது நிலைமை மோசமாகியது. கடன் சுமை தாங்க முடியாத அளவுக்குப் பெருகிக் கொண்டே போனது.

அம்மா, அழக்கூடச் சக்தியவற்றவள் ஆனாள். ஏதாவது பேசினால், தந்தை கோபித்துக் கொள்வாரோ என்று எதுவும் சொல்லப் பயந்தாள். அவளது உடல் நிலையும் சீர்கெட்டது. மேலும் மேலும் மெலிந்து கொண்டே போனாள். ஒரு மோசமான இருமல் அவளைப் பற்றிக் கொண்டது.

நான் பள்ளியிலிருந்து வீடுவரும் வேளையில் எங்கும் சோகமான முகங்களே காட்சியளித்தன. அம்மா அமைதியாக அழுது கொண்டிருப்பார்; அப்பா கோபத்தால் கொதித்துக் கொண்டிருப்பார். கடிந்து கொள்ளுதலும், குற்றஞ்சாட்டுதலும் ஆரம்பமாகிவிடும். என்னால் எந்த மகிழ்ச்சியும், மனநிறைவும் தனக்குக் கிடைக்கவில்லை என்பார். என்னால்தான் எல்லாக் கஷ்டங்களும் என்பார். இன்னும் என்னால் பிரஞ்சு மொழி பேச முடியவில்லையே என்று குற்றஞ்சாட்டுவார். எல்லாத் தோல்வி களுக்கும், எல்ல இழப்புகளுக்கும், எல்லா துரதிர்ஷ்டங்களுக்கும் நானும், என் அம்மாவுமே காரணம் என்று ஏசுவார்.

அய்யோ, என் தாயை அவர் எப்படியெல்லாம் சித்திரவதை செய்தார்! அம்மாவைப் பார்க்கும்போது என் இதயம் நொறுங்கிப்போகும். அவள் கன்னங்கள் உட்குழிந்து போயின. கண்கள் உள்ளொடுங்கிப் போயின. முகம் வெளிரிப் போயிற்று. எவ்வளவு காலத்திற்கு அந்தத் துன்பங்கள் நீடிக்குமோ என நான் கவலைப்பட்டேன்.

நான் ஏன் குற்றஞ்சாட்டப்படுகிறேன் என்று எனக்கு விளங்கவில்லை. பிரஞ்சு மொழி அது எனக்கு வரவே இல்லை. என் பள்ளி உரிமையாளர் படுமுட்டாளாக இருந்தாள். அவளுக்கு எங்கள் ஒழுக்கம் பற்றிக் கவலையே இல்லை. அப்பாவுக்கும் ஒரு நல்ல நிலைமை ஏற்படவே இல்லை.

இலக்கணமோ படு மட்டரகமாக இருந்தது. எனக்காகச் செய்யப்பட்ட செலவோ அதிகம்தான். ஆனல், எல்லாமே வீண் விரயம். நான் உதவாக்கரையாகக் கருதப்பட்டேன். என்னால் எதையும் மனப்பாடம் செய்ய முடியவில்லை. எல்லாவற்றிற்கும் என்னையே குற்றம் சாட்டினார்கள்.

இதனால், என் தந்தை என்னை நேசிக்கவில்லையென்று அர்த்தமல்ல. என்னையும், அம்மாவையும் அவர் நேசிக்கவே செய்தார். அதுதான் உண்மை நிலைமை. அவர் அப்படித்தான்.

கவலைகள், ஏமாற்றங்கள், தோல்விகள் என் அப்பாவி அப்பாவைச் சித்திரவதை செய்தன, அவரால் சகிக்க முடியாத அளவிற்கு. அவர் நம்பிக்கை இழந்தவர் ஆனார், சகித்துக் கொள்ள முடியாதவர் ஆனார். தகர்ந்து போனார். தனது உடல் நலத்தை அவர்

கவனிக்கவே இல்லை. முதலில் சளி பிடித்தது; பிறகு படுத்த படுக்கை ஆனார். கொஞ்சகாலம்தான். சட்டென இறந்துவிட்டார்.

நாங்கள் அதிர்ச்சியில் உறைந்து போனோம். பல நாட்கள் நாங்கள் அதிலிருந்து மீளவே முடியாமல் கிடந்தோம். அம்மா உணர்ச்சியற்றவளாய் விறைத்துப் போனாள். அவள் மனநிலை என்ன ஆய்விடுமோ என்று பயந்தேன்.

அப்பா காலமானதும், கடன்காரர்கள் வந்து மொய்க்க ஆரம்பித்துவிட்டார்கள். இருந்ததெல்லாம் கொடுத்துக் கடனடைக்க முற்பட்டோம். குடிபெயர்ந்ததும் ஆறுமாதத்தில் அப்பா வாங்கிய சிறிய வீட்டை விற்றோம். எப்படியோ எல்லாக் கடன்களையும் அடைத்துத் தீர்த்தோம்.

கடைசியில் நாங்கள் தெருவில் நிற்கும் நிலை ஏற்பட்டது. தங்க ஒரு கூரை இல்லாக் கொடுமை. அம்மாவின் நோய் தீவிரமாகியது. சாப்பாட்டுக்கு வழியில்லை. அந்தத் திக்கற்ற நாள்களில்தான் நான் பதினான்காவது வயதை அடைந்தேன்.

அந்த நேரத்தில் வந்தவள்தான் ஆன்னா ஃபியாதரோவ்னா. தன்னை ஒரு நிலக்கிழார் என்று சொல்லிக் கொண்ட அவள், எங்கள் தூரத்துச் சொந்தம் என்றாள். அம்மாவும் அது அப்படித்தான் இருக்க வேண்டும் என்றாள். ஆனால் என் அப்பா உயிரோடிருந்த காலத்தில் ஒருநாளும் அவள் எங்களை வந்து பார்த்ததில்லை.

எங்கள் மீது மிகவும் அக்கறை கொண்டிருப்பதாகக் கண்களில் கண்ணீர் ததும்பச் சொன்னாள். எங்கள் இழப்பைப் பற்றிக் கவலை கொண்டது போலப் பேசினாள். எங்கள் எல்லா இழப்புகளுக்கும் என் தந்தையே காரணம் என்று குற்றம் சாட்டினாள்.

சக்திக்கு மீறி அவர் செயல்பட்டதாகவும், அதனால்தான் அந்த நிலை ஏற்பட்டதாகவும், தான் இனி எங்களைப் பாதுகாப்ப தாகவும் சொல்லி அம்மாவை தேவாலயத்திற்கு அழைத்துச் சென்றாள். அங்கே 'நல்ல மனிதர்' அப்பாவுக்காக பிரார்த்தனை நடந்தது. எப்படியோ பேசிப்பேசி அம்மாவைச் சரிகட்டி விட்டாள்.

அந்த நீண்ட அறிமுகங்கள், முன்னுரைகளைத் தொடர்ந்து ஓர் அழகான சித்திரத்தை வரைந்து விட்டாள் ஆன்னா. எங்களுடைய படுமோசமான நிலைமை, திக்கற்ற சூழல், நம்பிக்கையிழந்த நேரம், ஆதரவற்ற நிலை எல்லாவற்றையும் சுட்டிக்காட்டி எங்களுக்கு அடைக்கலம் தருவதாக ஆசைகாட்டி தனது இல்லத்திற்கு அழைத்தாள் அவள்.

எதுவும் யோசிக்க முடியாத நிலையில் இருந்த அம்மா அதற்குச் சம்மதித்து விட்டாள். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து

வாசில்யேவ்ஸ்கி தீவுக்குப் பயணமான அந்தக் காலைப் பொழுதை இன்னும் நான் மறக்கவில்லை. ஆன்னா மகிழ்ச்சியடைந்தாள். பனிச்சென்று, வறண்ட பனிப்படிந்த அந்தக் காலைப் பொழுதில் நாங்கள் புறப்பட்டபோது ஏதோ ஒரு பயங்கரமான நினைவும், கவலையும் என் மனதில் அலையடித்தது. மோசமான நேரம் அது.................

## 2

நானும் அம்மாவும் ஆன்னாவின் இடத்தில் குடியேற்றப்பட்டது, முதலில் எங்களுக்கு அந்நியமாகவும், அதிருப்தியாகவும் இருந்தது. ஆறாவது தெருவில் அந்த இல்லம் அமைந்திருந்தது. அங்கே ஐந்து நல்ல அறைகள் இருந்தன. மூன்றில் ஆன்னா இருந்தாள்.

தாய் தந்தையரை இழந்த அனாதையான என் உறவுச் சிறுமி ஷாஷா அங்கே இருந்தாள். எங்களுக்கென்று ஓர் அறை ஒதுக்கப்பட்டது. எங்கள் அறைக்கு அடுத்த கடைசி அறையில் ஏழை மாணவன் பொக்ரோவஸ்கி குடியிருந்தான்.

ஆன்னா ஆடம்பரமாக வசதியுடன் வாழ்ந்தாள். ஆனால், அவளுக்கு எங்கிருந்து அதற்கான வருவாய் வருகிறது என்பது மர்மமாக இருந்தது. அவளது நடைமுறைகளும் அப்படித்தான் இருந்தன. எப்போதும் பரபரப்பாகவே இருந்தாள். வெளியே போவதும் வருவதுமாக இருப்பாள். எல்லாம் எதற்கு என்பது விளங்கவே இல்லை.

பல தரப்பட்ட மனிதர்கள் அங்கே வந்து போனார்கள். எப்போதும் விருந்தினர் கூட்டம் இருந்துகொண்டே இருக்கும். அவர்களெல்லாம் யார் என்பது விளங்கவே இல்லை. ஏதோ வியாபார விஷயம்போல தோன்றியது. சிலர் வந்தவுடன் ஒரே நிமிடத்தில் போய்விடுவார்கள்!

வெளிவாயில் மணியடித்தால் போதும், உடனே அம்மா என்னை எங்கள் அறைக்கு இழுத்துப் போய்விடுவாள். அதைக் காணும் ஆன்னாவுக்கு அம்மாவின்மேல் கடுங்கோபம். எங்களைக் கர்வக்காரிகள் என்று கடிந்து கொள்வாள். மணிக் கணக்கில் எங்களை ஏசிக் கொண்டே இருப்பாள். அதில் என்ன கர்வம் இருக்கிறது என்பது எனக்கு விளங்கவில்லை.

எல்லாம் இப்போது விளங்குகிறது. அல்லது விளங்குவது போல் தோன்றுகிறது. அம்மாவுக்கு அவள் நடவடிக்கை சுத்தமாகப் பிடிக்கவில்லை. ஆன்னா ஒரு மோசமான பெண்மணி. எங்களைத் தொடர்ந்து சித்திரவதை செய்து கொண்டே இருந்தாள். எங்களை ஏன் தன்னோடு வசிக்க அவள் அழைத்து வந்தாள் என்பது

இன்றுவரை எனக்குப் புரியாத புதிர்தான்.

முதலில் அவள் எங்களிடம் பாசமாகத்தான் இருந்தாள். அப்புறம்தான் அவளுடைய உண்மையான குணம் தெரியவந்தது. எங்களுக்குப் போகுமிடம் எதுவும் இல்லை; நாங்கள் திக்கற்றவர்கள் என்பதை அவள் நன்றாகப் புரிந்து கொண்டாள். ஆனால் என்னிடம் மிகுந்த பாசங்காட்டிக் கொண்டுதான் இருந்தாள். என்னை அடிக்கடி புகழ்வாள். ஆனால், எங்களுக்கு அடைக்கலம் கொடுத்த பெருங்கருணையை அவள் சுட்டிக் காட்டிக் கொண்டே இருந்தாள்.

எங்களை மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தும்போதுதான் எங்கள் நிலை மிகவும் கூனிக் குறுகிப் போனது. நாங்கள் திக்கற்ற அனாதைகள் என்றும், தூரத்து உறவென்றும், ஒரு கிறிஸ்தவ நேசத்தால் எங்களுக்கு அடைக்கலம் தந்து காப்பாற்றி வருவதாகவும் சொல்லி எங்களை அவமதிப்பாள்.

நாங்கள் சாப்பிடும்போது, எங்கள் வாய்க்குள் செல்லும் ஒவ்வொரு கவளத்தையும் கூர்ந்து பார்த்துக் கொண்டே இருப்பாள். அதைக் கண்டு நாங்கள் சரியாகச் சாப்பிடாமல் எழுந்துவிட்டால் அதற்காகவும் எங்களுக்கு ஏச்சுப் பேச்சுதான்.

“உங்களுக்கு என்மேல் நன்றி விசுவாசமே இல்லை. உங்களுக்கு நான் எவ்வளவெல்லாம் செய்திருக்கிறேன். ஏன் என்மேல் இவ்வளவு வெறுப்புக் காட்டுகிறீர்கள்?” என்று கடிந்து கொள்வாள். அப்புறம் என் தந்தைமீது வசை பொழிவாள். மற்றவர்களைவிடத் தான் மேல் உயர வேண்டும் என்று அவர் பேராசைப் பட்டதுதான் அவரது வீழ்ச்சிக்குக் காரணம் என்றும்; அதனால்தான் எங்களைப் பிச்சைக்காரர்கள் ஆக்கிவிட்டுப் போய்விட்டதாகவும், தன்னைப் போலக் காருண்யம் மிக்க ஒரு கிறிஸ்தவ ஆத்மா கிடைக்காமல் போயிருந்தால், நாங்கள் பசியால் நடுத் தெருவில் கிடந்து செத்திருப்போம் என்றும் கடுஞ்சொல் பொழிவாள்.

அய்யோ, அவள் என்னவெல்லாம் சொல்வாள் எப்படியெல்லாம் சொல்வாள் தெரியுமா? உயிர்போவது போலிருக்கும். அந்தக் கசப்பைச் சகிக்க முடியாமல் அம்மா கண்ணீர் விடுவாள். அவளது உடல்நிலை நாளுக்கு நாள் மோசமடைந்து கொண்டு வந்தது.

என்றாலும் நாங்கள் காலை முதல் இரவு வரை கடுமையாக உழைத்துக் கொண்டிருந்தோம். தையல் பணிதான். எவ்வளவு செய்தாலும் ஆன்னாவுக்கு மன நிறைவு ஏற்படுவதில்லை. ‘இந்த வீடு என்ன அழகுக் காட்சி நிலையமா?’ என்று கண்டிப்பாள். நாங்கள் உடுத்த நல்ல உடை இல்லை. அப்புறம் எங்களுக்கும்

சொந்தச் செலவுகள் இருக்குமே. அதற்கும் போதுமான ஊதியம் இல்லை.

இருந்தாலும் சிக்கனம் பிடித்துக் கொஞ்சம் காசு சேர்த்துக் கொண்டு வந்தோம். எப்படியாவது அதைவிட்டு வெளியேறிவிட வேண்டும் என்று யோசித்துக் கொண்டிருந்தோம். அம்மா தன் சக்தியை எல்லாம் இழந்துபோனாள். நோய், அவளை, ஒரு புழுப்போல அரித்துத் தின்று கொண்டேஇருந்தது. அவளை அது சாவின் விளிம்புக்குக் கொண்டு வந்துவிட்டுவிட்டது. அந்தக் கொடுமைகளை எல்லாம், அந்த வேதனைகளை எல்லாம் என் கண்களால் பார்த்துக் கொண்டே இருந்தேன்!

ஒருநாள் போலவே எல்லா நாளும் ஓர் ஊரில் மக்கள் நடுவே வாழ்ந்திருப்பது போலவே இல்லை. ஒருவிதத் தனிமை. என்றாலும் நாங்கள் அமைதியாக வாழ்ந்து கொண்டுதான் இருந்தோம். ஆன்னா கொஞ்சம் கடுமை குறைந்தவள் போல காணப்பட்டாள். என்றாலும் மிகக் கவனமாகத் தனது அரசாட்சியைத் தக்க வைப்பதில் விழிப்போடு இருந்தாள். அவளோடு மாறுபட யாராலும் முடியவில்லை.

எங்கள் அறை தனியாக இருந்தது. பக்கத்து அறையில் மாணவர் பொக்ரோவ்ஸ்கி இருந்தார். அவர் ஷாஷாவுக்கு, பிரஞ்சு, ஜெர்மன், வரலாறு, நிலநூல், அறிவியல் பாடங்களையும் கற்பித்து வந்தார். அதற்கு ஊதியமாகத்தான் அவருக்கு அங்கே இடமளித்திருந்தாள் ஆன்னா ஃபியாதரோவ்னா.

ஷாஷா நல்ல புத்திக் கூர்மை கொண்டவள். விளையாட்டுப் பெண். குறும்புக்காரி. பதிமூன்று வயதிருக்கும். அவள் படிக்கும் போது நானும் அவளுடன் சேர்ந்து கொள்ளலாம் என்று அம்மாவிடம் ஆன்னா சொன்னாள். அம்மாவும் அதற்கு ஒத்துக் கொண்டாள். உண்டுறைப் பள்ளியில் நான் பாதியில் படிப்பை விட்டிருந்ததால் அம்மாவுக்கு அது சரியென்றே பட்டது. ஆகவே நான் ஷாஷாவுடன் சேர்ந்து கொண்டேன். .

மாணவர் பொக்ரோவ்ஸ்கி ஏழை இளைஞர். முழுநேரப் படிப்புக்குச் செல்ல அவரது உடல்நிலை ஒத்துவரவில்லை. ஒரு பழக்கம் காரணமாக அவரை நாங்கள் மாணவர் என்று குறிப்பிட்டோம். அவர் மிகவும் அமைதியானவர். சத்தமாகவே பேசமாட்டார். தோற்றம் ஒரு மாதிரியாகத்தான் இருக்கும். கூன் போட்டபடி ஆடி அசைந்துதான் நடப்பார். பேச்சும் ஒரு மாதிரி வித்தியாசமாகத்தான் இருக்கும். பார்த்தால் சிரிப்புத்தான் வரும்.

அவர் கோபக்காரர். சகிப்பின்மை கொண்டவர். அடிக்கடி கோபித்துக் கொண்டு எங்களைத் திட்டுவார், சில சமயம் எரிச்சலடைந்து பாதிப்பாடத்தில் சட்டென எழுந்து தன் அறைக்குப்

போய்விடுவார். தமது அறையில் நாள் கணக்கில் புத்தகங்களில் மூழ்கி விடுவார். அபூர்வமான புத்தகளைத் தேடிப் பிடித்து வந்து படிப்பார். வேறு எங்கோ பாடம் சொல்லிக் கொடுத்து சொற்ப ஊதியம் பெற்றுக் கொண்டிருந்தார் என்று தோன்றியது. காசு கைக்கு வந்தால் போதும், உடனே போய்ப் புதுப்புத்தகங்கள் வாங்கி வந்துவிடுவார்.

காலப்போக்கில் அவரை நான் நன்றாகப் புரிந்து கொண்டேன். அவர் அன்பானவர்தாம். மதிப்பு வாய்ந்த அறிவாளி. அவருக்குச் சிறந்த எதிர்காலம் இருப்பதாக எனக்குத் தோன்றியது. அம்மா, அவர்மீது மிகுந்த மரியாதை வைத்திருந்தாள். காலப் போக்கில், அவர் எனக்கு நெருங்கிய நண்பராக மாறினார். அம்மாவுக்குப் பிறகு என்மீது மிகுந்த அன்பு கொண்டவர் அவர்தான்.

நான் பெரிய பெண் என்ற நினைப்பில் ஷாஷாவுடன் சேர்ந்து கொண்டு எந்தக் குறும்பு செய்து அவரது பொறுமையைச் சோதிக்கலாம், அவரது கோபத்தைக் கிளறிவிட்டுப் பார்க்கலாம் என்று மணிக்கணக்கில் மண்டையைப் பிய்த்துக் கொண்டு யோசித்தேன்! அவர் பொறுமையை இழக்கும்போது அவர் நடந்து கொள்வது வேடிக்கையாக இருக்கும். அதை நினைக்க இப்போது எனக்கே அவமானமாகத்தான் இருக்கிறது.

ஏதோ ஒரு விஷயத்தில் அவரோடு விவாதித்து, அவரைக் கண்ணீர் விடும் அளவுக்கு கேலி செய்தபோது அவர், "கேடுகெட்ட குழந்தைகள்" என்று திட்டினார். அப்போது எனக்கு மிகவும் அவமானமாகப் போய்விட்டது. மிகவும் வருத்தப்பட்டேன். என் முகமெல்லாம் சிவந்துவிட்டது. எனக்கு அழுகையும் வந்துவிட்டது. நான் செய்த அற்பத்தனமான குறும்புச் செயலை மன்னிக்க வேண்டுமென்று கண்ணீருடன் வேண்டிக் கொண்டேன். அதனால் குலைந்து போய்விட வேண்டாமென்று கெஞ்சினேன்.

ஆனால், அவர் சட்டென்று புத்தகத்தை மூடினார். பாடத்தைப் பாதியில் விட்டுவிட்டுச் சட்டென்று எழுந்து தன் அறைக்குப் போய்விட்டார். எனக்கு அழுகை பெரிதாக வெடித்தது. அன்று நாள் முழுவதும் நான் அழுது கொண்டே இருந்தேன்.

அவரைக் கண்ணீர்விடச் செய்ததில், அவரை வேதனைப் படுத்தியதில் ஏற்பட்ட குற்ற உணர்ச்சியை என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவரைக் கண்ணீர்விடச் செய்வதுதான் எமது நோக்கமாக இருந்தது. அதனால் அப்படி நடந்து கொண்டோம். அவரை பொறுமை இழக்கச் செய்ததில் நாங்கள் வெற்றி கண்டோம். அதுவொரு வன்முறையாக அமைந்துவிட்டது. பரிதாபத்திற்குரிய ஏழை இளைஞர் அவர்.

நான் இரவெல்லாம் விழித்திருந்தபடி வருத்தப்பட்டுக் கண்ணீர் சிந்தியபடிக் கிடந்தேன். 'மனம் வருந்ததுதல் ஆத்மாவுக்கு ஆறுதல் தரும்' என்பார்கள். எனக்குத் தெரியவில்லை. எனது துயரத்தோடு என் கர்வமும் கலந்திருக்க வேண்டும். என்னைச் சிறுமியாக அவர் பார்ப்பது எனக்குப் பிடிக்கவில்லை. எனக்குத்தான் பதினைந்து வயது ஆகிவிட்டதே!

அன்று நான் செய்த குறும்பால் அவர் பட்ட மன வேதனையைப் போக்க ஆயிரம் வழிகளைச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். ஆனால், ஒருவித கோழைத்தனமும், நாணமும் என்னைச் செயலில் இறங்கவிடாமல் தடுத்துக் கொண்டே இருந்தன. அந்த வழிமுறைகள் எல்லாம் அப்படியே கற்பனையோடு நின்றுவிட்டன. [அடடா, என்னவெல்லாம் திட்டமிட்டேன் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்!] அப்புறம் அந்தமாதிரி குறும்புகள் செய்ய ஷாஷாவுடன் நான் சேர்ந்து கொள்ள மறுத்துவிட்டேன். அவர் மெல்ல சினம் தணிந்து சமநிலைக்கு வந்தார். என்றாலும் என் கர்வம் அதனால் நிறைவடையவில்லை.

நான் சந்திக்க நேர்ந்த, அபூர்வமான மிகவும் ஆச்சரியமான, மிகவும் பரிதாபத்திற்குரிய ஒரு மனிதரைப் பற்றிச் சில வார்த்தைகளை இங்கே சொல்ல விரும்புகிறேன். ஆரம்பத்தில் அவரை நான் சரியாகக் கவனிக்கவில்லை - கவனிக்க ஆரம்பித்த வுடனே பொக்ரோவ்ஸ்கி சம்பந்தப்பட்ட எல்லாமே முக்கியத்துவம் பெற ஆரம்பித்துவிட்டன!

ஒரு சின்ன மனிதர் எமது இல்லத்திற்குள் பிரவேசித்தார். அவர், அழுக்குப் பிடித்தபடி, மோசமாக உடையணிந்தபடி, தலை நரைத்தபடி, கூன் முதுகு போட்டபடி, அருவருப்பான தோற்றத்தில் காணப்பட்டார். அவர் எதற்கோ அவமானப்பட்டவர்போல கூனிக்குறுகித்தான் வந்தார். அந்த அவமான உணர்வு அவர் முகத்தில் தெரிந்தது. ஒரு சிதைந்த உருவம்தான் அது. ஆனால் மனம் நிலையாக இருப்பதுபோல் ஒரு பார்வை.

கண்ணாடிக் கதவுகளுக்கு வெளியே வாசலில் அவர் நின்று கொண்டிருப்பார்; உள்ளே நுழையத் துணிவில்லாதவராக. நானோ, ஷாஷாவோ அல்லது பணியாளோ இந்தப் பக்கம் வர நேர்ந்தால், அவர் பல விதமான சைகைகளைச் செய்வார். நாங்கள் இரக்கம் கொண்டு கதவு திறந்தால், தமது இரண்டு கைகளையும் தேய்த்துக் கொண்டு, மிகுந்த மன மகிழ்ச்சியுடன், ஓசைப்படாமல் அடிமேல் அடிவைத்து விரைந்து உள்ளே போய் பொக்கரோவின் அறைக்குள் புகுந்து கொள்வார். அவர்தான் பொக்ரோவ்ஸ்கியின் தந்தை!

பிற்காலத்தில் அந்தப் பரிதாபத்திற்குரிய மனிதரைப் பற்றி நான் விளக்கமாகத் தெரிந்து கொண்டேன். அவர் ஏதோ ஓர் அரசுப் பணியில்தான் இருந்திருக்கிறார். எந்தத் திறமையும் இல்லாத கடைநிலை ஊழியராகத்தான் வேலை பார்த்திருக்கிறார். அவரது முதல் மனைவி [பொக்ரோவ்ஸ்கியின் தாய்] இறந்த பின் மறுமணம் செய்ய முடிவெடுத்திருக்கிறார். வந்தவள் ஒரு சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்தவள்தான். அவள் வந்தவுடன் வீட்டில் எல்லாம் தலைகீழாக மாறிவிட்டன. எல்லாரையும் தன் காலடியில் கிடக்கச் செய்துவிட்டாள் அவள். அப்போது பொக்ரோவ்ஸ்கி பத்துவயதுப் பாலகன். அவள் இவரை வெறுத்தாள்.

ஆனால், இவருக்கு ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. பைகோவ் என்ற நிலக்கிழார் பொக்ரோவ்ஸ்கியை ஆதரிக்க முடிவெடுத்து அவரின் பாதுகாவலராகி, இவரை ஒரு பள்ளியில் சேர்த்துவிட்டார். அவருக்கு இவருடைய அம்மாவைச் சிறுவயதிலிருந்தே தெரியும்.

நிலக்கிழார் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததால், வரதட்சணையாக ஆன்னாவுக்கு ஐந்தாயிரம் ரூபிள் கொடுத்திருக்கிறார். அந்தப் பணம் எங்கே போயிற்று என்றே தெரியவில்லை. இதெல்லாம் ஆன்னா சொன்ன விவரங்கள்தான். பொக்ரோவ்ஸ்கி தன் வாழ்வைப் பற்றியெல்லாம் வாயே திறக்க மாட்டார். அவருடைய அம்மா மிக அழகாக இருப்பார்கள் என்று மட்டும் சொல்லியிருக்கிறார். அப்படிப்பட்டவள் எப்படி இவர் அப்பாவை மணந்து கொண்டாள் என்பது விளங்கவே இல்லை. திருமணமாகி நான்கு வருடம் ஆன பிறகு இறந்திருக்கிறாள் அந்த இளம் வயதுத் தாய்.

பொக்ரோவ்ஸ்கி, உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடித்துப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து விட்டார். நிலக்கிழார் அடிக்கடி பீட்டர்ஸ்பர்க் நகருக்கு வந்து பார்த்துச் சென்றிருக்கிறார். தம்முடைய உதவியை அவர் தொடர்ந்து செய்து வந்திருக்கிறார்.

ஆனால் இவரது உடல்நிலை சீர்கெட்டது. பையன் படிப்புக் கெட்டுவிடக் கூடாதே என்று ஆன்னாவிடம் கொண்டு வந்து சேர்த்துவிட்டார். ஷாஷாவுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில்தான் இவரை ஆன்னா உள்ளே சேர்க்கச் சம்மதித்திருக்கிறாள்!

இரண்டாவது மனைவியின் கொடுமை தாங்க முடியாமல் சிதைந்துபோன பொக்ரோவ்ஸ்கியின் தந்தை தீய பழக்கங்களில் வீழ்ந்தார்; குடியில் மூழ்கினார். அவள் அவரை அடித்திருக்கிறாள். சமையற்கட்டிலேயே கிடக்கும்படியாகத் தள்ளிவிட்டிருக்கிறாள்.

அப்புறம் அந்த அவமானம் அவருக்குப் பழக்கமாகிவிட்டது. அவர் அதைப் பற்றி எந்தக் குற்றச்சாட்டையும் வெளிப்படுத்தவே இல்லை.

அவருக்கு ஒன்றும் அதிக வயதாகிவிடவில்லை. என்றாலும் அவர் உடலத்தையும், மனவலிமையையும் இழந்து விட்டிருந்தார். எல்லாத் திறமைகளும் அவரைக் கைவிட்டுப் போய்விட்டன. அவரிடம் மிஞ்சியிருந்தது மகன்மேல் கொண்டிருந்த அளவற்ற பாசம் மட்டுமே. அது ஒன்றுதான் அவரிடம் காணப்பட்ட மனிதத்தன்மை!

இளமைவியல் காலமான ஒரு தாயின் 'எச்சில் வடிவம்' என்று இளம் பொக்ரோவ்ஸ்கியைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள்! தகர்ந்துபோன அந்த மனிதருக்குள் பிரவகித்த பிள்ளைமேற் காதல், இழந்த மனைவியின் மீது வைத்திருந்த அவருடைய பேரன்பின் பெருக்குத்தானே?

தன் பிள்ளையைப் பற்றித் தவிர அவர் வேறெதையுமே பேசுவதில்லை. வாரத்திற்கு இரண்டுமுறை மகனைப் பார்க்க ஓடோடி வந்துவிடுவார். அதற்குமேல் வந்தால் மகனுக்குப் பிடிக்காது என்பதால்தான் இரண்டு தடவையோடு நிறுத்திக் கொண்டார்.

பொக்ரோவ்ஸ்கியின் குறைபாடு, அவர் தம் தந்தையிடம் காட்டிய மரியாதைக் குறைவுதான். அந்தப் பெரியவரும் சகிக்க முடியாதபடிதான் நடந்து கொண்டார். அர்த்தமில்லாமல் உளறுவதும், மகன் வேலை செய்வதைத் தடுப்பதும், எப்போதும் போதையில் இருப்பதும் சகித்துக் கொள்ள முடியாத விவகாரம் தான். அவருடைய குடியைக் குறைக்கச் செய்ய பெருமுயற்சி செய்து அதில் ஓரளவு வெற்றியும் கண்டார் பொக்ரோவ்ஸ்கி. தன் அனுமதியில்லாமல் ஒரு வார்த்தை பேசக்கூடாது என்று உத்தரவும் இட்டிருந்தார்.

தன்னுடைய பாசத்தை மகனிடம் பொழிய முடியாமல் தவித்தார் தந்தை. மகனைப் பார்க்கப் போகும்போது தன்னை அவன் எப்படி வரவேற்பான் என்ற குழப்பம்தான் தந்தைக்கு. தைரியத்தை வரவழைத்துக் கொண்டுதான் அவர் புறப்படுவார். வாயிலில் எங்களிடம் மகனைப் பற்றி விசாரித்துவிட்டுத்தான் வீட்டிற்குள் நுழைவார். மகன் ஏதாவது முக்கியமான காரியத்தில் ஈடுபட்டிருக்கிறானா, நல்ல மனநிலையில்தான் இருக்கிறானா, என்றெல்லாம் ஒரு இருபது நிமிடம் விளக்கமாக விசாரித்துவிட்டுத்தான் அவர் உள்ளே மெல்ல பிரவேசிப்பார்!

கதவைத் திறப்பார். தலையை மட்டும் உள்ளே நீட்டுவார். பையன் கோபப்படாமல் பார்க்கிறானா, உள்ளே வரும்படித் தலையசைக்கிறானா என்று பார்த்துவிட்டு மெதுவாக உள்ளே

நுழைவார். தனது பொத்தல்கள் விழுந்த மேல் கோட்டையும், விளிம்பு கிழிந்த தொப்பியையும் எடுத்து மெல்லக் கொக்கியில் மாட்டிவிட்டு, சத்தமில்லாமல் மெதுவாக நாற்காலியில் அமர்ந்து கொள்வார். அவர் பார்வை மட்டும் மகனை விட்டு விலகாது.

மகன் தனது வருகையை ஏற்கிறானா என்று எதிர்பார்த்தபடி அப்படியே காத்திருப்பார். மகன் பார்வை தன் பக்கம் திரும்பினால் உடனே நாற்காலியை விட்டு எழுந்து, "இப்போது தான் வந்தேன். ஒரு நிமிடந்தான் ஆயிற்று. நான் இந்த வழியாகப் போய்க் கொண்டிருந்தேனா, சட்டென்று உன் நினைவு வந்தது. கொஞ்சம் பார்த்து விட்டுப் போகலாம் என்று……" என்று பவ்வியமாகச் சொல்லிவிட்டு தனது பெரிய கோட்டையும், தொப்பியையும் எடுத்துக் கொண்டு அறையை விட்டு விரைவாக வெளியேறிவிடுவார்! தமது உள்ளே கொந்தளிக்கும் வேதனை வெளியே தன் மகனுக்குத் தெரியாதபடிக்கு அவர் முகத்தில் ஒரு புன்முறுவல் பூத்திருக்கும்!

மகன் மகிழ்ச்சியோடு வரவேற்றாலே பெரியவர் பரவசமடைந்துவிடுவார். அவரது முகம் பிரகாசமடைந்துவிடும். அவரது உடலசைவுகள், கை கால் அசைவுகள் எல்லாமே அந்தப் பரவசத்தைக் காட்டும். மகன் ஒரு வார்த்தை பேசிவிட்டாலோ சட்டென இருக்கையை விட்டு எழுந்து மிகவும் பணிவுடன் மறுமொழி சொல்வார். வார்த்தைகள் தேடி எடுத்துச் சொல்வது போலிருக்கும். ஆனால் அவருக்கு அப்படியெல்லாம் பேசத் தெரியாது. பேச்சில் ஒரு குழப்பமும், தடுமாற்றமும் இருக்கும். பேசும்போது ஒரு வெட்கம் வந்துவிடும். கைகளை எப்படி வைத்துக் கொள்ள வேண்டும் என்று தடுமாறுவதுபோல் தோன்றும். பேச்சில் அளவு கடந்த மரியாதை வந்துவிடும். திருத்தமாகச் சொல்ல வேண்டும் என்ற ஆவலில், பேச்சு கிசு கிசுப்பாக மாறிவிடும்!

சரியாகப் பேசிவிட்டார் என்றால் உடனே ஒரு பெருமிதம் வந்துவிடும். கழுத்துப் பட்டையைச் சரிசெய்து கொள்வார். தலை நிமிர்ந்தபடி, உள்கோட்டை ஒழுங்குபடுத்தியபடி, ஒருவிதக் கர்வத்தோடு மகனைப் பார்ப்பார்! சில சமயம் உற்சாகம் கொண்டு தைரியமாய் நாற்காலியை விட்டு எழுந்து, புத்தக அலமாரிப் பக்கம் நகர்ந்து, கைக்கெட்டிய ஏதோ புத்தகத்தை எடுத்து, விரித்துப் படிப்பதுபோல நின்று கொள்வார். அவையெல்லாம் ஒருவித உள்ளார்ந்த அச்சத்தால் விளைபவை.

தன் புதல்வன் அறையில் எப்போது வேண்டுமானாலும், எதையும் எடுத்துத் தன்னால் வாசிக்க முடியும் என்ற தோரணையில் இருக்கும் அவரது செயல்!

ஆனால், ஒருதடவை நான் பார்த்தபோது நடந்தது வேறொன்று. பொக்ரோவ்ஸ்கி சட்டெனத் தன் கையிலிருந்த புத்தகத்தைப் பிடுங்கிக் கொண்டு "இனிமேல் இப்படியெல்லாம் புத்தகத்தை எடுக்கக் கூடாது", என்று எச்சரிக்க, அவர் வெட்கமும் குழப்பமும் அடைந்து தடுமாறிப் போனார். எடுத்த புத்தகத்தைத் தலைகீழாக அலமாரியில் வைத்தார். செய்த குற்றத்திற்கு என்ன பரிகாரம் செய்வது என்று தெரியாமல் திகைத்தபடி நின்றிருந்தார்.

பொக்ரோவ்ஸ்கி தன் தந்தையின் பழக்க வழக்கங்களை மாற்ற மெல்ல மெல்லத் தொடர்ந்து முயற்சி செய்தார். சில சமயம் அவர் மேல் பரிதாபப்பட்டு இருபத்தைந்து கொப்பெக்குகளையோ, ஐம்பது கொப்பெக்குகளையோ கொடுப்பது வழக்கம். சில சமயம், காலணிகளோ, மேல்கோட்டோ, கழுத்துப்பட்டையோ வாங்கி வைத்திருந்து கொடுப்பதும் உண்டு.

அப்போது, அவருடைய பெருமிதத்தைப் பார்க்க வேண்டுமே. சில சமயம் பெரியவர் போகும்போது எங்களைப் பார்க்க வருவதுண்டு. ஷாஷாவுக்கு ஏதாவது வாங்கிக் கொண்டு வந்து கொடுப்பார். எனக்கும்தான். இஞ்சி ரொட்டியோ, ஆப்பிள் களோ, வேறு தின்பண்டங்களோ கொடுப்பார். தமது புதல்வரைப் பற்றிக் கொஞ்ச நேரம் எங்களுடன் பேசிக் கொண்டிருந்துவிட்டுச் செல்வார். தம் மகன் படித்தவன்; அறிவாளி என்றெல்லாம் பெருமைப்பட்டுக் கொள்வார். கவனமாகப் படிக்கும்படி எங்களை வேண்டிக் கொள்வார்.

அவர் வேடிக்கையாகக் கண் சிமிட்டியபடிப் பேசுவது எங்களுக்குச் சிரிப்பாக இருக்கும். அம்மாவுக்கு அவர்மீது மிகவும் அன்பு. பெரியவருக்கோ ஆன்னா என்றால் வெறுப்பு. ஆனால், அவளுக்கு முன்னால், எலிக்குஞ்சுபோலக் குறுகிப் போய் விடுவார்.

பொக்ரோவ்ஸ்கியிடம் படிப்பது நின்றுபோய்விட்டது. இன்னும் அவர் எங்களை விளையாட்டுச் சிறுமிகளாகவேதான் நினைத்துக் கொண்டிருந்தார். அது எங்களை மிகவும் காயப்படுத்தியது. நான் முன்பு செய்த குறும்பு காரணமாக ஏற்பட்ட அவரது சினத்தைச் சரிக்கட்ட முயன்று கொண்டிருந்தேன். அதனால் அவரது அலட்சியத்தை நான் அவ்வளவாகக் கண்டு கொள்ளவில்லை. அவரும் என்னை அலட்சியம் செய்வதுபோலவே தோன்றியது. இது எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது.

வெளியில் அவரிடம் நான் பேசவே மாட்டேன். என்னால் சரளமாக அவரிடம் பேச முடியவில்லை என்பதுதான் உண்மை. அவரது புறக்கணிப்பால், நான் குழப்பமடைந்து, ஏதாவது ஒரு மூலையில் அமர்ந்து கண்ணீர் விடுவேன்!

இதெல்லாம் எப்படிப்போய் முடியுமோ, எதில் முடியுமோ, எங்களை எது ஒன்று சேர்க்குமோ என்பது தெரியாமல் நான் தவித்துக் கொண்டிருந்தேன்.

ஒருநாள் என் தாய், ஆன்னாவுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தபோது, நான் ஓசைப்படாமல் பொக்கரோவ்ஸ்கியின் அறைக்குள் நுழைந்தேன். அவர் அங்கே இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால், எதற்காக அவரது அறைக்குள் நுழைந்தேன் என்பது எனக்குத் தெரியவில்லை.

அவர் பக்கத்தறையில்தான் வாழ்ந்து வருகிறார் என்றாலும் அவரது அறைக்குள் நாங்கள் தலை காட்டியதே இல்லை, கடந்த ஓராண்டுக் காலமாக. என் இதயம் 'திக்திக்' கென அடித்துக் கொண்டது. அது எங்கே வெளியே வந்து விழுந்துவிடுமோ என்ற அளவுக்கு ஆவலோடு நான் அறைக்குள் ஒரு நோட்டம் விட்டேன். அறை பரிதாபமாக இருந்தது. எல்லாம் தாறுமாறாக சிதறிக் கிடந்தன. ஐந்து மரப்புத்தக அலமாரிகள் சுவரோடு சேர்த்துப் பதிக்கப்பட்டிருந்தன. காகிதங்கள் மேசை மீதும் நாற்காலிகள் மீதும் இறைந்து கிடந்தன. எனக்கொரு யோசனை வந்தது. இருந்தாலும் ஏதோ ஓர் உள்ளுணர்வு என்னைச் செயல்படுத்தாமல் தடுத்தது.

என் அன்பு அவருக்கு எந்த விதத்திலும் அவரது நிலைமைக்கு ஒத்துப் போகாது என்று தோன்றியது. அவர் எவ்வளவு படித்தவர்! நானோ அடி முட்டாள். படிக்காதவள். ஒன்றும் தெரியாதவள். ஒரு புத்தகத்தைக் கூடப் படிக்காதவள்...

அந்த ஷெல்புகளில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங் களின் பாரத்தால் தாங்கு பலகைகள் வளைந்திருந்தன. புத்தகங் களைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பொறாமையாக இருந்தது. அவற்றை எல்லாம் ஒன்றுகூட விடாமல் உடனே படித்துத் தீர்த்துவிட வேண்டும் என்ற துடிப்பும், தவிப்பும், வெறியும் எனக்குள் பொங்கி எழுந்தது.

அப்போதுதான், அவர் அறிந்ததெல்லாம் அறிந்து கொண்டுவிட்டால்தான் அவரோடு நட்புக் கொள்வது சாத்தியம் என்று தோன்றிற்று. ஆனால், கொஞ்சம்கூட யோசிக்காமல், முதல் அலமாரியில் இருந்த புழுதிபடிந்த ஒரு புத்தகத்தைச் சட்டென உருவினேன்.

என்முகம் சிவக்க, அச்சத்தால் உடனே என்முகம் வெளுக்க அதை எடுத்துக் கொண்டு எங்கள் அறைக்கு ஓடினேன். அம்மா உறங்கிய பிறகு அதைப் படித்துப் பார்க்கலாம் என்று ஒளித்து வைக்க நினைத்தேன்.

ஆனால், என் அறைக்குப் போனதும் ஆவல் மிகுதியால் அவசரமாக அதைத் திறந்தேன். அடடா! என்ன ஏமாற்றம்! அது புழு அரித்த புத்தகம். ஏடுகளில் பல பகுதிகள் அரிக்கப்பட்டிருந்தன. மேலும் அது பழைய லத்தீன் மொழிப் புத்தகம். அதை உடனே இருந்த இடத்தில் திருப்பி வைத்துவிட வேண்டுமென்று அவரது அறைக்கு ஓடினேன். எடுத்த இடத்தில் அதைச் செருகி வைக்க முயற்சித்தபோது பின்னால் ஏதோ அரவம் கேட்டது. அவசர அவசரமாக அதை இருந்த இடத்தில் திணிக்க முற்பட்டபோது, அங்கே நெருக்கியடித்துக் கொண்ட தோழர்கள், தமது பழைய தோழனுக்கு இடம் கொடுக்காமல் முரண்டு பிடிக்க, நான் திணிக்க, தாங்கு பலகையின் ஒரு பக்கம் ஆணி கழன்று சரிய, தடாலென்று அந்த வரிசைப் புத்தகங்கள் எல்லாம் தரையில் விழுந்தன!

அதே சமயத்தில் கதவு திறந்தது! பொக்ரோவ்ஸ்கி உள்ளே வந்தார்!

அவருடைய சாம்ராஜ்ஜியத்தில் மற்றவர் பிரவேசிப்பதை அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவர் புத்தகங்களைத் தொட்டவர்க்குத் துன்பம்தான் நேரிடும்! சின்னதும் பெரியதுமான பலவகைத் தடிமன் புத்தகங்கள் தரையில் சிதறவே நான் கதிகலங்கிப் போனேன். தரையிலும், மேசைக்கடியிலும், நாற்காலிகளுக்கு இடையிலும் அறையெல்லாம் சிதறிப் பரவிக் கிடந்தன அவை.

"ஓ, எல்லாம் முடிந்தது. நான் தொலைந்தேன். பத்துவயதுச் சிறுமியைப் போல நடந்து கொண்டுவிட்டேனே! நான் முட்டாள்; படுமுட்டாள்!" என்று தவித்தபடி செய்வதறியாமல் திகைத்துப்போய் நின்றிருந்தேன். அவருக்கோ எக்கச்சக்கமான கோபம்!

"ஆமாம். இதெல்லாம் எனக்குத் தேவைதான்! இப்படிச் செய்ய உனக்கு வெட்கமாக இல்லையா? போய்த்தொலை!" என்று சொல்லிவிட்டுக் குனிந்து புத்தகங்களைப் பொறுக்க ஆரம்பித்தார்.

அவருக்கு உதவ நானும் புத்தகங்களை எடுக்கக் குனிந்தேன். உடனே அவர், "பரவாயில்லை விடு!" என்று கோபக் குரலில் சொல்லிவிட்டு, "அழையாத இடத்திற்கெல்லாம் போவது நல்லதல்ல" என்றார். நான் பேசாமல் குற்றவுணர்வோடு நிற்கவே அவர் சற்றே சாந்தமடைந்தார். என்னுடைய ஆசிரியர் என்ற நிலையில் அறிவுரை கூற ஆரம்பித்தார்.

"எப்போது நீ வளர்ந்த பெண்ணாக, புத்திசாலியாக நடந்து கொள்ளப் போகிறாய்? உன்னையே நீ பார்! நீ என்ன இன்னும் குழந்தையா? உனக்குப் பதினைந்து வயது ஆகிவிட்டது உனக்குத் தெரியவில்லையா?" என்றார் புத்தகங்களை அடுக்கியபடியே.

அப்புறம் அவர் என்னை நேராகப் பார்த்தார். அவருக்கே வெட்கம் வந்துவிட்டது. எனக்கு அது விளங்கவில்லை. அவரைப் பார்த்தபடி நான் அங்கே நின்று கொண்டிருந்தேன். எனக்குத் திகைப்புத்தான். குனிந்து புத்தகம் எடுத்துக் கொண்டிருந்தவர், எழுந்தார். என்னருகே வந்தார். அவரிடம் ஒருவிதக் குழப்பம் காணப்பட்டது. ஏதோ வருத்தம் தெரிவிக்க முயல்வது போல, என்னை அப்போதுதான் முழுசாகப் பார்ப்பவர் போல.....

அப்போதுதான் எனக்கு சட்டெனப் புரிந்தது. உடனே இரண்டு கைகளாலும் என் முகத்தைப் பொத்தியபடி ஒரே ஓட்டமாக அந்த அறையைவிட்டு வெளியே ஓடினேன்.

வேறு என்னதான் செய்வது? என் வெட்கம் என்னைப் பிடுங்கித் தின்றது. அப்புறம் மூன்று நாள்கள் அவரை என்னால் பார்க்க முடியவில்லை. பார்த்தால், வெட்கத்தால் கண்ணீர் வந்து விடும்! என்னென்னவோ அதிசயமான எண்ணங்கள் என் மனதில் அலையடித்தன.

நேராக, அவருடைய அறைக்குப் போய் நான் சின்னக் குழந்தையல்ல, வளர்ந்த பெண்தான். நல்ல எண்ணத்துடன் அந்த அறைக்கு வந்தேன் என்பதை வெளிப்படையாக, எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டும் என்ற விபரீத யோசனைகூட வந்தது! ஆமாம் போய்ப் பேசிவிடுவதுதான் நல்லது என்று முடிவும் எடுத்துவிட்டேன். கடவுளே, அவ்வாறு செய்யாமல் நான் தப்பித்தேன்! அதற்கான துணிவு எனக்கு வராமல் போய்விட்டது. எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டேன்! இப்போதுகூட அதையெல்லாம் நினைக்கையில் அவமானமாக இருக்கிறது.

சில நாட்களுக்குப் பிறகு சட்டென என் தாய் உடல்நலம் குன்றிப் படுத்துவிட்டார். இரண்டு நாட்கள் படுக்கையை விட்டு எழுந்திருக்கக்கூட முடியாமல் மிகவும் துன்பப்பட்டார். கடுமையான காய்ச்சல். நினைவும் அவ்வப்போது தப்பியது. நான் அவளது படுக்கையருகில் இரவெல்லாம் அமர்ந்து அழுது கொண்டிருந்தேன். அவ்வப்போது மருந்து மாத்திரைகள் கொடுத்துக் கொண்டிருந்தேன்.

மறுநாள் இரவு நான் தளர்ந்து போய்விட்டேன். எனக்கும் தலை சுற்றியது. கண்களில் பனிமூட்டம்போல் திரை. ஆனால், அம்மாவின் முனகல் என்னைத் தளர்ந்துவிடாமல் தடுத்தது. எந்த நேரமும் நான் தளர்ச்சியில் தலை சுற்றிக் கீழே சரிந்துவிடுவேனோ என்ற நிலை. ஒரு சித்திரவதைதான். அந்த மனத் தளர்ச்சி நிலையில் ஒருபயங்கரக் கனவு வந்தது, விழிப்புக்கும் உறக்கத்திற்கும் இடையில்!

சட்டென அரண்டுபோய் விழித்துக் கொண்டேன். அறை இருண்டு கிடந்தது. விளக்கு அணையப் போகும் நேரம். சட்டென அறைக்குள் ஒரு வெளிச்சக் கற்றை; அதுவும் உடனே மறைந்துவிட்டது. அச்சத்தால் நான் நடுங்கிப் போனேன். கனவும் நனவும் குழம்பிய ஒரு பயங்கரமான நிலை.

சட்டென நான் நாற்காலியை விட்டுப் பாய்ந்து எழுந்தேன். என்னையறியாமல் கத்தியும் விட்டேன். அப்போது சட்டெனக் கதவைத் திறந்து கொண்டு பொக்ரோவ்ஸ்கி உள்ளே வந்தார்!

அப்புறம் அவருடைய இரண்டு கரங்களுக்கு இடையில் நான் அடைக்கலம் புகுந்தது மட்டுமே என் நினைவில் இருக்கிறது. அவர் என்னைத் தழுவி ஆசுவாசப்படுத்தி, நாற்காலியில் அமர வைத்தார். ஒரு குவளை தண்ணீர் கொடுத்தார். அப்புறம் கேள்விகளால் துளைத்தெடுத்தார். அவற்றிற்கெல்லாம் என்ன பதில் சொன்னேன் என்பது இப்போது நினைவிற்கு வரவில்லை.

"உனக்கு உடல்நிலை சரியில்லை. மிக மோசமாக இருக்கிறாய். உனக்குக் காய்ச்சல். ஏன் இப்படி சித்திரவதைக் குள்ளாகிறாய்? உடம்பைக் கவனிக்க மாட்டாயா? அமைதியாக இரு! பதற்றமடையாதே! ....... இப்படிச் சாய்ந்து கொள்!" என்று தொடர்ந்து கேட்டுக் கொண்டும் பேசிக் கொண்டும், என்னை ஒரு வார்த்தை பேசவிடாமல் உதவினார்.

தாங்கமுடியாத களைப்பினால் நான் என் சக்தியை எல்லாம் இழந்தேன். என் கண்கள் தாமாக மூடிக்கொண்டன. ஒரு அரை மணிநேரம் உறங்கலாம் என்று நினைத்துச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன். அப்படியே தளர்ந்துபோய் உறங்கிப் போனேன், விடியும்வரை!

அம்மாவுக்கு மருந்து கொடுக்கும் வேளை வந்ததன் காரணத்தால்தான் அவர் என்னை எழுப்பினார்!

மறுநாள். பிற்பகலில் நான் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொண்டபிறகு அம்மாவின் அருகில் விழித்திருந்து கவனித்துக் கொள்ள நான் அமர்ந்தேன். அப்போது மணி இரவு பதினொன்று இருக்கும். நேற்றைப்போல் நான் தளர்ந்து உறங்கிவிட மாட்டேன் என்ற மன உறுதி இருந்தது. அப்போது கதவு திறந்தது. அவர் வந்தார்.

"தனியாக அமர்ந்திருப்பது சலிப்பாக இருக்கும் இல்லையா? இந்தா ஒரு புத்தகம் கொண்டு வந்திருக்கிறேன். இது உன் சலிப்பைப் போக்கும்", என்று ஒரு புத்தகத்தை நீட்டினார். நான் அதை வாங்கிக் கொண்டேன். அது என்ன புத்தகம் என்பதுகூட

இப்போது நினைவில் இல்லை. நான் அன்று இரவு முழுவதும் விழித்திருந்தும்கூட அதை விரித்துப் படிக்க முயற்சி செய்யவில்லை.

எனக்குள் நிகழ்ந்த ஒரு போராட்டம் அன்று இரவு என்னைத் தூங்கவிடவில்லை. பலமுறை நான் நாற்காலியை விட்டு எழுந்து அறையில் நடக்கலானேன். ஏதோ ஓர் இனம் புரியாத நிறைவு எனக்குள் பாய்ந்து கொண்டிருந்தது. பொக்ரோவ்ஸ்கியின் என்மீதான அக்கறை எனக்குப் பெருமிதம் தருவதாக இருந்தது. அந்த நினைவும் கனவுமாக அந்த இரவு கடந்து போனது. அப்புறம் அவர் அங்கே வரவே இல்லை. அவர் வரமாட்டார் என்பது எனக்குத் தெரியும். மறுநாள் அந்திப் பொழுதிற்காக நான் காத்திருந்தேன்.

அந்தி வந்தது. அந்த இல்லத்தில் இருந்த அனைவரும் தமது அறைகளில் ஒடுங்கி ஓய்வெடுக்கும் வேளையில், பொக்ரோவ்ஸ்கி தமது கதவைத் திறந்து கொண்டு அங்கே நின்றார். அவர் அப்போது சொன்னது இப்போது ஒரு வார்த்தைகூட நினைவில்லை. நான் வெட்கிப்போய், குழப்பமடைந்திருந்தேன். அன்று பகல் முழுவதும் அவரிடம் என்ன பேச வேண்டும் என்ன கேட்க வேண்டும் என்று நான் கற்பனை செய்து வைத்திருந்த எல்லா வினா விடைகளும் அந்த நேரத்தில் காணாமல் போய்விட்டன!

அந்த உரையாடல் சீக்கிரம் முடியக்கூடாதா என்று எனக்குத் தோன்றியது. ஆனால், அந்தப் பொழுதிலிருந்துதான் எங்கள் நட்பு ஆரம்பமானது. என் அம்மா நோயில் படுத்திருந்த எல்லா நாள்களின் இரவுப் பொழுதுகளிலும் நாங்கள் அவளருகே அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். மெல்ல மெல்ல என் வேறுபாடுகள் மறைய ஆரம்பித்தன. ஆனால், கொஞ்சமாக ஒரு கவலை உள்ளுக்குள் இருந்து கொண்டேதான் இருந்தது. என் மனதில் ஓர் இரகசிய சந்தோசமும், பெருமிதமான மகிழ்ச்சியும் தோன்றின. அதற்குக் காரணம் அவர் தம் புத்தக ஞானத்தை யெல்லாம் விட்டுவிட்டு இயல்பாகப் பேசியதுதான்.

அந்தப் பேச்சின்போது, நான் புத்தகங்களைத் தள்ளிவிட்டது வந்தது. அந்த வாய்ப்பை நழுவவிடாமல், நான் எதற்காக அங்கு வந்தேன் என்பதை விளக்கமாகவும் விரிவாகவும் சொன்னேன். நிறையப் படிக்க வேண்டும் என்ற ஆசை மட்டுமே காரணம் என்று சொன்னேன். என்னை அவர், குழந்தையாய், சிறுமியாய்ப் பார்த்ததை அகற்ற வேண்டும் என்பதற்காக ஏற்பட்ட ஆவலினால் அது நிகழ்ந்ததாக விவரித்தேன்.

அப்படிச் சொல்லும்போது, என் மனம் நெகிழ்ந்துபோய் கண்களில் கண்ணீர் பெருகியது. அப்போது எதையும் மறைக்காமல் பேசினேன். என் மனம் திறந்து பேசினேன். அவர்மீது வைத்திருந்த

மதிப்பும், மரியாதையும், அன்பும்கூட என் வார்த்தைகளில் வெளிப்பட்டன. அதே சமயம், அவரை நான் நேசிப்பதையும் சொல்லிவிட்டேன்!

அவருடன் நெருங்கி இருக்கவும், நேசிக்கவும், வாழ்நாள் முழுதும் அவர்கூட இருக்கவும், அவருக்கு ஆறுதல் அளிக்கவும் நான் விரும்புவதாகச் சொல்லிவிட்டேன்!

அப்போது அவர் என்னை வித்தியாசமாகப் பார்த்தார். திகைப்பும், அதிர்ச்சியும், குழப்பமும் அடைந்தவர்போலக் காணப்பட்டார். அப்போது அவர் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. எனக்கு அதனால் பெருத்த வருத்தம், மனம் காயம்பட்டு விட்டது. என்னை அவர் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ என்று தோன்றியது. என்னை ஒரு குழந்தையாகவே நினைத்துவிட்டாரோ. ஆமாம், நான் ஒரு குழந்தை போலத்தான் அழ ஆரம்பித்துவிட்டேன்! ஒருமாதிரி வலிப்பு வந்துவிட்டதுபோலவும் தோன்றியது.

ஆனால், அவர் சட்டென என் கரங்களைப் பற்றி எடுத்து முத்தமிட்டார்! அழுத்தினார். பிறகு அவற்றைத் தம் இதயத்தோடு சேர்த்துப் பிடித்துக் கொண்டு ஆறுதல் மொழிகள் சொல்ல ஆரம்பித்தார். அவர் ஆழமாகப் பாதிக்கப்பட்டவர்போலத் தென்பட்டார்.

அவர் அப்போது என்னவெல்லாம் சொன்னார் என்பது இப்போது எனக்கு நினைவில் இல்லை. ஆனால், நான் அழுதது, அழுகையினூடே சிரித்தது, நாணத்தால் முகம் சிவந்தது எல்லாம் நினைவில் இருக்கின்றன. அந்தப் பரவசத்தில் என்னால் ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை.

என் பதற்றம் ஒரு பக்கம் இருக்க, அவர் சங்கடத்திலும் ஒருவிதக் குழப்பத்திலும் இருப்பதை நான் கவனித்தேன். எனது உற்சாகத்தை, எனது பரவசத்தை, எனது திடீர் நேசத்தை முழுவதுமாக அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை என்றே தோன்றியது. முதலில் அவர் அதிர்ந்துதான் போனார். அப்புறம் அவரது குழப்பம் மறைந்தது.

என் அன்பின் பிரவாகம் போன்ற எளிய உணர்வு வெளிப்பாட்டை அவரும் பெற்று எனதன்பை அவர் ஏற்றுக் கொண்டார். அப்போது அவர், என் அடக்கமான, அமைதியான, நேர்மையான நண்பரானார்; சொந்தச் சகோதரன் போலவும் நெருக்கமானார். எனது இதயம் இனிமை கொண்டு நிரம்பியது.

நான் எதையுமே அவரிடம் மறைக்கவில்லை. அவர் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டார். அதற்குப் பிறகு நாளுக்கு நாள் எங்கள் நெருக்கம் அதிகரித்தது.

நாங்கள் பேசிக் கொள்ளாத விஷயம் எதுவுமே இல்லை. துடிக்கும் சாமிவிளக்கின் வெளிச்சத்தில், அந்த இனிய இரவுப் பொழுதுகளில், அம்மா நோயுற்றுக் கிடக்கும் படுக்கையருகில் நாங்கள் பேசினோம். நாங்கள் என்னவெல்லாம் பேசினோம். எங்கள் கிழிந்துபோன இதயங்களிலிருந்து பிறந்த உரையாடல்கள், ஒரே சமயத்தில் சோகமாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தன. அந்த இருவேறு உணர்வுகள் கலந்த அந்த நாள்களை இப்போது என்னால் நினைவு கூர முடிகிறது.

இனிமையோ, கசப்போ- எதுவானாலும் சரி- அது எனக்கொரு சித்திரவதைதான். ஆம்! எனக்குமட்டும்தான். என்றாலும் அந்த வேதனை எனக்கொரு ஆனந்தம்தான்! உங்கள் இதயம் கனத்துப் போய் களைத்துப் போய் உள்ள வேளைகளில் இனிய நினைவுகள் தோன்றி அதற்குப் புத்துணர்ச்சி தரும், நாளெல்லாம் வெயிலில் காய்ந்து கருகும் வேளையில், மாலைப் பனித்துளிமேல் விழ, ஓர் அப்பாவி மலர் புத்துணர்ச்சி கொண்டு பூரிப்பது போல!

அம்மா கொஞ்சம் கொஞ்சமாகத் தேறி வந்தார். இருந்தாலும் இரவு வேளைகளில் நான் அவளது படுக்கையருகே காவலிருந்தேன். பொக்ரோவ்ஸ்கி அவ்வப்போது எனக்குப் புத்தகங்கள் கொடுத்து வந்தார். நான் அவற்றைப் படித்தேன். முதலில் தூங்கிவிடக் கூடாது என்பதற்காகவே படித்தேன். அப்புறம் நல்ல கவனத்தோடு ஊன்றிப்படிக்க ஆரம்பித்தேன். அதுவரை எனக்குத் தெரிந்திராத பலவற்றை நான் தெரிந்து கொண்டேன். புதிய புதிய கருத்துகள், புதிய சிந்தனைகள் எனக்குள் ஒரே சமயத்தில் வெள்ளம்போல பாய்ந்தன. அதே சமயத்தில் ஒரு பெரிய பதற்றம், ஒரு பெரிய குழப்பம், மிகவும் பிரியமாகவே எனக்குள் அலையடித்தது. புதிய புதிய சிந்தனைகளையெல்லாம் நான் ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். அவை என் ஆத்மாவில் ஒரு பரவசத்தை ஏற்படுத்தின. ஒரு வினோதமான குழப்பம் என் முழு இருப்பையும் நிலை குலைய வைத்தது. ஆனால், அந்த ஆன்மிகக் கொந்தளிப்பு, என்னை பூரணமாக நிலை தடுமாறச் செய்யும் ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை. நான் மிகுதியாகக் கனவு நிலையில் ஆழ்ந்திருந்ததால், அந்த நிலை என்னைக் கவிழ்ந்து விடாமல் காப்பாற்றியது.

என் தாய் உடல்நலம் தேறிய பிறகு எங்கள் இரவுப் பொழுது சந்திப்புகள் நின்று போயின. எப்பொழுதாவது, எதிர்ப்படும்போது முக்கியமற்ற இரண்டொரு வார்த்தைகள் பரிமாறிக் கொள்வதோடு எங்கள் சந்திப்புகள் குறுகிப் போய் விட்டன. ஆனால், அவைகூட எனக்கு மகிழ்ச்சியும் உற்சாகமும் அளித்தன.

என் வாழ்வு, நிறைந்த மகிழ்ச்சியும், அமைதியும், அடக்கமும் கொண்டதாக நகர்ந்து கொண்டிருந்தது. சில வாரங்கள் அப்படி நகர்ந்தன.

ஒருநாள் அவர் தந்தை எங்களை அழைத்தார். நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். வழக்கத்திற்கு மாறாக, மிகுந்த உற்சாகத்துடன், சிரிப்புடன், நகைச்சுவையுடன் அவர் பேசிக்கொண்டிருந்தது எங்களுக்கு வியப்பாகத் தோன்றியது. கடைசியில்தான் அதன் காரணம் தெரிந்தது. ஒருவாரத்தில் அவர் புதல்வர் பிறந்தநாள் வரப்போகிறதாம்!

அன்றைக்கு அவர் இடுப்பு வரை அணியும் புதிய உள்கோட்டு அணிந்து வரப்போகிறாராம். அவர் மனைவி அவருக்குப் புதிய காலணிகள் வாங்கித் தருவதாக வாக்களித்திருக்கிறாளாம்! பெரியவருக்கு ஒரே ஆனந்தம். மனசுக்குத் தோன்றியது பற்றியெல்லாம் உற்சாகமாக அரட்டை அடிக்க ஆரம்பித்துவிட்டார்.

அவருக்குப் பிறந்த நாள்! என் நிம்மதி போயிற்று. இரவு பகலாக யோசிக்க ஆரம்பித்துவிட்டேன். எனது நட்பை நிலைநாட்ட எதையாவது அவருக்குப் பிறந்தநாள் பரிசாகத் தரவேண்டுமே! நீண்ட குழப்பத்தோடு அவருக்குப் புத்தகங்கள் பரிசளிப்பதுதான் சரியென்று பட்டது.

புஷ்கின் நூல்களின் தொகுப்பு புதிதாக வந்திருந்தது. அந்தத் தொகுப்பை வாங்கிப் பரிசளித்துவிட வேண்டும் என்று முடிவு செய்தேன். நான் சேர்த்து வைத்த பணம் முப்பது ரூபிள்கள் இருந்தன. தையல்வேலை செய்து சேர்த்த காசு. புதிய ஆடை வாங்கலாம் என்று வைத்திருந்தேன்.

நான் உடனே, சமையல்கார மூதாட்டி மத்ரியோனாவை அனுப்பி விலை விசாரித்து வரும்படிக் கேட்டுக் கொண்டேன். போச்சு! எல்லாம் போச்சு! தொகுதி விலை அறுபது ரூபிள்கள்! பதினோரு தொகுதிகள் கொண்ட புத்தகக் கட்டு.

நான் எங்கே போவேன்? என்ன செய்வேன்? என்ன யோசித்தும் எனக்கு எந்த வழிமுறையும் தோன்றவில்லை. அம்மாவைக் கேட்கவும் எனக்கு விருப்பமில்லை. அம்மா கேட்டால் உதவி செய்வாள். ஆனால், எல்லாருக்கும் எங்கள் உறவு தெரிந்துவிடுமே என்று யோசித்தேன். பரிசு பரிசாகத்தான் இருக்க வேண்டுமே தவிர, பரிதாபத்தோடு தருவதாக இருக்கக் கூடாது. பொக்ரோவ்ஸ்கி ஒரு வருடம் பாடம் சொல்லிக் கொடுத்ததற்கு ஊதியம் போல அமைந்துவிடக் கூடாது.

பரிசு, என் பரிசாக இருக்க வேண்டும். நட்பின் பரிசாக அமைய வேண்டும். உதவிக்கு மறு உதவி செய்வதாக அமைந்துவிடக் கூடாது. நான் என்ன கொடுக்கப் போகிறேன் என்பது யாருக்கும் தெரியக்கூடாது என்றும் நான் நினைத்தேன்.

பயன்படுத்தப்பட்ட பழைய புத்தகங்கள் கிடைக்குமா என்று யோசித்தேன். பழைய புத்தகங்கள் விற்கும் கடைக்காரர்களிடம் கேட்டுப் பார்க்க வேண்டும் என்று நினைத்திருக்கையில் மத்ரியோனாவுடன் கடைக்குப் போகும் வாய்ப்பு அமைந்தது.

பழைய புத்தகக்கடையில் புஷ்கினின் புத்தகங்கள் அழகாக பைண்டு செய்யப்பட்டு நல்ல நிலையில் இருப்பது கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். ஆனால் விலைதான் ஒத்துவரவில்லை. பல கடைகளில் ஏறி இறங்கிய பின்பு ஒரு கடைக்காரரிடம் பேரம்பேச ஆரம்பித்தேன். என் மொத்த இருப்பு முப்பது ரூபிள்கள்தான். அவரோ 'புதுப் புத்தகங்கள். இரண்டரை ரூபிள்கள் சேர்த்துக் கொடு கொடுக்கிறேன், அதுவும் உனக்காக', என்று சொல்லிவிட்டார். என்னதான் செய்ய? எனக்கு அழுகையே வந்துவிட்டது.

அந்த வேளையில் சற்றுத் தொலைவில் பொக்ரோவ்ஸ்கியின் அப்பாவைப் பார்த்தேன். அவரைச் சுற்றி நான்கைந்து பழைய புத்தகக் கடைக்காரர்கள் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் நடுவே அவர் திருதிருவென்று விழித்தபடி நின்று கொண்டிருந்தார்.

உடனே நான் அருகே சென்று என்ன விவகாரம் என்று கேட்டேன். என்னைப் பார்த்ததும் அவருக்கு ஏகப்பட்ட சந்தோசம். தம் மகனுக்கு அடுத்தபடியாக என்னை மிகவும் நேசித்தவர் அவர். அவரும் புத்தகம் வாங்கத்தான் வந்திருக்கிறார். புத்தகங்களை எடுத்துப் பார்ப்பதும் அதை இரண்டு மூன்று வெள்ளி ரூபிள்களுக்குக் கேட்பதும் அப்புறம் வைத்துவிடுவதுமாக இருந்திருக்கிறார்! பெரிய புத்தகங்களை அவர் எடுக்கவே இல்லை. அது என்ன விலையோ என்று பயந்துபோய்தான்!

"என் பையனுக்குப் பிறந்த நாள் வருகிறதே. அதற்குப் பரிசளிக்கப் புத்தகம் வாங்கத்தான் வந்தேன். அவனுக்குப் புத்தகங்கள்தானே பிடிக்கும்", என்று சொன்னார் அவர்! பாவம் அவரும் நல்ல புத்தகங்கள் வாங்கப் போதிய காசில்லாமல் கண்ணீர் விடும் நிலையில் பரிதாபமாகக் காணப்பட்டார்!

சில நல்ல புத்தகங்களை எடுத்துப் பார்த்தபோது, அவர் சிந்திய கண்ணீர்த்துளிகள் வெளிரிய கன்னங்களில் வழிந்து அவரது சிவந்த மூக்கின்மேல் விழுந்தன! "உங்களிடம் எவ்வளவு பணம்தான் இருக்கிறது?" என்று கேட்டேன். அவர் உடனே ஒரு

காகிதத்தில் பொதிந்திருந்த பணத்தை வெளியில் எடுத்து, "பாரம்மா!" என்றார். "ஒரு அம்பது காசு நாணயம், அப்பறம் ஒரு இருபது காசு நாணயம், அப்பறம் மறுபடியும் ஒரு இருபது செப்புக்காசு", என்றார்.

நான் சட்டென அவரைக் கடைக்கு அப்பால் இழுத்துக் கொண்டு போனேன். "பாருங்கள் அய்யா, என்னிடம் முப்பது ரூபிள்கள் இருக்கின்றன. உங்கள் காசையும் சேர்த்துக் கடைக்கார ரிடம் கெஞ்சிக் கேட்டுப் புத்தகங்களை வாங்கிவிடலாம். பிறந்தநாள் பரிசை இருவரும் சேர்த்து கொடுக்கலாம். சரியா?" என்றேன்.

பெரியவர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. கடைக்காரர் சம்மதித்துக் கொடுக்கவே, பெரியவர் புஷ்கினின் புத்தகத் தொகுதிகளைப் பையிலும், கையிலும் பரவசத்துடன் ஏந்திக் கொண்டு, மறுநாள் ஓசைப்படாமல் என்னிடம் சேர்த்து விடுவதாகச் சொல்லிவிட்டு விரைந்தார்.

மறுநாள் அவர் வந்தார். வந்து தம் புதல்வரிடம் பேசிக் கொண்டிருந்தார். புத்தகங்கள்? நான் திகைத்துப் போனேன். அப்புறம் எங்கள் அறைக்கு வந்தார். கோமாளித்தனமாகச் சேட்டை செய்தபடி வேடிக்கையாகப் பேசினார். அப்புறம் இருகைகளையும் தேய்த்தபடி, இரகசியமான குரலில், புத்தகங்களை எவர் கண்ணிலும் படாமல் உள்ளே கடத்திவிட்டதாகவும், அவை மத்ரியோவினாவின் சமையற் கட்டின் மூலையில் இருப்பதாகவும் சொல்லிக் கண் சிமிட்டினார்!

நான் நிம்மதியடைந்தேன். அப்புறம் பிறந்த நாள் விழாவை எப்படிக் கொண்டாடுவது என்பது பற்றிப் பேச்சு வந்தது. அவர் எதையோ மனதில் நினைத்துக் கொண்டு, அதைச் சொல்ல முடியாமல் குழம்புவது போலத் தெரிந்தது. அவரிடம் ஒருவித அச்சமும் காணப்பட்டது. அவரது இடக்கண் ஒரு மாதிரியாகத் திறந்து மூடும். அதுகூட நின்றுவிட்டது!

நான், அவரே வெளிப்படுத்தட்டும் என்று மௌனமாகக் காத்திருந்தேன். சற்றுப் பொறுத்து அவர், "பார் வார்வெரா, உனக்குத்தான் தெரியுமே, அதாவது நாம் வாங்கிய புத்தகங்களில் பத்தை எடுத்து உன் பரிசாக அவனுக்குக் கொடுத்துவிடு. நான் பதினோராவது புத்தகத்தை என் பரிசாகக் கொடுத்து விடுகிறேன். அதுதான் சரியாக இருக்கும். நானும் பரிசளித்ததாக இருக்கும். நீயும் பரிசளித்ததாக இருக்கும்," என்று சொல்லிவிட்டுப் பெரியவர் மௌனமானார்!

நான் அவரைப் பார்த்தேன். அவர் வெட்கத்தோடு என் பதிலுக்குக் காத்திருந்தார். "அய்யா, நாம் அவற்றைச் சேர்ந்தே பரிசளித்தால் என்ன?" என்றேன்.

"அது வந்து.... அம்மா வார்வரா... நான்.... வந்து..." எதுவும் சொல்ல முடியாமல் அவர் திணறிச் சங்கடப்பட்டார். அப்புறம் பேச ஆரம்பித்தார்.

"பாரம்மா, வார்வரா அலெக்சியேவ்னா, நானொரு விளையாட்டுப் பிள்ளை. தெரிந்துகொள் பெண்ணே, நான் எப்போதும் விளையாடுவேன்; காலத்தோடு விளையாடுவேன். மோசமானவற்றைச் சட்டென விடாது பற்றிக் கொள்பவன்; அது நீர்த்துப் போகுமுன் பற்றிக் கொள்வேன்! எவ்வளவோ மகிழ்ச்சியற்ற விஷயங்கள் நம்மைப் பற்றவே செய்கின்றன. உங்களுக்கு அதில் வருத்தம் ஏற்படும். அப்போதெல்லாம் நான் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அவற்றோடு விளையாட ஆரம்பித்துவிடுவேன்! நிறையக் குடிப்பேன். என் மகனுக்கு அதெல்லாம் பிடிக்காது."

"அவனுக்குக் கோபம் வந்துவிடும். உடனே நீதிபோதனைகள் செய்ய ஆரம்பித்துவிடுவான். அதனால், நான் இப்போது திருந்திவிட்டதாக அவனுக்கு நிரூபித்துக் காட்ட வேண்டும். அதனால்தான் இந்த புத்தகப் பரிசு. நீண்ட நாள்களாகக் கொஞ்சம் கொஞ்சமாகக் காசு சேர்த்து வந்தேன், ஒரு புத்தகம் வாங்கிக் கொடுக்க. என்னிடம் எப்போதும் காசே இருக்காது. அவன் எப்பொழுதாவது ஏதாவது கொடுத்தால்தான் உண்டு. நான் காசைச் சேர்த்து நல்லபடியாகச் செலவளித்தேன் என்று அவன் நினைக்க வேண்டும் அல்லவா?" என்றார் பெரியவர்.

எனக்குப் பரிதாபமாகப் போய்விட்டது. அதையெல்லாம் நான் அதுவரை நினைத்துப் பார்க்கவே இல்லை. அவர் பேச்சை நிறுத்திவிட்டு என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"அய்யா, எல்லாவற்றையும் நீங்களே கொடுத்துவிடுங்கள்", என்றேன்.

"எல்லாவற்றையும் என்றால் என்ன அர்த்தம்?", என்று கேட்டார்.

"எல்லாப் புத்தகங்களையும்", என்றேன்.

"நானே பரிசளிப்பதாகவா?"

"ஆமாம், நீங்களே கொடுப்பதாக!"

"என்ன! எல்லாம் என் பெயரிலா?"

"ஆமாம், உங்கள் பெயரில்."

நான் தெளிவாகத்தான் அப்படிச் சொன்னேன். ஆனால் அதைப் புரிந்து கொள்ள அவருக்கு நீண்ட நேரம் பிடித்தது.

அப்புறம், "ஆமாம். அது சரிதான். அது நல்லது. மிகவும் நல்லது. ஆனால், வார்வரா அலெக்சியேவ்னா, உன்னுடைய பங்கு என்ன? நீ என்ன கொடுக்கப் போகிறாய்?" என்று கேட்டார்.

"நான் எதையுமே கொடுக்கப்போவதில்லை அய்யா", என்றேன்!

"நீ ஒன்றுமே கொடுக்கப் போவதில்லையா?" மீண்டும் திகைப்போடு கேட்டார்.

அவர் அவ்வாறு கேட்டபோது, அவர் தம்முடைய நிபந்தனையைத் தளர்த்திக் கொள்வார் போன்ற ஒரு தொனி தென்பட்டது! என்றாலும் நானும் அவர் புதல்வருக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் என்றே அவர் ஆசைப்பட்டார்.

அன்பான மனிதர். பரிசு என்று ஏதாவது போய்ச்சேர்ந்தால் போதுமே என்று நான் சொன்னேன். கொடுக்கும் மகிழ்ச்சி ஒரு தந்தைக்கு இருக்கட்டுமே என்று நான் நினைத்தேன்.

"அய்யா, புத்தகங்களை நீங்கள் பரிசளித்தால், உங்கள் புதல்வர் மகிழ்ச்சியடைவார். அதனால் நீங்கள் மகிழ்ச்சியடை வீர்கள். அதனால் நான் மகிழ்ச்சியடைவேன். எல்லாப் புத்தகங் களையும் நானே வழங்கியதாக நினைத்து நான் இரகசிய மகிழ்ச்சி அடைவேன்", என்று சொன்னேன்.

பெரியவர் திருப்தியடைந்தார். அப்புறம் இரண்டு மணி நேரம் அரட்டை அடித்தபடி அவர் அங்கே இருந்தார். ஷாஷாவைக் கேலி செய்தார். எனக்கு அவ்வப்போது இரகசிய முத்தங்கள் கொடுத்தார். என் தோள் பட்டையைக் கிள்ளினார். கடைசியாகப் புறப்பட்டபோது, ஆன்னாவுக்கு கோரணி காட்டினார். அவள் அவரைப் பிடித்து வெளியே தள்ளிக் கதவடைத்தாள். வேறு எப்போதும் இல்லாத அளவுக்கு மகிழ்ச்சியடைந்தவராய் அவர் புறப்பட்டுச் சென்றார்.

அந்த நாள் வந்தது. காலை பதினோரு மணிக்கே பெரியவர் வந்து சேர்ந்துவிட்டார். புதிய உள்கோட்டு, வெளிகோட்டு, காலணிகளுடன் ஆடம்பரமாகவே தோற்றமளித்தார். கையில் பெரிய புத்தகக் கட்டு.

அப்போது நாங்கள், அனைவரும், ஆன்னாவின் முன் வரவேற்பறையில் அமர்ந்திருந்தோம். அன்று ஞாயிற்றுக்கிழமை. காப்பி குடித்தபடி பேசிக் கொண்டிருந்தோம்.

அவர் அப்போது எங்களைப் பார்த்துப் பேசியது நினைவுக்கு வருகிறது.

“புஷ்கின் ஒரு சிறந்த கவிஞர்,” என்று ஆரம்பித்துவிட்டு, சட்டெனக் குழம்பிப் போனவராக எங்களுக்கு உபதேசம் செய்ய ஆரம்பித்துவிட்டார்! ‘ஒவ்வொருவரும் ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டும்’, என்று ஆரம்பித்தார். வேடிக்கையாகப் பேசுகிறாரோ என்று நினைத்தேன். ‘மோசமான நடவடிக்கைகள் ஒருவரை நாசம் செய்துவிடும்’ என்று சொல்லிப் பல உதாரணங்கள் சொன்னார். அவரவர் தம்மைத் திருத்திக் கொள்ளாவிட்டால், அழிவு நிச்சயம். அதனால் திருந்தி மேம்பட முயல வேண்டும்’, என்றார்.

நீண்ட காலமாக அவரது பிள்ளை அவரிடம் சொன்ன நீதிபோதனைகளையெல்லாம் தேக்கி வைத்திருந்து ஒரு சேரக் கொட்டுவதுபோலத் தோன்றியது. அப்புறம் மெல்ல தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார். தாம் திருந்திவிட்டதற்கு அடையாள மாக நீண்ட நாள் பணம் சேர்த்து நல்ல புத்தகங்கள் வாங்கி வந்திருப்பதாகவும் கூறினார்.

அவர் கோமாளித்தனமாக ஆடியாடிப் பேசியது கேட்டுச் சிரித்துச் சிரித்து எனக்குக் கண்ணீரே வந்துவிட்டது! எப்படி யெல்லாம் பொய் சொல்லலாம் என்பதை நன்றாக அறிந்தவர் அவர்!

அவர் கொண்டு வந்த புத்தகங்களை எடுத்துப் போய் பொக்ரோவ்ஸ்கியின் அறையில் வைத்தோம். பொக்ரோவ்ஸ்கிக்கு உண்மை நிலை உடனே தெரிந்துவிட்டது.

பெரியவரை பகலுணவுக்கு அழைத்தோம். அன்று எல்லோரும் மகிழ்ச்சியாக இருந்தோம். உணவுண்ட பிறகு அனைவரும் சீட்டாட ஆரம்பித்தோம். ஷாஷா நன்றாக ஆடினாள். நான் பின்தங்கி விட்டேன்.

பொக்ரோவ்ஸ்கி என்னருகிலேயே இருந்தார். என்னிடம் தனியாகப் பேசுவதற்கு முயல்கிறார் என்று தெரிந்தும், நான் அதைப் புறக்கணித்துவிட்டேன்.

கடந்த நான்கு ஆண்டுகளில் அந்த நாள் என் வாழ்வின் சிறந்த நாளாக அமைந்தது.

இப்போது எனக்கு, அதனை அடுத்து வந்த சோகமயமான துயர நாள்கள் நினைவுக்கு வருகின்றன. என் வாழ்வின் கருப்பு தினங்கள் அவை. அதையெல்லாம் எழுத முற்படுகையில் என் பேனாவின் வேகம் குறைகிறது; அங்கங்கே நின்றுபோய் விடுகிறது.

அதற்கு முன்னால் என் வாழ்க்கை எவ்வளவு ஆனந்தமயமாக இருந்தது! எவ்வளவு உற்சாகம்! எவ்வளவு

நம்பிக்கை! ஆனால் அந்த நாள்கள் மிகக் குறைவு. அவற்றை யெல்லாம் விழுங்க வந்தவை அடுத்து வந்த சோக தினங்கள்; கருப்பு நாள்கள். அவையெல்லாம் எப்போது முடியுமோ என்ற தீராக் கவலை எனக்கு.

எனது துரதிர்ஷ்டம், பொக்ரோவ்ஸ்கியின் நோயாலும், அவரது திடீர் மரணத்தாலும் ஆரம்பமாகியது!

முன்பு நான் விவரித்த இனிய நாளுக்கு இரண்டு மாதம் கழித்து அவர் சட்டெனக் கடுமையான நோய்வாய்ப்பட்டார். தான், மேலுயர்ந்து சிறப்பான இடத்தை அடைய வேண்டும் என்பதற்காக அவர் பல காலமாகக் கடுமையாக உழைத்து வந்தார். ஆனால், அவரால் தாம் நினைத்ததை எட்டிப் பிடிக்க முடியவே இல்லை. என்றாலும் அவர் நம்பிக்கை தளராமல் போராடித்தான் வந்தார். கடைசி நிமிடம் வரை அந்த நம்பிக்கையை அவர் கைவிடவே இல்லை.

நல்ல இடத்தில் ஓர் ஆசிரியராகப் பணியாற்ற வேண்டும் என்பதே அவரது ஆசையாக இருந்தது. அதற்கு அவரது பேராசிரியரே தடையாக இருந்தார். உடல் நிலை சீர் கெட்டு இருந்த காரணத்தால் அரசுப் பணியில் சேர அவரால் முடியவில்லை. அவரது ஊதியமும் சரிவரக் கைக்குக் கிடைக்கவில்லை. எங்கும் தோல்வியையே சந்தித்து வந்த அவர் மனம் தளர்ந்தார். அவரது பண்புகளிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. தனது உடல் நிலை பற்றி அவர் கவனம் செலுத்தவே இல்லை.

இலையுதிர் காலம் வந்தது.

ஒவ்வொரு நாளும் அவர் தமது மெல்லிய மேல் கோட்டை அணிந்து கொண்டு, வெளியே போய் வேலை தேட ஆரம்பித்தார். யார் யாரிடமோ கெஞ்சிக் கூத்தாடியும் எதுவும் அகப்படாமல் போகவே அவர் உள்ளூரத் தகர்ந்து போனார். காலெல்லாம் ஈரம் படிந்து, மேல் கோட்டெல்லாம் மழையில் நனைந்து, படுத்துவிட்டார். மேலே எழக்கூட முடியாத நிலையில் தளர்ந்து போய்க் கிடந்தார்.

இலையுதிர் காலத்தில் ஓர்நாள், அக்டோபர் இறுதியில் அவர் இறந்துபோனார்!

அவர் படுத்திருந்த காலத்தில் அவரருகே நான் தொடர்ந்து இருந்தேன். தொடர்ந்து இரவுப் பொழுதுகளில் விழித்திருந்து அவரைக் கவனித்துக் கொண்டேன். அவருக்கு எப்போதாவதுதான் நினைவு திரும்பும். அப்போதெல்லாம் அவர் தமது புத்தகங்கள் பற்றியும், தமது பணி ஆசை பற்றியும், என்னைப் பற்றியும், தமது தந்தை பற்றியும், பேசுவார். கடவுள் தனக்கு என்ன வழி விட்டிருக்கிறாரோ என்று கவலைப் பட்டுக் கொள்வார்.

கொஞ்சம் தாமதமாகத்தான் அவரது உண்மைநிலை எனக்குப் புரிய வந்தது. அவர் உடல் நிலை குன்றியிருந்த ஆரம்ப நாள்களில் எல்லாரும் என்னை ஒருமாதிரியாகப் பார்த்தார்கள். ஆன்னாவுக்கு நான் பணிவிடை செய்வது பிடிக்கவில்லை. ஆனால், நான் துணிவாக நிமிர்ந்து செயல்பட்டேன். அதன் பிறகு எவரும் என்னைத் தடுக்கத் துணியவில்லை. என் தாயார்கூட.

எப்போதாவது விழிக்கும்போது, பொக்ரோவ்ஸ்கி என்னை அடையாளம் கண்டு கொள்வார். பெரும்பாலும் பிரக்ஞையின்றியே தான் கிடந்தார். சில சமயம், புத்தி பேதலித்த வேளைகளில் அவர் பேச ஆரம்பிப்பார். இரவு முழுவதும் கரகரத்த குரலில் அவர் பேசிக் கொண்டே இருப்பார். அவர் பேசுவது எதுவுமே புரியாது. அவரது குரல் சுவர்களில் முட்டி மோதி எதிரொலிக்கும். அவரது குழப்பம், நிராசைகள், வேதனைகள் என்னை மிகவும் துன்பப்படுத்தின.

அவரை அமைதியான முறையில் அழைத்துக் கொள்ளும்படி ஆன்னா ஃபியோதரோவ்னா ஆண்டவனை வேண்டியபடி பிரார்த்தனை செய்துகொண்டிருந்தாள்!

மருத்துவர் ஒருவர் அழைக்கப்பட்டுக் காட்டியபோது, அவர், 'விடியும் வரை தாங்காது' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்!

பெரியவர் இரவெல்லாம் கதவுக்கு வெளியே காத்திருந் தார், அவருக்கு அங்கே ஒரு மெத்தென்ற சோபா போட்டிருப்பது போன்ற நினைப்பில்! அடிக்கடி உள்ளே வந்து எட்டிப் பார்த்துக் கொண்டும் இருந்தார். அவர் அடைந்த வேதனைக்கு அளவே இல்லை. நாளுக்கு நாள் அவர் உணர்ச்சியற்று மரத்துப் போனவராக வும் காட்சியளித்தார்.

பெரியவர் தலை நடுக்கம் கண்டதுபோல ஆடிக் கொண்டிருந்தது. உடல் முழுவதும் நடுங்கிக் கொண்டிருந்தது. தமக்குத் தாமே ஏதோ பேசிக் கொள்ளவும் ஆரம்பித்துவிட்டார்! துக்கம் தாங்க முடியாமல் விரைவில் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிடும் என்றே நான் நினைத்திருந்தேன்.

வைகறைப் பொழுதில், மனச்சோர்வும் களைப்பும் தாங்க முடியாமல் அறைக்கு வெளியே கதவருகில் பிணம்போலத் தரையில் சாய்ந்து கிடந்தார் பெரியவர். அவரை நான் எழுப்பினேன்.

காலை எட்டுமணிக்கு என் ஆசான், தோழன் பொக்ரோவ்ஸ்கி நல்ல விழிப்புடன் அனைவர்க்கும் 'குட்பை' சொல்லிவிட்டுக் கண்கள் மூடி உயிர் துறந்தார்!

என் இதயம் நார் நாராகக் கிழிந்து போனது. எனக்கு அழுகைகூட வரவில்லை. நான் திகைத்துப் போய் அமர்ந்திருந்தேன்.

அவருடைய மறைவின் கடைசி விநாடிகள் எனக்குத் தாங்க முடியாத சித்திரவதையாக இருந்தன. அவர் தம் கரகரத்த குரலில் எதையோ கேட்பதுபோல் இருந்தது. என்ன என்பதுதான் விளங்கவில்லை. பலமுறை அவர் கடுமையாக சிரமப்பட்டுச் சொல்ல முயன்றார். விளங்கவில்லை. என் இதயம் வெடித்துவிடும் போல் ஆகிவிட்டது.

அவரது நாக்கு மரத்துப் போய்க் குழறியது. ஒரு மணி நேரம் எங்களுக்கு விளங்க வைக்க அவர் படாதபாடு பட்டார். ஒன்றும் பயனில்லை. தமது விறைத்துப்போன கைகளை அசைத்துச் சாடை செய்து விளக்க முயன்றார்.

எவ்வளவு அவர் சிரமப்பட்டும் எங்களுக்குப் புரியாமற் போனது எங்களுக்கு சொல்ல முடியாத வேதனையைத் தந்தது.

புரிந்து கொள்ளுங்களேன் என்று கண்களால் அவர் கெஞ்சுவது பார்க்கப் பரிதாபமாக இருந்தது. மறுபடியும் தமது வலுவற்ற குரலால் குழறினார். அவரது பேச்சு வெறும் ஒலியாக மட்டுமே எங்களுக்குக் கேட்டது. எதுவும் சொற்களாக ஒலிக்கவில்லை.

வீட்டிலுள்ளவர்கள் எல்லாரும் அவரைச் சுற்றி நின்று அவரது கடைசி வேண்டுகோளை நிறைவேற்றத் தயாராக இருந்தனர். எங்கள் புரியாமையைக் கண்டு அவர் பரிதாபமாகத் தலையை அசைத்தார்.

கடைசியாகத்தான் எனக்கு சட்டென அவர் சொல்ல முயன்றது புரிந்தது!

சாளரத்தை அகலத் திறக்கச் சொல்கிறார்! திரையை உயர்த்தச் சொல்கிறார்!

கடைசி கடைசியாக, கடவுள் பூமியின் கடைசி வெளிச்சத்தை, உதயத்தைக் கண்டுவிடத் துடிக்கிறார்.

சட்டென சன்னலைத் திறந்து, திரையை உயர்த்தினேன். அவரது கண்களில் ஒளி.

ஆனால், என்ன பரிதாபம்! கதிரவன் காட்சி கொடுக்க வில்லை! மேகமூட்டம்! மூடுபனி!

மங்கிய வெளிச்சமே உள்ளே வந்தது. வெளியே மெல்லிய மழை பெய்து கொண்டிருந்தது. உள்ளே எரிந்து கொண்டிருந்தது மெழுகுவர்த்தி வெளிச்சத்தோடு போட்டிபோடுவது போல வெயிலற்ற வெளிச்சமே உள்ளே வந்தது.

அவர் பரிதாபமாக என்னைப் பார்த்தார். சோகமாகத் தலையை இடம் வலமாக ஆட்டித் தம் ஏமாற்றத்தை வெளிப்படுத்தினார்.

அடுத்த நிமிடம் அவர் உயிர் பிரிந்தது.

ஆன்னா சவ அடக்கத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தாள். மிகவும் மலிவான சவப்பெட்டிக்குச் சொல்லியனுப்பினாள். சவ வண்டிக்கும் ஏற்பாடு செய்தாள்.

அவள் செய்யவிருந்த செலவுகள் எல்லாவற்றிற்கும் ஈடு செய்ய அவருடைய அறையில் இருந்த எல்லாச சாமான்களையும் எடுக்க ஆரம்பித்தாள்!

அதிர்ந்து போன பெரியவர் அறைக்குள் பாய்ந்து சென்று புத்தகங்களை வாரிவாரி எடுத்தார். தமது மேல் கோட்டுப் பைகளிலும், மற்ற சட்டைப் பை முதலியவற்றிலும் அவற்றைத் திணித்தார். தடுக்க முயன்ற ஆன்னாவுடன் கடுமையாகச் சண்டை போட்டார். தேவாலயத்தில் சரம வழிபாடு நடக்கும்வரை மூன்றுநாள்கள் அந்த அறையிலுள்ள எதையும் யாரும் தொடக்கூடாது, நகர்த்தக்கூடாது என்று சத்தம் போட்டார்.

அந்த நாள்களில் அவர் வெறிபிடித்தவர் போலவும், புத்தி சுவாதீனம் இழந்தவர்போலவும் நடந்து கொண்டார்.

தமது புதல்வனைப் பெட்டியில் வைத்தபோது, அவனது கழுத்து மாலையைச் சரிசெய்வதும்,மெழுகுவர்த்திகளை நகர்த்தி வைப்பதுமாக ஒருவித சுயபோதம் அற்ற நிலையில் பெட்டியைச் சுற்றிச் சுற்றி வந்து ஏதேதோ மாற்றங்கள் செய்து கொண்டே இருந்தார். சுற்றிலும் யார் யார் இருக்கிறார்கள் என்ற பிரக்ஞையே அவரிடம் காணப்படவில்லை.

அவரால் ஒரு கணம்கூட சும்மா இருக்க முடியவில்லை. ஒருவிதப் பதற்றம் அவரைப் பற்றிக் கொண்டது.

தேவாலயப் பிரார்த்தனைக்கு அம்மாவும் ஆன்னாவும் வரவில்லை. அம்மாவுக்கு உடல்நலமில்லை. ஆன்னா பெரியவரோடு சண்டை போட்டதனாலோ என்னவோ, ஏதோ சாக்குப் போக்கு சொல்லி வரவில்லை.

தேவாலயத்தில் நானும் பெரியவரும் மட்டுமே இருந்தோம்.

பிரார்த்தனையின்போது ஒருவித அச்சம் என்னைப் பற்றிக் கொண்டது. வருங்காலம் பற்றிய அச்சம். என்னால் அங்கே நிற்கக்கூட முடியவில்லை.

கடைசியாக சவப்பெட்டி மூடப்பட்டது. ஆணிகள் அடிக்கப்பட்டன. அப்புறம் அது சவவண்டியில் ஏற்றப்பட்டது. வண்டி தெருவுக்கு வந்தபோது மழை பெய்து கொண்டிருந்தது.

நான் வண்டியின் பின்னால் வேகமாக நடந்தேன். பெரியவரும் வண்டியின் பின்னால் என்னுடன் வந்தார்.

வண்டி மெல்ல வேகம் எடுத்தது. நாங்கள் பின்னால் ஓட ஆரம்பித்தோம். அந்தத் தெருவின் கோடிவரை போய்விட்டு நான் நின்று விட்டேன்.

அவர் ஓடிக் கொண்டே இருந்தார். அவரது தொப்பி கீழே விழுந்தபோது அதை எடுக்க அவர் முயலவில்லை. தொடர்ந்து ஓடுவதை நான் அங்கிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவரிடம் இருந்த புத்தகங்கள் கீழே விழுந்தபோது, வழிப்போக்கர்கள் அதைச் சுட்டிக்காட்ட, அவர் உடனே குனிந்து அவற்றை எடுத்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தார்.

அவர் தலை மழையால் நனைந்து நீர் வழிந்தது. பனிக்காற்று அவர் முகத்தில் சுழன்று அடித்தது.

எதையும் கவனிக்காமல் அவர் தம் புதல்வருக்குப் பின்னால் ஓடிக் கொண்டிருந்தார்.

ஒரே ஒரு பிச்சைக்காரி மட்டும் அவரோடு சேர்ந்து ஓட ஆரம்பித்தாள். வழியில் எதிர்ப்படுவோர் அந்தக் காட்சியை வியப்புடன் பார்த்து நின்றனர்.

வண்டி ஒரு திருப்பத்தில் என் பார்வையிலிருந்து மறைந்துவிட்டது.

நான் வீடு திரும்பினேன்.

அம்மா இருந்தாள். அவளை இறுகக் கட்டிக்கொண்டு அழுதேன். அச்சத்தால் அவளை மிக இறுக்கமாகக் கட்டிப் பிடித்தபடி, விம்மி விம்மி அழுதேன்.

என் கடைசித் துணை, அவள்தானே- அவள் ஒருத்தி மட்டும்தானே.... அவளை விட்டால் அப்புறம் எனக்கு திக்கு ஏது?

'உன்னை விட மாட்டேன் அம்மா,' என்பதுபோல அவளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கதறி அழுதேன்.........

ஆனால் மரணம் அவள் தலைமாட்டில் காத்திருந்தது..........................................

ஜூன் 11

மகார் அலெக்சியேவிச் அவர்களே,

நேற்றைய மகிழ்ச்சியான பொழுதிற்காக நான் மிகவும் நன்றிக்கடன் பெற்றிருக்கிறேன். அந்தத் தீவுதான் எவ்வளவு அழகு! எவ்வளவு சுத்தம்! என்ன அமைதி!

அந்தப் பச்சைப் பசேல் என்ற வயல்வெளி என்ன அழகு. என் மரண வேளையில் அப்படியொரு பசுமை என் கண்களில் பட வேண்டும் என்று நான் ஆசைப்படுவது வழக்கம்.

நேற்று, கொஞ்சம் அவ்வப்போது சோகம் கொண்டிருந் தேன் என்பதற்காக என்மேல் கோபம் வேண்டாம். ஏதோ ஒரு காரணத்தால் நான் அழக்கூடச் செய்தேன். அதையெல்லாம் மனதில் வைத்துக் கொள்ள வேண்டாம். சில சமயம் நான் எதற்காக அழுதேன் என்பதுகூட எனக்குத் தெரிவதில்லை!

நேற்று நான் உண்மையில் அளவற்ற ஆனந்தத்தில்தான் மூழ்கியிருந்தேன்.

மேகங்களற்ற வானம், கதிரவன் மறையும் அழகு, சாந்தி தவழும் அந்திமாலை - எல்லாம் சேர்ந்து என்னைப் பரவசப்படுத்தி எனக்குக் கண்ணீரை வரவழைத்துவிட்டது.

அந்த உணர்வுப் பெருக்கை விளக்கமாக வார்த்தைகளில் சொல்ல என்னால் முடியவில்லை. என் சோகத்தையும் சிரிப்பையும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

நீங்கள் நேற்றுக்கூட என் கண்களில் என்ன தெரிகிறது என்று உற்றுப் பார்த்தீர்களே! என் பரவசத்தை நீங்கள் புரிந்து கொண்டிருக்க வேண்டும்.

ஒரு சின்னப் புதர், மரங்களடர்ந்த ஒரு சிறிய சாலை, சிற்றருவி - இவற்றையெல்லாம் கண்டு நான் மகிழ்ந்ததை என் கண்களுக்குள் உற்றுப் பார்த்துக் கண்டு கொண்டிருப்பீர்களே!

உங்களுக்கு நல்ல அன்பான மனம். அதனால்தான் நான் உங்களை நேசிக்கிறேன்.

சரி முடித்துக் கொள்கிறேன்.

எனக்கு இன்று கொஞ்சம் உடல்நிலை சரியில்லை. நேற்று நிறைய நேரம் தண்ணீரில் நின்றிருந்தேனல்லவா? அதுதான்.

ஃபெடோராவுக்கும் உடல்நலமில்லை. இருவருக்கும் இப்படி.

*மறந்து விடாதீர்கள். அடிக்கடி வந்து பாருங்கள்.*

*உங்கள்*

வா. அலெ.

ஜூன் 12

என் இனியவளே, வார்வரா அலெக்சியேவ்னா,

நானும் அதைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். நேற்றைய சம்பவங்களையெல்லாம் ஒரே ஒரு காகிதத்தில் சுருக்கமாக, கவிதையாக எழுதிச் சுருக்கிவிட்டாயே. அதிகமாக எழுதல ஆனாலும் நல்லாத்தான் இருந்திச்சு. விவரமா விளக்கியிருந்தா இன்னும் நல்லா இருந்திருக்கும். எனக்கு அந்த மாதிரித் தெறமை எல்லாம் கெடையாது. பத்துப் பக்கம் வேண்ணாலும் கிறுக்குவேன். விளக்க முடியாது. களச்சிப் போயிடுவேன்.

எனக்கு இப்படி எளுதிகிட்டே இரு. நான் ரொம்ப அன்பானவன்தான். அக்கம் பக்கம் இருக்கறவங்களுக்கு எந்தக் கெடுதலும் செய்ய மாட்டேன்.

கடவுள் அருள்தான் இயற்கையா வெளிப்படுது. நீ என்னெ ரொம்பப் புகழ்ந்திருக்கே. அது சரிதான். ரொம்பச் சரிதான். நீ சொல்ற மாதிரிதான் நான் இருக்கேன். அது எனக்கே நல்லாத் தெரியும். நீ எளுதினதப் படிச்சபோது மனசு ரொம்ப சங்கடப் பட்டிருச்சு. என்னென்னவோ கவலப்படற யோசனைக என் மனசுல தோணுச்சு. கேளு, கொஞ்சமா சொல்றேன் அன்பானவளே. உனக்குப் புடிச்சாலும் பிடிக்காவிட்டாலும் சொல்லத்தான் வேணும்.

நான் அரசாங்க வேலைல சேந்தப்போ எனக்குப் பதினேழு வயசு. இப்ப முப்பது வருசம் வேல பாத்தாச்சு. ஆமா, இத மறுக்க முடியாது. எனக்கு தளர்ந்து போச்சு. ஆனா பக்குவம் வந்திருக்கு. புத்திசாலியாவும் வளந்திட்டேன். எவ்வளவோ பாத்தாச்சு. எத்தனையோ பேர சந்திச்சாச்சு. நெறைய அனுபவங்க ஏற்பட்டிருக்கு. என்னோட அனுபவங்களத் தெரிஞ்சு எனக்குப் பதக்கம் குடுக்கக்கூட சிலபேர் முன்வந்தாங்க. ஆமா. பொய்யில்லே. உன்னால நம்பக்கூட முடியாதுதான். ஆனா, அப்பிடி முன்வந்தவங்க மோசமான ஆளுங்க. நான் முட்டாளா இருந்தாலும், மடையனா இருந்தாலும் எம்மனசென்னவோ எல்லார் மனசப்போலத்தான்.

ஒரு மோசமான ஆளு என்ன செஞ்சான் தெரியுமா வாரென்கா? சொல்றதுக்கே அவமானமா இருக்கு. ஏன் அப்படி செஞ்சாண்ணு நீ கேக்கலாம். நான் ரொம்ப அப்பாவி; சாது. அதனாலதான். அவங்களுக்கு அது பிடிக்கலே. அதனால என்னெக்

கேலி பண்ண ஆரம்பிச்சாங்க. ஆரம்பத்தில ரொம்ப மரியாதையாப் பேசற மாதிரி, "மகார் அலெக்சியேவிச் அவர்களே அது அப்படியா, அல்லது இது இப்படியா?" ண்ணு சாதுவா பேசற மாதிரி ஆரம்பிச்சு, என்னெக் கேலி பண்ணினாங்க. அவங்க பளமொழி கேப்பாங்க. அப்பறம் என் தல முடியப் பத்தி, என் காலணியப் பத்தி, கோட்டப் பத்தி எனக்கு அது சரியில்லெ இது பொருந்தலைண்ணு நக்கலாப் பேசினாங்க.

நான் அவங்களுக்கு ஒரு கெடுதலும் பண்ணல. அவங்க பதவியப் பறிச்சனா, பொருளத் திருடிகிட்டனா, அவங்க போனசக் கேட்டனா? அப்படி யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்யலயே. அவங்களுக்கு எதிரா சதியா செஞ்சேன்? அப்படி நெனைக்கிறது கூடப் பாவமில்லையா? நான் செய்வனா? அப்பிடி நெனைப்பனா? கடவுளே!

நீ ஒருத்திதான் என்னெ மதிச்சே. பெரிய சமூக ஒழுக்கம் எது தெரியுமா? நேத்து பேசிகிட்டிருந்தப்ப யெஸ்டஃபி இவானவிச் என்ன சொன்னார் தெரியுமா? "பெரிய சமூக ஒழுக்கங்கறது, அதெ எப்படி காசாக்கறதுங்கறதுதான்" அப்பிடீண்ணு சொன்னாரு! நிச்சயமா அது கேலிப் பேச்சுதான். அது உண்மையில்லெ. பெரிய சமூக ஒழுக்கம் என்னண்ணு கேட்டா, 'நீங்க யாருக்குமே பாரமா இருக்கக்கூடாதுங்கறதுதான்' - அதனால நான் யாருக்குமே பாரமா இருக்க மாட்டேன்!

என்னோட ரொட்டித் துண்டெ நானே சம்பாதிச்சுக்குவேன். ஒரு சாதாரண ரொட்டித் துண்டுதான் அது காஞ்சுபோனதாக்கூட இருக்கலாம். அது எங்கிட்ட இருக்கும். நான் பாடுபட்டுச் சம்பாதிச்சதா அது இருக்கும். நேர்மையா ஒழைச்சதால கிடைச்சதாத்தான் இருக்கும். அதில் எனக்குப் பெருமைதான். நான் பாடுபடறேன். நான் வேர்வ சிந்தறேன்.

அப்புறம் நான் செய்யற வேலய நான் பெருமையா நெனைக்கறேன். நான் எதையெதையோ பாத்துப் பிரதி எடுக்கறேன். அது என் வேலை. அது தப்பா? அது என்ன பாவமா? "காப்பி எடுக்கற வேல!" அப்படீங்கறாங்க. இதில அவமானம் என்ன இருக்கு? என்னோட கையெழுத்து, தெளிவா, அழகா, நல்லா இருக்கறதாலதானெ இந்த வேல கெடச்சிருக்கு! எவ்வளவு சந்தோசமா நான் இதச் செஞ்சிட்டு வர்றேன். மேன்மை தங்கிய கவர்னரே பாராட்டினாரே!

முக்கியமான ஆவணங்களெப் பிரதி எடுக்க எங்கிட்டதான் குடுப்பாங்க. எனக்கு இலக்கியம் தெரியாதுதான். அப்பிடியெல்லாம் சொந்தமா எழுத வராதுதான். எனக்கு அதுல

ஆசயுங்கெடையாது. அதனாலதான் நான் வெற்றிபெற முடியலேங்கறது எனக்குத் தெரியும். பாரு, உனக்கு எப்பிடி எளுதிகிட்டிருக்கேன்! மனசில தோணறதெ அப்பிடியே எழுதறேன். அவ்வளவுதான்.

சிலர் சொந்தமா எளுத்துகளக்கோத்துக் கோத்து வார்த்தைகளெ அடுக்கி அடுக்கி அளகா எழுதுவாங்க. அப்பிடி எல்லாருமே எளுத ஆரம்பிச்சா காப்பி எடுக்கறது ஆரு? இதத்தான் நான் கேக்க ஆசப்படறேன். நீயே பதில் சொல்லு கண்ணு!

என்னப் போல ஆளுகளும் தேவை. இல்லையா? நான் வேறமாதிரிதான். ஒரு எலிமாதிரி! ஆனா, இந்த மாதிரி எலியும் தேவப்படுதே! இதுவும் உபயோகமானதா இருக்கே! இந்தக் காரணத்தால இந்த எலிப் பிறவிக்கும் போனஸ் குடுக்கிறாங்களே! அந்த மாதிரி எலியாக்கும் இது! சரிம்மா. இந்த விஷயத்தை இத்தோட நிறுத்திக்குவோம். ஏதோ ஒரு உணர்ச்சி வேகத்தில எளுதிட்டே போயிட்டேன்.

நீ எல்லாத்தயும் சரியாவே புரிஞ்சுக்குவே. சரிம்மா. இத்தோட முடிச்சிக்கறேன். எனக்குள்ள ஒரே ஆறுதல் நீதானே! நான் வர்றேன். வந்து பாக்கறேன். நீ எப்பிடி இருக்கேண்ணு பாக்க அவசியம் வர்றேன், என் சின்னப் பூவே.

அதுவரைக்கும் சலிச்சுக்காதே. உனக்கு ஒரு புத்தகம் கொண்டுவரப் போறேன். சரிம்மா. குட்பை, வாரென்கா!

உன்னுடைய உண்மையான நலம் நாடும்,

மகார் தேவுஷ்கின்.

ஜூன் 20

அன்புமிக்க மகார் அலெக்சியேவிச் அய்யா அவர்களே,

நான் ஒரு அவசரத்தில் எழுதுகிறேன். ஒருவேலை சீக்கிரம் முடிக்க வேண்டி இருப்பதால்தான் அவசரம். ஒரு பொருள் விற்பனைக்கு வந்திருக்கிறது. ஃபெடோராவுக்குத் தெரிந்தவர் யாரோ ஒரு நல்ல சீருடையை விற்க விரும்புகிறாராம். நல்ல துணி, உள்ளாடைகள், உள்கோட்டு, மேல் கோட்டு, தொப்பி எல்லாம் நல்ல நிலையில் இருக்கின்றனவாம். மலிவான விலைக்குக் கிடைக்கும் என்று தெரிகிறது. உடனே நீங்கள் அதை வாங்கிவிடுங்கள்.

அது உங்களுக்கு இப்போது அவசியம் தேவை. தயவு செய்து மறுத்துவிட வேண்டாம். நீங்கள் அணிந்திருக்கிற உடையைத்தான் கொஞ்சம் பாருங்களேன். எவ்வளவு மோசம். பார்க்கவே அவமானமாக இருக்கிறது! பூரா ஒட்டுத்தையல் போட்டவை. உங்களிடத்தில் வேறு நல்ல ஆடை எதுவும் இல்லை என்பது எனக்குத் நன்றாகத் தெரியும். மறுக்காதீர்கள். அதனால் கண்டிப்பாக நான் சொல்வதை வாங்கிவிடுங்கள். எனக்காக வாங்குங்கள். நீங்கள் என்னை நேசிப்பது உண்மையானால் அதைக் காட்டாயம் வாங்கி விடுங்கள்.

எனக்குக் கொஞ்சம் துணி அனுப்பியிருந்ததீர்கள். மகார் அலெக்சியேவிச், நீங்கள் வீணாகப் பணத்தைச் செலவு செய்கிறீர்கள். எனக்காக ஏன் அப்படிச் செய்தீர்கள்? எனக்கு இப்போது எதுவும் தேவையே இல்லை. பணத்தை ஏன் விரயம் செய்கிறீர்கள்?

என்மீது அன்பு காட்டுவதற்காக இப்படிப் பரிசுகள் வாங்கி அனுப்புவது தேவையே இல்லை. அவற்றை ஏற்றுக் கொள்ள என் மனம் மறுக்கிறது. அவை என்ன விலை என்பது எனக்குத் தெரியும்.

இந்தமாதிரி காரியங்களை நிறுத்துங்கள். நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். என்ன, புரிந்ததா?

நான் அனுப்பி வைத்த நோட்டுப் புத்தகத்தின் தொடர்ச்சியை அனுப்பச் சொல்லிக் கேட்டிருக்கிறீர்கள். அதைத் தொடர்ந்து எழுதி முடிக்கச் சொல்லியிருக்கிறீர்கள்.

நான் எப்படி எழுதுவேன் அய்யா! அதற்கான திராணி என்னிடம் இல்லையே! அந்த நினைவுகள் என்னை மிரட்டுகின்றன. என் அன்பு அம்மா கொடிய அரக்கர் கைகளில் என்னை அகப்பட

விட்டுவிட்டுப் போய்விட்டாளே! அந்தக் கொடிய நினைவுகள் இன்னும் பசுமை மாறாமல் என் மனதில் அப்படியே இருக்கின்றன.

என் இதயத்தில் இரத்தம் கசிகிறது. என் எண்ணங்களை, அந்த நினைவுகளை ஒன்று திரட்டி அமைதியான வேளையில்தான் எழுத முடியும். எல்லாம் ஓராண்டுக்கு முன்னால் நிகழ்ந்தவை. உங்களுக்கும் அவை தெரிந்தவைதாம்.

ஆன்னா ஃபியோதரோவ்னாவின் இப்போதைய நோக்கம் என்ன என்பதை உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். திருவாளர் பைக்கோவுக்கு என்னை விற்றுவிட அவள் முயல்கிறாள். அதற்காகத் தன்னிடம் திரும்பி வந்துவிடும்படி அவள் கேட்கிறாள்.

என்னைப் பிச்சைக்காரி என்று நினைத்து விட்டாள் போலிருக்கிறது. பைக்கோவ் எனக்கு வரதட்சணைகூடக் கொடுக்க முன் வருகிறாராம். யாருக்கு அது வேண்டும்? நான் இங்கே நன்றாகவே இருக்கிறேன். எனக்கு ஃபெடோரா துணை யிருக்கிறாள். என் பாட்டியை நினைவூட்டும் பெண் இவள்.

அப்புறம் என் தூரத்து உறவினரான நீங்கள் என் பாதுகாப்புக்கு இருக்கிறீர்கள். நான் கடந்த காலத்தை எல்லாம் மறந்துவிடவே நினைக்கிறேன். எல்லாம் வதந்தி, நம்பாதீர்கள் என்கிறாள் ஃபெடோரா. காலப்போக்கில் சரியாகிவிடும் என்கிறாள். கடவுள் கருணை காட்டட்டும்.

வா.

ஜூன் 21

என்னருமைக் குட்டி இனியவளே!

எளுத ஆசையாத்தான் இருக்கு. ஆனா எங்கிருந்து ஆரம்பிக்கறதிண்ணு தெரியலெ. பாரும்மா, நாம ரெண்டுபேரும் எப்பேர்ப்பட்ட நிலமையில் வாழ்ந்திட்டிருக்கோம்! நான் என்ன சொல்ல வர்றேண்ணா நான் இதுவரைக்கும் இப்பிடி சந்தோசத்தில இருந்ததே இல்ல. கடவுள் எனக்கொரு வீட்டையும் குடுத்து ஆசீர்வாதம் பண்ணின மாதிரி இருக்கு.

என்னோட ரொம்ப ரொம்பப் பிரியமான கொழந்தையே, நான் அனுப்பி வச்ச நாலு சட்டத் துணிகளப் பத்தி என்ன சொல்ல வர்ற நீ? உனக்கு அது தேவைதானே? ஃபெடோரா மூலமா நான் தெரிஞ்சிகிட்டேன். உனக்கு ஏதாவது செஞ்சா எனக்கு சந்தோசம். நீ சந்தோசப்படணும். நான் எதாச்சும் செய்வேன் விட்ரு.

இண்ணிக்கி, இங்க குடியிருக்கற ராட்டா சியாயெவ், அதான் இலக்கியச் சந்திப்பு நடத்தற அரசாங்க உத்யோகஸ்தர், என்னை தேநீர் சாப்பிடக் கூப்டிருக்காரு. இதுவரைக்கும் இந்த மாதிரி மரியாதெ எனக்குக் கெடச்சதில்லெ. நான் இப்ப அவர் நடத்தற இலக்கிய சந்திப்புக்குப் போகப் போறேன். இலக்கியம் படிக்கப் போறோம்!

எதோ எந்த நோக்கமும் இல்லாமெ இத எளுதிட்டிருக்கேன். என்னோட அதிர்ஷ்டத்தப் பத்தி சொல்லத்தான் இத எளுதினேன்.

சித்திரப் பூவேல செய்யறதுக்கு உனக்கு கலர்துணி வேணுங்கறதெ தெரிசா மூலமா தெரிஞ்சிகிட்டேன்.

நான் வாங்குவேன். நான் வாங்கவே செய்வேன். கண்டிப்பா வாங்குவேன். கொஞ்சம் பட்டுத் துணிகூட வாங்கப் போறேன். நாளக்கி நான் அதக்குடுத்து சந்தோசப்படுவேன். உனக்கு அது சுத்தமா புடிச்சிருக்கும். என்ன வாங்கணும்கறது எனக்கு நல்லாவே தெரியும்.

உன்னோட உண்மையான நண்பன்,

மகார் தேவுஷ்கின்

ஜூன் 22

மேடம், வார்வரா அலெக்சியேவ்னா,

உங்கிட்ட ஒரு முக்கியமான விசயம் சொல்ல வேண்டி இருக்கு. எங்க குடியிருப்புப் பகுதியில ஒரு பரிதாப சம்பவம் நிகழ்ந்திருச்சு.

இண்ணக்கிக் காலைல, அஞ்சு மணிக்கு முன்னால, கொர்ஸ்போவுடைய சின்னப் பையன் இறந்திட்டான்! எதனால அப்பிடீங்கறது எனக்குத் தெரியலெ. ஏதோ விசக் காச்சல்னு சொல்லிக்கிட்டாங்க. ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

நான் பாக்கப் போனேன். ஒரே ஒரு ரூம்ல தான் மொத்தக் குடும்பமும் வாழ்ந்துகிட்டு இருக்காங்க. என்ன ஒரு பரிதாபம் தெரியுமா? அய்யோ எவ்வளவு கஷ்டம். அங்கே எல்லாம் தாறுமாறாக் கெடந்திச்சு. அங்கங்க சின்ன சின்னத்திரை தொங்குச்சு.

அவங்க முன்னாடியே ஒரு சின்ன சவப் பெட்டி வாங்கி வெச்சிருக்காங்க போல! பையனெ அதில படுக்க வச்சிருந்தாங்க. பையனுக்கு ஒம்பது வயது. நல்லாத்தான் இருந்தாண்ணு சொன்னாங்க. அவங்களப் பாக்கவே ரொம்பப் பாவமா இருந்திச்சு.

வாரென்கா, அந்த அம்மா அளுகவே இல்லெ. அப்பிடியே பிரம புடிச்சு உக்காந்திட்டு இருந்தாங்க. ஒரு ஆளு கொறஞ்சு போனதில ஏதோ கொஞ்சம் வசதிதாங்கற மாதிரி! ஏதோ பாரம் கொறஞ்ச மாதிரி!

அப்பறம் அந்த அம்மா கையில ஒரு கைக் கொழந்தெ. இன்னொரு சின்னப் பொண்ணு. அவளுக்கு ஆறு வயசு இருக்கும்போல. அவங்களுக்கு எந்தத் திக்கும் திராணியும் இருக்க மாதிரித் தெரியலெ. அய்யோ, என்ன கொடுமெ.

அந்தப் பையனோட அப்பா, அப்பிடியே ஒரு ஒடஞ்ச சேர்ல உக்காந்திட்டிருந்தாரு. அளுக்குக் கோட்டுதான். அவரு கண்ணுல தாரை தாரையாகக் கண்ணீரு. பையம் போன துக்கத்தினாலயாங்கற சந்தேகம் எனக்கு. எப்பவுமே அளுதுகிட்டு இருந்த மனுசன் மாதிரிதான் தோணுச்சு.

அனுதாபம் தெரிவிச்சு பேசப்போனா அவரு மூஞ்சியெல் லாம் செவந்துபோச்சு. என்ன பதில் சொல்லணும்னு தெரியாமெ கொளம்பற மாதிரிதான் தோணுச்சு.

அவரோட சின்னப் பொண்ணு சவப்பெட்டி மேல சாஞ்சி நிண்ணிட்டிருந்தா ஒதட்ல வெரலெ வெச்சுகிட்டு ஏதோ ஆழ்ந்த யோசனையிலெ இருக்கிற மாதிரி தோணிச்சு. வாரென்கா, அதப் பாக்க ரொம்பக் கஷ்டமா இருந்திச்சு. அவ காலடியில கந்தலான ஒரு பொம்ம கெடந்திச்சு. அந்தக் கொளந்தே அசையாமெ நிண்ணுகிட்டிருந்தா. அவங்க அம்மா அவளுக்கு எதோ தின்பண்டம் குடுத்தா. அவ அத வாங்கி அப்பிடியே கையில வச்சுகிட்டா. சாப்பிடலெ! ரொம்பப் பாவம்! இல்ல வாரென்கா?

மகார் தேவுஷ்கின்

ஜூன் 25

அன்புருவான மகார் அலெக்சியேவிச்!

நீங்கள் கொடுத்தனுப்பிய புத்தகத்தைத் திருப்பி அனுப்பியிருக்கிறேன். எவ்வளவு மோசமான புத்தகம்! இந்த மாதிரி புத்தகத்தை நான் கையால் தொடக்கூட மாட்டேன்! இந்த மாதிரி ஒரு வைரமணியை எங்கிருந்து தோண்டி எடுத்தீர்கள்? என்ன வேடிக்கையா? நீங்கள் இம்மாதிரிப் புத்தகங்களைப் படிக்க மாட்டீர்கள் என்று உறுதியாக நான் நம்புகிறேன். கொஞ்ச நாளில் எனக்கு நல்ல புத்தகம் கிடைக்கும். நான் அதை அனுப்பி வைக்கிறேன். இப்போது இதை முடித்துக் கொள்கிறேன். மேலும் எழுத நேரமில்லை.

வா. அலெ.

ஜுன் 26

அன்பு வாரென்கா,

உண்மை, என்னண்ணா, அந்தப் புத்தகத்தெ நான் முழுசாப் படிச்சுப் பாக்காமத்தான் அனுப்பிவச்சிட்டேன். சொல்லப்போனா, கொஞ்சமாப் படிச்சேன்னுதான் சொல்லணும். அது ஒரு விசித்திர மான புத்தகம்தான். சும்மா சிரிப்புக் கூட்டத்தான் அத அனுப்பி வச்சேன். பொழுதுபோக்கவும், சிரிக்கவும் தான் அத எளுதியிருக் காங்க. அதனாலதான் அனுப்பிச்சேன்.

இப்ப ரட்டாசியாயெவ் ஒரு நல்ல புத்தகம் குடுக்கறதா சொல்லியிருக்கார். நல்ல இலக்கியப் புத்தகமாம். உங்கிட்டயும் அந்த மாதிரி நல்ல புத்தகங்க இருக்கும். அடங்கப்பா, இந்த ஆளு என்ன மாதிரி எளுதராரு தெரியுமா!

உயிர்த்துடிப்புள்ள எளுத்து; மக்களக்கவர்ற மாதிரி ஒரு 'ஸ்டைல்!' ஒவ்வொரு வார்த்தையும் அழகா இருக்கும். சாதாரண வார்த்தயக்கூட அழகா அமச்சிடுவாரு. இத ஃபால்டோணி கிட்டயும், தெரிசா கிட்டயும் சொன்னேன். அவங்களுக்குக்கூட புரியற மாதிரி அழகா எளுத அவரால முடியும்.

அவரோட மாலைநேர சந்திப்புக்கு நான் போற வழக்கம் உண்டு. அவர் படிச்சுக் காட்டுவாரு பாரு, அப்பிடியே அஞ்சு மணிநேரம்! நாங்க கேட்டுகிட்டே இருப்போம். இலக்கியங்கறாங் களே அதவிட ஆளம். அவ்வளவு நல்லா இருக்கும். அப்பிடியே எளுத்தெல்லாம் பூப்பூவாய் பூக்கும். ஒவ்வொரு வார்த்தயும் ஒரு பூ. ஒரு பக்கத்தில பூக்கற பூக்களெ எல்லாம் சேத்து வச்சுக் கட்டினா ஒவ்வொரு பக்கமும் ஒரு பூச் செண்டுதான்!

நல்ல மனுசன். அன்பானவரு. ரொம்பப் பிரியமா இருப்பாரு. அவரெ யார்கூட ஒப்பிடறது? யார் கூட? யார் கூடயும் இல்லெ. நல்ல பேரும்புகளும் பெற்ற ஆள். நான் யாரு? ஒண்ணுமில்லெ. நான் கணக்கிலயே சேக்க முடியாத ஆளு. ஆனா, எங்கிட்டக்கூட மரியாதையாப் பளகுவாரு. அவரு எளுதினதெ எனக்குக் காட்னாரு. கொஞ்சத்தெ காப்பி பண்ணி வச்சிருக்கேன்.

அப்பறம், வாரென்கா, இங்க என்னமோ ஒரு 'இது' நடக்குது. நான் காப்பி எடுக்கறதுக்கு அவரு நல்ல ஊதியம் கொடுக்கறாருண்ணு ஒரு வதந்தியெ யாரோ கௌப்பி விட்டிருக்காங்க. இந்த மாதிரி வதந்தியெ எல்லாம் நீ நம்ப மாட்டேண்ணு எனக்குத் தெரியும்!

அந்த மாதிரி நான் செய்வனா? அவரோட சந்தோசத்துக்காக செஞ்சேன். மனசார செஞ்சேன். விருப்பப்பட்டுதான் செஞ்சேன். அவரு எதோ எனக்கு உதவி செஞ்சார்னா அது என்னோட சந்தோசத்துக்காக! இதுல என்ன இருக்கு? ரொம்பப் பக்குவமா பாக்க வேண்டிய விசயம். இல்லயா? அவரு நல்ல எளுத்தாளர்; அன்பானவர்; சரிசமானமில்லாத ஒரு எளுத்தாளர்!

வாரென்கா, இலக்கியம்கறது ரொம்ப நல்ல விசயம். இல்லயா? ரெண்டு நாளக்கி முன்னாலதான் தெரிஞ்சுகிட்டேன். அடேயப்பா, பிரமிப்பான விசயம்தான் அது. மனுசரோட இதயத்தெ பலப்படுத்தும். அவங்களுக்கு வளிகாட்டும். அப்பறம், மத்த அம்சங்களும் அதில நெறைய இருக்கும் போலத்தான் தோணுது. ரொம்ப நல்லாவே எளுதறாங்க!

இலக்கியங்கறது ஒரு படம் மாதிரி ஒரு ஓவியம் மாதிரி. அதே சமயத்தில ஒரு கண்ணாடி மாதிரியுங்கூட. உணர்ச்சிகளெ அப்பிடியே காட்டுது. ஒருவிதமான நுணுக்கமான விமர்சனமும்கூட. அதே சமயம் ஒரு பெரிய மாளிகைக்குள்ள போய்ப் பாக்கற மாதிரி. அப்பறம், பத்தரம் மாதிரியும்கூட. இதெல்லாமே நான அவங்ககிட்ட இருந்துதான் தெரிஞ்சிகிட்டேன். பாரும்மா, நான் வெளிப்படை யாகவே சொல்லிடறேன். நீ அவங்கள்ல ஒருத்தி! நீ அவங்ககூட ஒக்காந்து பேச வேண்டிய ஆளு. சகஜமா இருப்பாங்க அவங்ககூட இருக்கும்போது பொக பிடிக்கலாம். ஒண்ணும் பிரச்சனையே கெடையாது.

அவங்க தீவிரமா விவாதம் பண்றப்ப எனக்கு எதுவும் வெளங்காது. அப்பிடியே இந்தக் காதுல வாங்கி அந்தக் காதுல விட்ருவேன்! அந்த மாதிரி சந்தர்ப்பத்தில நான் மட்டுமா, நீ கூட அப்பிடித்தான் செய்வே!

நான் அப்ப படு மடையனா ஆயிடுவேன். எனக்கு வெக்கமாத்தான் இருக்கும். ஒரு சாயந்திரம் பூரா கேட்டுகிட்டு இருந்திட்டு ஒரு வார்த்த கூடப் புரியலேண்ணா எப்பிடி? நமக்கு அது எட்டாத விசயம் வாரென்கா. கொஞ்சம் படிக்கணும். நான் என்ன செய்யறேன். ஒய்வு நேரத்தில தூங்கறேன்! முட்டாள் மாதிரி தூங்கிடறேன். ஏதாச்சும் செய்யணும். உக்காந்து கொஞ்சமாச்சும் எளுதணும். அது நமக்கும் மத்தவங்களுக்கும் பிரயோஜனமா இருக்கும்.

பாரும்மா, அவங்க அதனால எவ்வளவு சம்பாதிக்கிறாங்க! கடவுள் அவங்கள மன்னிக்கட்டும்! இந்த ராட்டாசியேயவ் எவ்வளவு சம்பாதிக்கறாரு தெரியுமா? ஒரு பக்கத்துக்கு எவ்வளவு சம்பளம் தெரியுமா? சில நாளுகள்ல இவரு அஞ்சாறு பக்கங்கூட எளுதிடுவாராம். ஒரு பக்கத்துக்கு முன்னூறு ரூபிள்! என்ன

எளுதுவாரு? எதாச்சும் துண்டு, துணுக்கு... இப்பிடி. எதானாலும் சரி, "வை, ஐநூறு!" அப்பிடீம்பாராம். "பேசாதே! வச்சிட்டுப் போ",ண்ணு சொல்லிடுவாராம்! "இப்ப தொகை கொடுக்கலெ, அப்பறம் ஆயிரம் ஆயிடும்பாராம்!" பாத்தியா வாரென்கா!

அது மட்டுமில்லெம்மா. இதக்கேளு! ஒரு கவிதத் தொகுதி எளுதி வெச்சிருக்காரு. ரொம்ப சிறுசு. அதுக்கு என்ன வெலெ சொல்றாரு தெரியுமா? ஏளாயிரம்! ஆமா ஏளாயிரம் ரூபிள்! அதுக்கு ஒரு நெலத்தையே வாங்கிடலாம். ஒரு பெரிய வீட்டையே வாங்கிடலாம்.

அஞ்சாயிரம் வாங்கிக்கங்கண்ணு சொன்னதுக்கு, அதெல்லாம் முடியாதிண்ணு சொல்லிட்டாராம்! நான் சொன்னேன், "பேசாமெ அஞ்சு வாங்கிக்கங்க அய்யா! பெரிய தொகை தானே,"ண்ணு சொன்னா, "முடியாது. அவங்க ஏழுகுடுக்கறாங்க பாருங்க. திருட்டுப் பசங்க!" அப்பிடீங்கறாரு. அவருக்கு மத்தவங்க தந்தரமெல்லாம் நல்லாத் தெரியும் போல இருக்கு!

நாம இந்த இலக்கியம் பத்தி பேசிகிட்டு இருக்கறதால, "இத்தாலிய உணர்ச்சிகள்" அப்பிடீங்கற அவரோடு ஒரு புத்தகத்தில இருந்து ஒரு சின்னப் பகுதியெ காப்பி பண்ணி வெச்சேன். படிச்சுப்பாரு வாரென்கா. நீயே தெரிஞ்சுக்குவே.

"........ விளாதிமிர் நடுங்கிப் போனான். உணர்ச்சிகள் கொந்தளித்து அவனுக்குள் பொங்கி எழுந்தன. அவனது குருதியில் சூடு ஏறியது......."

"சீமாட்டியே, சீமாட்டியே! இந்த உணர்ச்சிகள் எவ்வளவு பயங்கரமானவை என்று உங்களுக்குத் தெரியுமா? இவை எவ்வளவு எல்லையற்றவை, எவ்வளவு வெறிபிடித்தவை என்பது உங்களுக்குத் தெரியுமா? ஆ, என் கனவுகள் என்னை ஏமாற்றிவிடவில்லை! நான் காதலில் அகப்பட்டுவிட்டேன். ஆனந்தப் பெருக்கோடு, பயங்கரமாக, பைத்தியகாரத் தனமாக நான் காதல் வெறி கொண்டு விட்டேன்."

"உங்கள் கணவரின் இரத்தம் முழுதும் சேர்ந்தாலும், கொதிக்கும் என் ஆத்மாவின் தாகத்தைத் தணிக்கச் சக்தியற்றது ஆகும்! தளர்ந்துபோன என் இதயத்தில் பரப்பப்பட்டுள்ள, பேரழிவு தரும் நரகத்தீயை, எந்த அற்பத் தடையாலும் அணைக்க முடியாது. ஓ என் ஸினைடா, ஸினைடா......"

"அதற்கவள் மெல்லிய குரலில், 'விளாதிமிர்,' என்று சொல்லியபடி அவனை நெருங்கி, அவன் தோளைப் பற்றினாள்.......

பரவசப்பட்ட ஸ்மெல்ஸ்கி 'ஸினைடா!' " என்று கூவினான். அவனது இதயத்திலிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. காதல் தேவதையின் பிரார்த்தனைப் பீடத்தில் தீ பற்றிக் கொண்டது. துரதிர்ஷ்டசாலிகளான காதலர்களின் இதயங்களை அது தரைமட்டம் ஆக்கிவிட்டது.

"பரவச நிலையில், 'விளாதிமிர்' என்று திரும்பத் திரும்ப அவன் பெயரை அவள் உச்சரித்தாள். அவளது மார்பு விம்மி மேலேழுந்தது. அவள் கன்னங்கள் சிவந்தன. அவள் கண்களில் தீ...."

"ஒரு புதிய, அச்சம் தரும் கலப்பு அங்கே நிகழ்ந்தது..........."

.............................................

"அரை மணி நேரம் கழித்து அவள் கணவன் அவளுடைய அந்தப்புரத்திற்குள் பிரவேசித்தான்! "

"அன்பே, நம்முடைய மேலான விருந்தினர்க்காக சமோவாரைப் பற்ற வைக்க வேண்டாமா?" என்று சொல்லிவிட்டு, தன் மனைவியின் கன்னத்தில் ஒரு முத்தம் பதித்தான்!"

*

இது எப்பிடி இருக்கு வாரென்கா? கொஞ்சம் ஒரு மாதிரியாத் தெரிஞ்சாலும் நல்லாத்தானே இருக்கு. எவ்வளவு நல்லா இருக்குண்ணா, ரொம்ப நல்லா இருக்கு!

அப்புறம் இன்னொரு சின்னப் பகுதியையும் காப்பி எடுத்து அனுப்பியிருக்கன் பாரு.

கத பேரு, 'யெர்மாக்கும் சுலைக்காவும்'

கொஞ்சம் கற்பன பண்ணிப்பாரு. யெர்மாக் கொசாக் தலைவன். சைபீரியாவக் கைப்பத்தின பயங்கரமான ஆளு. சுலைக்கா, சைபீரியாவெ ஆட்சி செஞ்சிருந்த ராசா. இவரெப் புடிச்சு சிறையில தள்ளிட்டாங்க. 'பயங்கர ஈவான்' எப்படிப்பட்ட ஆளுங்கறது உனக்குத்தான் தெரியுமே. இந்த யெர்மாக் அப்படிப்பட்ட கொசாக்கியன்.

யெர்மாக்குக்கும் சுலைக்காவும் நடுவுல நடந்த பேச்சக் கேளு............

"ஓ, என் அன்பே சுலைக்கா..... எங்கே அதை மறுபடியும் சொல்லு, மறுபடியும் சொல்லு......"

"உங்களை நான் காதலிக்கிறேன் யெர்மாக்!" என்று காதோடு சொன்னாள் சுலைக்கா.

"ஆ! வானகமே, பூமியே, உங்களுக்கு நன்றி. நான் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்திருக்கிறேன் தெரியுமா? நீ எனக்கு எல்லாவற்றையும் வழங்கிவிட்டாய். கொந்தளிக்கும் என் இதயம் சாந்தி பெற எல்லாவற்றையும் எனக்குத் தந்துவிட்டாய். என்னுடைய இளமைப் பருவத்திலிருந்து நான் ஆசைப்பட்டு வந்த எல்லாமும் எனக்குக் கிடைத்துவிட்டது. எனது வழிகாட்டி வடமீனே, நீ என்னை இங்கேதான் கொண்டு வந்து சேர்த்திருக்கிறாய். என்னை ஏன் இங்கே கொண்டு வந்திருக்கிறாய் என்பது எனக்கு இப்போது புரிகிறது. என்னருமை சுலைக்காவை நான் உலகறியச் செய்வேன். ஒரு பயலும் என்மேல் குற்றம் சுமத்த முடியாது; சாதாரண மனிதராயினும் சரி, கொடிய அரக்கராயினும் சரி. அவளுடைய மென்மையான இதயம் படும் துயரை அவர்களால் புரிந்து கொள்ள முடியாது."

"அவர்கள் சுலைக்காவின் ஒற்றைக் கண்ணீர்த் துளியில் ஒரு மகா காவியத்தையே தரிசிக்கலாம்! ஓ! அந்தக் கண்ணீர்த்துளியை என் முத்தத்தால் துடைத்துவிடப் போகிறேன். அதை நான் குடித்துவிடப் போகிறேன், இயற்கைக்கு அப்பாற்பட்ட, தெய்விகமான, வித்தியாசமான அந்தக் கண்ணீர்த் துளியை!"

அப்புறம் சுலைக்கா பேசினாள், "யெர்மாக், இந்த உலகம் பொல்லாதது. ஆண்கள் நேர்மையற்றவர்கள். அவர்கள் நம்மைக் கண்டனம் செய்யலாம். நம்மைத் தண்டிக்கலாம். என் இனிய யெர்மாக், என் தந்தையின் மாளிகையில், பனி உறைந்து கிடைக்கும் சைபீரியாவில் வளர்ந்த எனக்கு, உயிர்ப்பற்ற, உற்சாகமற்ற உங்கள் வெறுமைச் சூழலில் எவ்வாறு வாழ முடியும்? என் அன்பரே, என்னை உங்கள் மக்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள்."

"அப்படி யாரேனும் நடந்து கொண்டால் பட்டாக்கத்தி அவர்கள் கழுத்தை நோக்கிப் பாயும்," என்று உறுமினான் யெர்மாக்! அவன் பார்வை அங்கும் இங்குமாய் அலை பாய்ந்தது.

*

அந்த அளவு உணர்ச்சி வசப்பட்ட யெர்மாக், தன்னோட காதலி கழுத்து வெட்டப்பட்டுக் கிடக்கறதைப் பாக்க நேர்ந்தா எப்பிடி இருக்கும்? நீ என்ன நெனக்கிறே வாரென்கா?

கண பார்வையற்ற அவளோட தந்தை, 'குச்சும்' சிறை வைக்கப்பட்டிருந்த கூடாரத்தைவிட்டு எப்படியோ தப்பிச்சு யெர்மாக்கோட கூடாரத்துக்குள்ள, அவன் இல்லாதபோது உள்ள போயி, தன்னோட மக கழுத்தெ ஒரே வெட்டா வெட்டிப்போட்டான்! தன்னோட, அதிகாரம், ஆட்சி, மக, எல்லாம் போயிட்ட வெறி!

அதப் பாத்த யெர்மாக்குக்கும் ரத்தவெறி. 'எல்லாரையும் வெட்டித் தளறம் பாரு'ண்ணு கொதிச்சான். வெட்டுவேன், சீவுவேண்ணு வேகத்தில போனாலும், உயிர்க் காதலியெ இளந்த துக்கம் தாங்காம இர்டிஸ் ஆத்தில எட்டிக் குதிச்சுத் தற்கொல செஞ்சிகிட்டான்!

இதப் பத்தி என்ன நெனக்கிற வாரென்கா? அவரு எழுதியிருக்கிற கதைகள்ள ஒரு சின்ன எடுத்துக்காட்டுதான் இது.

சில விஷயங்களை அவரு ரொம்ப நகைச்சுவையா எளுதுவாரு. அதெல்லாம் படிச்சுக் காட்றப்ப நாங்க உளுந்து உளுந்து சிரிப்போம். ஆனா எதுவும் வினயமா இருக்காது. சும்மா வெளயாட்டாத்தான் நகைச்சுவை இருக்கும்.

ஆனா சுதந்தர சிந்தனை, விடுதலை பெற்ற போக்கெல் லாம் இருக்காது. ஆனா நல்ல ஒழுக்கமான மனுசன். அதனாலயே உயர்ந்த எளுத்தாளர்னு சொல்லலாம். மத்தவங்க மாதிரி இல்லெ.

உனக்குக்கூட இந்த மாதிரி யோசனைக வரும் இல்லெ? சரி. எனக்கு அந்த மாதிரி வந்து எளுதறேண்ணு வச்சுக்க. அது எப்பிடி இருக்கும்? யாருக்கும் சொல்லாமே திடீர்னு, ஒரு புத்தகம், 'மகார் தேவுஸ்கின்னின் கவிதைகள்' அப்படீண்ணு வந்தா? என்ன சொல்றே?

நான் அப்போ, அப்படியே நோவ்ஸ்சி சாலைப்பக்கம் நடந்து போறெண்ணு வச்சிக்க, பாக்கறவங்க என்ன சொல்வாங்க?

'அதோ போறாரு பாரு, அவருதான் கவிஞர் தேவுஸ்கின்!' 'நெஜமாவா? அவரா?' அப்பிடீண்ணு பேசிக்குவாங்கல்ல?

சரி. என்னோட பூட்ஸ் கிழிஞ்சு தையல் போட்டிருக்கு. நாங்கூட உனக்குக் காட்டியிருக்கனே! ஒட்டுப்போட்டதுதான். அடிப்பாகம்? உங்கிட்ட சொல்றதுக்கு என்ன, அப்பப்ப கழண்டு வந்திடும். அதெ வழியில வர்றவங்க பாத்திட்டா? 'கவிஞர் தேவுஸ்கின் கிழிஞ்ச காலணி போட்டுகிட்டுப் போறதப்பாத்தியா', அப்படீம்பாங்க!

ஏதாச்சும் ஒரு பிரபு வம்ச சீமாட்டி அதப் பாத்திட்டா என்ன சொல்லுவா? சொல்லும்மா! ம்.. அவங்கல்லாம் அதெக் கவனிக்கவே மாட்டங்க. ஒரு சாதாரண கிளர்க்கோட பூட்செ. அவங்கெல்லாம் கவனிப்பாங்களா?

ஆனா, ராட்டாசியாயேவ் அப்பிடி இல்லெ. அவரு சீமாட்டிகளை எல்லாம் நல்லாத் தெரிஞ்சவரு. சாதாரணமா அவங்கள எல்லாம் போய்ப் பாத்திட்டு வருவாரு.

சே! இதெல்லாம் எதுக்கு உங்கூட ஒளறிட்டு இருக்கேன். கொஞ்சம் நல்ல புஸ்தகங்களை உனக்கு அனுப்பி வைக்கறேன். பால் தெ கோக் அப்பீண்ணு ஒருத்தரு. அவரு உனக்குப் பொருத்தமா இருப்பாரு. அவரு பீட்டர்ஸ்பர்க்ல ரொம்பப் புகழ் பெற்றவர்னு சொல்றாங்க. ஆனா அவர் மேல பெரிய விமர்சகர்களுக்கு ரொம்ப வெறுப்பு!

நான் ஒரு பவுண்டு இனிப்பு வாங்கி அனுப்பியிருக்கேன். நல்லா சாப்பிடு. சப்பி சாப்பிடறதுதான் நல்லது. இல்லேண்ணா பல்லு வலி வந்திடும், கல்கண்டு போட்ட இனிப்பு வேண்ணா சொல்லு வாங்கி அனுப்பறேன்.... குட்பை. கடவுள் அருள் உனக்கு இருக்கட்டும் அன்பே.

உன்னோட நன்றியுள்ள நண்பன்
மகார் தேவுஸ்கின்

ஜூன் 27

அன்புள்ள அய்யா, மகார் அலெக்சியேவிச் அவர்களே,

என்மேல் அன்பு கொண்ட யாரோ எனக்கொரு வேலை வாங்கிக் கொடுக்க விரும்புவதாக ஃபெடோரா சொன்னாள். ஏதோ ஓர் இல்லத்தில் கவர்னஸ் வேலை. என் நண்பரே, நான் அதை ஏற்றுக் கொள்ளலாமா? வேண்டாமா?

நான் யாருக்கும் பாரமாக இருக்க விரும்பவில்லை. வேலைக்கு போவது நல்லது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஆனால், முன்பின் தெரியாத ஒரு வீட்டில் போய் இருந்து வேலை செய்வதை நினைத்தால் பயமாக இருக்கிறது.

சில நிலப் பிரபுக்கள் இருக்கின்றார்கள். கேள்விகள் கேட்டுத் துளைத்து எடுத்து விடுவார்கள். நான் என்ன பதில் சொல்ல முடியும்? நான் சமூகத்தில் பழகி அறியாதவள். கோபக்காரியும்கூட. ஏதாவது ஒரு மூலையில் முடங்கி அமைதியாகக் காலம் கழித்துவிடலாம் என்றுதான் தோன்றுகிறது. பழக்கப்பட்ட இடத்தில் வாழ்வதுதான் நிம்மதியானது.

ஒரு புதிய வீட்டில் பிரவேசித்து என்ன நிம்மதி கிடைத்துவிடும்? எனக்கு என்ன வேலை கொடுப்பார்கள். குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதா? மற்றவர்களும் அங்கு இருப்பார்களே!

ஃபெடோரா, குறிப்பிட்ட அந்த வீட்டில் இரண்டு ஆண்டுகளில் மூன்றுபேரை மாற்றி விட்டார்களாம்! அதனால், மகார் அவர்களே, நான் போய்ச் சேரவா, வேண்டாமா, சொல்லுங்கள்.

நீங்கள் ஏன் என்னைப் பார்க்க இங்கே வருவதே இல்லை. அவ்வப்போது அங்கிருந்து பார்ப்பதோடு சரி. ஞாயிற்றுக்கிழமை தேவாலயப் பிரார்த்தனை சமயத்தில் நாம் பார்த்துக் கொள்வதோடு சரி.

நீங்கள் என்ன இப்படி சமூக உறவுகள் அறியாதவராக இருக்கிறீர்களே! சரி. நீங்களும் என்னைப் போலத்தான்! நீங்கள்

என்னை நேசிக்கவே இல்லை. சில சமயம் எனக்கு அது வருத்தமாகவும், சோகமாகவும் இருக்கிறது.

அந்தி சாயும் வேளைகளில், தன்னந்தனியே உட்கார்ந்திருக்கிறேன். ஃபெடோரா ஏதே வேலையாக வெளியே போயிருப்பாள். நான் ஒருத்தி மட்டும் தனித்து அமர்ந்து யோசித்து, யோசித்துக் களைத்துப் போய் விடுகிறேன்.

எல்லாம் பழைய நினைவுகள் ஒன்றன்பின் ஒன்றாக, இன்பமும் துன்பமும் கலந்த நினைவுகள் வரிசையாக என் கண்முன் வந்து போகின்றன. எல்லாமே ஒரு மூடு பனித்திரைக்குள் பார்ப்பதுபோல மங்கலாக...

முக்கியமானவரின் முகங்கள் மட்டும் தெளிவாக. குறிப்பாக என் அம்மாவின் முகம்.... அப்புறம் கனவுகள்.

எனது உடல் நிலை மோசமடைந்து வருகிறது. நான் மிகவும் பலவீனம் அடைந்துவிட்டேன். காலையில் படுக்கையை விட்டு எழுந்ததுமே இருமல். மோசமான இருமல். நான் சீக்கிரம் செத்துப்போவேன். ஆமாம். அது எனக்கு நன்றாகத் தெரிகிறது. அப்போது என்னை யார் புதைக்கப் போகிறார்கள்? என் சவப்பெட்டிக்குப் பின்னால் யார் வரப்போகிறார்கள்? எனக்காக யார் கண்ணீர்விடப் போகிறார்கள்?.....

ஒருவேளை நான், முன்பின் அறியாத இடத்தில், ஏதோ ஒருவீட்டின், ஏதோ ஒரு மூலையில் அனாதையாகச் சாக விரும்பினால்..... அட கடவுளே, என்ன ஒரு பரிதாபமான வாழ்க்கை இது மகார் அவர்களே!

நண்பரே, ஏன் எனக்கு இப்படி இனிப்புகளை ஊட்டிக் கொண்டே இருக்கிறீர்கள்? இவ்வளவு பணம் உங்களுக்கு எங்கே கிடைக்கிறது என்று எனக்கு விளங்கவே இல்லை. கவனம் நண்பரே! பண விசயத்தில் கவனமாக இருங்கள். ஃபெடோரா, நான் சித்திரத்தையல் பூ வேலை செய்த கம்பளிப் போர்வையை விற்கப் போகிறாள். அதற்கு ஐம்பது ரூபிள் நோட்டுகள் கிடைக்கும். நல்ல தொகையல்லவா? நான் அவளுக்கு மூன்று வெள்ளி ரூபிள் கொடுத்துவிடுவேன்.

ஐம்பது என்பது குறைவுதான் என்றாலும், கணிசமான தொகைதானே? நான் எனக்காக ஓர் உடை தைத்துக் கொள்வேன். நல்லதாகவே தைத்துக் கொள்வேன். உங்களுக்கும் ஒரு சிறு கோட்டு தைத்துக் கொடுப்பேன். நானே தைப்பேன். அதற்காக நல்ல துணியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஃபெடோரா, எனக்கொரு புத்தகம் கொண்டு வந்து தந்தாள். 'பெல்கின் கதைகள்' என்று பெயர். உங்களுக்கு அதை அனுப்பி வைத்கிறேன். படித்துப் பாருங்கள். தயவு செய்து அதை அழுக்கு ஆக்கிவிட வேண்டாம். இரவல் புத்தகம். அப்புறம் சீக்கிரம் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்; புஷ்கின் எழுதிய புத்தகம்.

இரண்டு வருடங்களுக்கு முன்பு அதை நானும் அம்மாவும் சேர்ந்து படித்திருக்கிறோம். இப்போது இதைப் படிக்க வருத்தமாக இருக்கிறது. உங்களிடம் ஏதாவது புத்தகம் இருந்தால் அனுப்பி வைக்கவும். ஒரே ஒரு நிபந்தனை, அது ரட்டாசியாயேவ் கொடுத்ததாக இருக்கக் கூடாது! வேறு யாரிடமாவது வாங்கிய தாக இருக்க வேண்டும். அவர் கொடுப்பது, தான் எழுதியதாகவே இருக்கிறது. அவர் எழுத்து உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?

சுத்த மடத்தனமான படைப்பு அவருடையது! ...... சரி. முடிக்கிறேன். நிறைய அரட்டை அடித்துவிட்டேன்! சோகமாக இருக்கும்போதெல்லாம் இப்படித்தான். இது ஒரு மருந்து. மனசில் இருப்பதையெல்லாம் இப்படிக் கொட்டி விட்டால் ஆசுவாசமாக இருக்கிறது. குட்பை, குட்பை, நண்பரே!

உங்கள்

வா. அலெ.

ஜூன் 28

எனதன்பு வார்வரா அலெக்சியேவ்னா!

போதும், உன் புலம்பல நிறுத்து! உனக்கு வெக்கமா இல்லயா? என்னோட சின்னத் தேவதையே, எப்பிடி உனக்கு இப்பிடியெல்லாம் தோணுது? உனக்கு எந்த வியாதியும் இல்லெ. இல்லவே இல்ல கண்ணே!

நீ அப்பிடியே ஒரு பூவா பூத்து நிக்கறே. உண்மையாவே நீ, பூத்திருக்க ஒரு பூதான். என்ன கொஞ்சம் வெளுத்துப் போயிட்டே. அவ்வளவுதான். என்ன இப்பிடி கனவு, தேவையில் லாத யோசனை எல்லாம்? இதுக்காக நீ வெக்கப்படணும்மா.

இனி இப்பிடிக் கனவு வந்தா அதுமேல காறித் துப்பிடு! ஆமா, துப்பிடு! இத பாரு, நான் நல்லாத் தூங்கறேன். எனக்கு எந்தப் பிரச்சனையும் இல்லெ. என்னப் பாரு! நான் நல்லா, அமைதியா வாழ்ந்திட்டுதான் இருக்கேன். புதுசாப் பூத்த டெய்ஸி மலர் மாதிரி பாரு!

நீ இந்த மாதிரியெல்லாம் யோசிக்க வெக்கப்படணும். நல்லா நிமிந்து நில்லு! உன் தலக்குள்ள ஏதாச்சு மோசமான யோசனைக வந்தா. அதத் தடுத்து நிறுத்து. என்ன சொன்னே, வேலக்காரியாப் போகப் போறயா? வேண்டாம். வேண்டாம்! என்ன உனக்கு இந்த மாதிரி யோசனையெல்லாம் வருது!

நான் உனக்கு எதிரா ஆயுதம் தாங்கி, ஒரு போர்வீரன் மாதிரி, எதுத்துப் போராடப்போறேன்! இத பாரு, என்னோட பளயகோட்டெ விக்கப் போறேன். வெறும் சட்டய மட்டும் மாட்டிகிட்டு ரோட்ல நடக்கப்போறேன்! நமக்கு எதுவும் தேவையில்லம்மா.....

எனக்கு உன்னப் பத்தித் தெரியாதா? இந்த மாதிரி யோசனெயெல்லாம் வர்றதுக்குக் காரணம் அந்த ஃபெடோராதான்! அவ ரொம்ப அற்பத்தனமானவ. உம் மண்டக்குள்ள என்னென்ன எல்லாம் போட்டிருக்கா! அவள நம்பாதே! இந்த வயசில உனக்கு எல்லாம் தெரிஞ்சிடுச்சிண்ணு நெனச்சுக்காதெ.....

அவ மோசமான பொம்பள. சண்டக்காரி. கோள் சொல்லி. வெறட்டி வெறட்டி, தன்னோட புருசனெ சுடுகாடு வரைக்கும் வெறட்டிட்டா! கோபத்த மூட்டுவா, ஏமாந்து போயிடாதெ.

உனக்கு ஏதாச்சும் ஆனா நான் எங்கபோவேன்? வேண்டாம்மா. அந்த மாதிரி யோசனகளெ தூக்கி வெளில போட்ரு! உனக்கு இங்க என்ன கொற? உம்மேல எவ்வளவு நம்பிக்க வச்சிருக்கேன். தெரியுமா? நீ எங்களயெல்லாம் நேசிக்கிறே.

இப்பிடியே போயிட்டிரு. கொஞ்சமா தையல் வேல செய்யி! படி! முடிஞ்சா தையல விட்டிர்றது நல்லது. எங்களோட இரும்மா. கொஞ்சம் சொந்தமா யோசன பண்ணிப் பாரு! அப்பறம் என்ன.....

உனக்காக கொஞ்சம் புஸ்தகங்க வாங்கப்போறேன். அப்பறம் நாம ரெண்டுபேரும் மறுபடியும் எங்கயாச்சும் அப்பிடியே நடந்துபோலாம். அதனால் உற்சாகமா இரு. மண்டக்குள்ள குப்ப கூளத்தை யெல்லாம் கொட்டிக்காதே. சீக்கிரம் வந்து உன்னப் பாக்கறேன். அதுக்குக் பதிலா நான் சொல்றதெ நீ கேக்கணும்.

தப்பு! ரொம்பத் தப்பு! நான் படிக்காதவன், அது எனக்கே தெரியும். சின்ன வயசில் பள்ளிக்கூடத்தில் நான் மோசமான பையன்தான். அதப்பத்திப் பேசி என்ன ஆகப்போகுது? ஆனா, ரட்டாசியாயேவுக்கு ஆதரவாதான் நான் பேசுவேன்! உனக்குப் பிடிக்க லேண்ணா விட்ரு!

அவரு என்னோட சிநேகிதரு. அதனால அவருக்கு நான் ஆதரவாளன்! நல்லாத்தானே எளுதறாரு. ரொம்ப நல்லாவே. ரொம்ப ரொம்ப நல்லாவே. நீ சொல்றதே நான் ஒப்புக்க மாட்டேன். ஆமா, ஒப்புக்கவே மாட்டேன்! என்ன அளகா, கலர்கலரா எளுதாரரு! எத்தனையோ புதுப்புது யோசன எல்லாம் அங்கங்க சொல்றாரில்லே? நல்லாத்தான் இருக்கு?

நீ கொஞ்சம் கூட ஈடுபாடில்லாமெ, உணர்ச்சியில்லாமப் படிச்சிருப்பே. அதான் அதான் வாரென்கா. மோசமான மனநிலைய படிச்சா அப்பிடித்தான் இருக்கும். ஃபெடோரா கிட்ட கோவப்பட்ட நேரத்தில படிச்சிருப்பே அல்லது எதாவது பிடிக்காதது நடந்திருக்கலாம். நீ கொஞ்சம் உணர்ச்சியோடு படிச்சுப் பாரு!

சந்தோசமா உற்சாகமா, நல்ல மனநிலையில் இருக்கறப்பப் படிச்சுப்பாரு!

அப்ப, உன்னோட வாயில ஒரு இனிப்புத் தின்பண்டம் இருந்தாக்கூட நல்லது! அப்பப்பாரு, எப்பிடி இருக்குன்னு. அப்பறம், அவரவிட பெரிய எளுத்தாளர்க இருக்கலாங்கறதெ நான் ஒப்புத்துக்க மாட்டேன். அப்பிடியே நல்லா எளுதறவங்க இருந்திட்டாலும் இவரவிடப் பெருசா இருக்க முடியாது. அவ்ளோ நல்லா எளுதறாரு. ஆமா, நல்லாவே எளுதறாரு. அவருக்கு அது நல்லாத் தெரிஞ்ச சமாச்சாரம்.

சரி. விடு. இதுக்கு மேல என்னால எளுத முடியாது. கொஞ்சம் வேற வேல இருக்கு. அதப் பாக்கணும். அன்பானவளே, என் விலை மதிக்க முடியாத சிறு பூவே, அமைதியா இரு!

ஆண்டவர் உன்னை ஆசீர்வாதிப்பாராக!

உன் நன்றியுள்ள நண்பன்

மகார் தேவுஷ்கின்

பி.கு:

புத்தகம் அனுப்பி வச்சதுக்கு நன்றி. புஷ்கினெ நாம படிப்போம். இண்ணக்கி சாயந்திரம் கண்டிப்பா உன்ன வந்து பாக்கறேன்.

ஜூலை 1

எனதன்பிற்குரிய மகார் அலெக்சியேவிச்!

இல்லை நண்பரே, இல்லை. உங்கள் சூழலில் எனக்கொரு இயல்பான வாழ்க்கை இல்லை. அந்த வேலையை உதறித் தள்ளுவது சரியில்லை என்றே, நினைக்கிறேன். அங்கே எனக்கொரு ரொட்டித் துண்டாவது கிடைக்காமலா போய்விடும்?

நான் அங்கே கடுமையாக உழைப்பேன். அந்தப் புதியவர்களின் அன்பைப் பெறுவேன். தேவைப்பட்டால் என் குணாதிசயத்தையே மாற்றிக் கொள்வேன். அன்னியரிடையே வாழ்வது சிரமம்தான். அவர்களிடம் கருணையை எதிர்பார்ப்பது முடியாததுதான், ஆனால், கடவுள் எனக்கு அருள் புரிவார்.

நான் எப்போதும் இவ்வாறு சமுதாய உணர்வற்று வாழ்ந்திருக்க முடியாது. சமூகத்தோடு ஒட்டாமல் வாழ முடியாது. எனக்கு முன் அனுபவம் உண்டு. நான் சிறுமியாக இருந்தபோது ஞாயிற்றுக் கிழமைகளில் குதியாட்டம் போடுவேன். ஒரே ஆனந்த பரவசம்தான். மாலை நேரம் வந்ததோ உயிரே போவதுபோல இருக்கும்! மறுநாள் காலை பள்ளிக்குப் போக வேண்டுமே!

அங்கே, பள்ளியில் எல்லாமே மோசம். கடுமையான கட்டுப்பாடு. அடக்குமுறை. எங்கள் மேற்பார்வையாளரான பெண்மணி மிகவும் கோபக்காரி. ஞாயிறு அந்திப் பொழுதில் ஒரு மூலையில் அமர்ந்து தனியே அழுவேன். என்னை சோம்பேறி என்பார்கள். படிப்பதற்கு நான் பின் வாங்கியதே இல்லை. அப்புறம் என்ன! வேறு வழியே இல்லாமல் இந்தக் கொடிய பள்ளி எனக்குப் பழக்கமாகிவிட்டது!

பின்னால், பள்ளியை விட்டு விலக நேர்ந்தபோது, நான் அழுதேன். என் தோழிகளைவிட்டுப் பிரிய மனமில்லாமல் நான் கண்ணீர்விட்டேன்.

அப்படித்தான் எல்லாம் பழக்கமாகிவிடுகிறது. நமது இரண்டு தரப்பாருக்கும் இது பாரம்தான். பிரியும் எண்ணமே என்னைச் சித்திரவதை செய்கிறது. ஃபெடோரா, பாவம் என்ன

செய்வாளோ என்ற கவலை. அதிகாலை முதல் இரவு வரை எவ்வளவு சிரமப்படுகிறாள். வீட்டு வேலைகள், துணி வெளுப்பது எல்லாமே அவள்தான் பாவம், வயதானவள் அவளுக்கும் சிறிது ஓய்வு வேண்டாமா?

நீங்களோ எல்லாக் காசையும், கடைசி செப்புக் காசு வரை எனக்கே செலவழிக்கிறீர்கள். உங்கள் எதிர்கலத்திற்காக நீங்கள் ஒன்றுமே சேமிக்கவில்லை. உங்களிடம் உள்ள பொருள்களையும் கூட எனக்காக விற்கத் துணிந்துவிட்டீர்கள். எது தேவைப்பட்டாலும் உடனே நிறைவேற்றி விடுகிறீர்கள். என்னை விடுவதே இல்லை.

உங்கள் மேலான அருள் உள்ளத்தை நான் மதிக்கிறேன். இப்போது நீங்கள் சொல்வது சரியல்ல. உங்களுக்கு எதிர்பாராமல் ஏதாவது பணம் வந்து சேரலாம். அல்லது போனஸ் கிடைக்கலாம். அதெல்லாம் இப்போதைக்கு. அப்புறம் என்ன? வருங்காலத்திற்கு என்ன?

உங்களுக்குத் தெரிந்த விசயம்தான். நான் உடல் நலம் குன்றியவள். எப்போதும் ஏதாவது ஒரு விவகாரம். உங்களைப் போல உழைக்கவும் என்னால் முடியாது. தொடர்ந்து எனக்கு வேலை கிடைத்துக் கொண்டே இருந்தால் மகிழ்ச்சிதான். ஆனால், நிலைமை என்ன? என் மீது மிகுந்த அன்பு பாராட்டும் உங்கள் இருவரையும் நினைக்கும்போது என் இதயம் தகர்ந்து போகிறது. உங்களுக்கு எந்த விதத்திலும் பயன்படாத பாரமாக நான் எவ்வாறு தொடர்ந்து இருக்க முடியும்?

என் உதவி எந்த விதத்தில் உங்களுக்குப் பயன்பட்டிருக்கிறது? நான் உங்களோடு இதய பூர்வமான நேசத்தில் இருக்கிறேன் என்பது தவிர, என்னால் வேறு என்ன பயன்?

உங்களை நான் இதய பூர்வமாக, ஆழமாக ஆத்மார்த்தமாக நேசிக்கிறேன். என் தலைவிதிதான் கசப்பாக இருக்கிறது. எப்படி நேசிப்பது என்று எனக்குத் தெரியும். என்னால் அப்படி நேசிக்கவும் முடியும். அவ்வளவுதான். ஆனால் செல்வம் சேர்க்க எனக்குத் தெரியாது.

உங்கள் அன்பான உதவிகளுக்கு என்னால் எவ்வாறு கைம்மாறு செய்ய முடியும்!

இனி என்னை அந்தரத்தில் ஊசலாட விட்டுவிட வேண்டாம். யோசித்துச் சொல்லுங்கள். அந்த வேலையை நான் ஏற்பதா, வேண்டாமா?

பதிலை எதிர்பார்க்கும்,

உங்கள் நேசத்திற்குரிய,

வா. அலெ.

ஜூலை 1

விபரீதம் விபரீதம் வாரென்கா, சுத்தமான விபரீத எண்ணம் அது! உன்னோட சின்ன மூளைல வேற எதுவுமே தோணாதா? அது சரியில்லே! சரியே இல்லே! எல்லாமே விபரீதமான எண்ணங்கள்னு தான் எனக்குத் தோணுது. எங்ககூட இருக்கறதில உனக்கு என்னதான் இல்லாமல் போயிடுச்சு. சொல்லும்மா, சொல்லு!

நாங்க உன்ன நேசிக்கிறோம். நீ எங்கள நேசிக்கறே. அப்பறம் என்ன? இதவிட்டிட்டு முன்னப் பின்னத் தெரியாதவங்க வீட்ல போயி எப்பிடி? உனக்கு அந்த அனுபவமே இல்லயே.

நல்லவேள என்னெ அபிப்பிரயம் கேட்டே. அந்நியர்கள்னா என்னண்ணு தெரியுமா? எனக்குத் தெரியும். அனுபவம் இருக்கு. கோவக்கார ஆளுங்க வாரென்கா. ரொம்பக் கோவக்காரரா இருப்பாங்க. உன்னோட மனசு எவ்வளவு சாந்தமானது. ஏதாச்சும் கொற சொல்லிட்டாப் போதும். நம்மள கிளிச்சுப் போடுவாாங்க. ஒரு பார்வை பாப்பாங்க பாரு.....

இந்தச் சின்ன பறவக் கூண்டில நீ எங்க கூட சந்தோசமா, பாதுகாப்பா இருக்கே. நீ எங்கள விட்டுப் போயிட்டா, நாங்க என்னதான் செய்வோம்! என்னப்போல ஒரு வயசானவன் கதி என்ன? நீ எங்களுக்குத் தேவ இல்லயா? நீ எங்களுக்குப் பிரயோஜனமே இல்லயா? நீ என்ன நெனக்கறே?

இல்லம்மா. நீயே யோசன பண்ணி, முடிவெடு! நீ எப்பிடி எங்களுக்குப் பயன்பாடாமல் போயிருவே? நீ எங்களுக்கு ரொம்ப ரொம்பத் தேவை. எங்க மேல உன்னோட செல்வாக்கு எவ்வளவு இருக்கு, உனக்குத் தெரியுமா?

நான் உன்ன நெனச்சாலே, எனக்கு உற்சாகமா இருக்கு. நான் அப்பப்ப என் நெனவுகளைக் கொட்டி உனக்குக் கடிதங்க எழுதறேன், இல்லயா? எனக்கு விரிவான உன்னோட பதில் கெடக்கிதே.

உனக்கு ஒரு தொப்பியும் கொஞ்சம் ஆடைகளும் வாங்கியிருக்கேன். நீயும் அடிக்கடி எனக்கு எதாச்சும் அனுப்பிட்டு

தானெ இருக்கே...... அதெப்படி நீ எங்களுக்கு உபயோகமில்லாத ஒருத்தியாப் போயிர முடியும்?

இந்த வயசான காலத்தில தனியா நான் என்னதான் பண்றது? நான் எதுக்கும் உதவாதவனாச்சே! இதெல்லாம் யோசிச்சுப் பாரு, வாரென்கா! நல்லா ஆழமா யோசிச்சுப்பாரு! ‘நான் இல்லாமப் போனா, இவங்க என்னதான் ஆவாங் களோ’ண்ணு நிதானமா யோசிச்சுப்பாரு!

நான் உங்கூடவே பழகிட்டேன். இல்லேண்ணா எனக்கு என்ன ஆகும் தெரியுமா? நான் நேரா நேவா ஆத்துக்குத்தான் போவேன். அவ்வளவுதான். அதுதான் என் முடிவா ஆயிடும்! ஆமா, அதுதான் நடக்கப்போகுது, வாரென்கா! நீ இல்லாமெ எனக்கு ஒண்ணுமே இல்ல.

என்னருமைப் பெண்ணே வாரென்கா, என்ன ஒருத்தன் பெட்டியில வச்சு, வால்கோவோ கல்லறைத் தோட்டத்துக்கு வண்டியில கொண்டுபோவான். வண்டிக்குப் பின்னால ஒரு பிச்சக்காரிதான் ஓடி வருவா!

நீ அங்க வந்து என் பெட்டி மேல மண்ணத் தூவுவியா? அப்பறம் என்னெ அங்கயே விட்டிட்டு நீ தனியா திரும்பிப் போயிடுவயா? அது பாவமில்லயா? ஆமா பாவம்தானே’ம்மா? நிச்சயமா கடவுள் சாட்சியா அது பாவமேதான்.

சரி’மா. உன்னோட புத்தகத்த நான் திருப்பி அனுப்பறேன். என்சின்னச் சிநேகிதியே வாரென்கா, இதப் பத்தி என் அபிப்ராயத்தக் கேக்றயா? என்னோட வாழ்க்கையிலேயே இந்த மாதிரி அற்புதமான புத்தகங்களெ நான் இதுவரைக்கும் படிச்சதே இல்லெ.

நான் இப்ப உன்னக் கேக்கப் போறேன். இது எப்பிடி இருக்கு?

நான் இதுவரைக்கும் எப்பேர்ப்பட்ட முட்டாள இருந்திருக் கேங்கறது இப்ப நல்லாத் தெரியிது. ஆண்டவர் அதற்காக என்னை மன்னிப்பாராக! இதுவரெ நான் என்னதான் பண்ணிகிட்டு இருந்தனோ. நான் எந்தக் காட்டுக்குள்ளயோ இருந்து வெளிய

வந்தவன்! எனக்கு எதுவும் தெரியாது, ஒண்ணுமே தெரியாதுங் கறது இப்பத் தெரியிது ஆமா. எனக்கு ஒண்ணும் தெரியாது!

நான் நேரடியாகவே சொல்லிடறேன், வாரென்கா - நான் படிச்சவனில்லே. ரொம்பக் கம்மியாத்தான் படிச்சிட்டு வர்றேன். ஒண்ணுமே இல்லேண்ணுதான் சொல்லணும். 'ஒரு மனிதனின் ஓவியம்', படிச்சேன் நல்லாவே இருந்திச்ச. அப்பறம் ஒரு சின்னப்பையனப் பத்தின கத, அப்பறம் 'போஸ்ட் மாஸ்டர்' படிச்சேன். அதுக்குமேல ஒண்ணும் படிக்கலெ.

இது, ஒரு வாழ்க்கயெ அப்பிடியே கண் முன்னால விரிச்சு வெச்சமாதிரி இருக்கு. இதப் படிக்க ஆரம்பிச்ச ஒடனே ஒருவிதமான ஆத்மீக அர்த்தம் வெளிப்படுது. எனக்கு உன்னோட புத்தகம் ரொம்பப் புடிச்சுப்போச்சு. சில சமயங்கள்லெ வெளங்காமக்கூட போயிடுது. என்னால சில முக்கியமான புத்தகங்களப் படிக்க முடியாது. நான் அவ்வளவு புத்திசாலி இல்லயே.

ஆனா உனக்கு நல்ல வெளங்கும். படிச்சுப் பாரு. நானே எழுதுன மாதிரிகூட இருக்கு. வெளக்கமாத்தான் எழுதியிருக் காரு. நான் ஏன் இந்த மாதிரி எழுதலெ? இதில் வர்ற சாம்சன் வைரின்ங்கறவருக்கு ஏற்பட்ட அனுபவங்க எனக்கும் ஏற்பட்டிருக்கு. நம்மச் சுத்தி எத்தனெ சாம்சன் வைரின்க இருக்காங்க தெரியுமா? பாவம் ரொம்ப ஏழை. ஆனா நல்ல மனசு அவருக்கு. ஆனா, ஆதரவு மட்டும் இல்லெ. இதயெல்லாம் எவ்வளவு விரிவா விளக்கியிருக்காரு தெரியுமா?

அவரு திடீர்னு மனசு ஒடஞ்சு போயி குடிகாரரா மாறிடறாரு. அதப்படிச்சப்ப எனக்குக் கண்ணீர் வந்திருச்சு. புத்தி கெட்டுப்போயி, எங்கயோ விழுந்து கெடந்து, பகலெல்லாம் ஆடுகளுக்கு நடுவுல படுத்துக் கெடந்து, அவரே அழுதுகிட்டு, அவரோட மகள் துர்யா ஷாவே இழந்தத நெனச்சுக் கண்ணீர் விட்டு..... அடடா, உண்மையான வாழ்க்கை. படிச்சுப் பாரு. நிஜமான வாழ்க்கை துடிப்போட நம்ம கண் முன்னால.....

அப்பறம்.... தெரிசா இருக்கா. கதைல வர்ற சாம்சன் மாதிரியே அந்த அரசாங்க உத்யோகஸ்தர் பேருதான் வேற. இவுரு

பேரு கோர்ஸ்கோவ். இந்த மாதிரி எனக்கும் ஏற்படலாமே. யாருக்கும் ஏற்படலாமே.

இதுதான் வாழ்க்கை. வாரென்கா, பாவம், என்னை வளச்சுப் புடிக்கலாம், திடீர்னு. வேண்டாம்'மா போயிடாதெ. ரெண்டு பேரும் அழிஞ்சு போயிருவோம். என்னருமை சின்னப் பூவே, கடவுள் கருணையால அந்த எண்ணங்கள யெல்லாம் தூக்கிப் போட்ரு. அது என்னையும் சித்ரவதெ பண்ணுது.

சரி'மா. எப்பிடி இருக்கே? சிறகு முளைக்காத சின்னக் கூட்டுப் பறவை நீ. எப்படி சாப்பிடுவே? எப்படி உன்னைப் பகைவரிடமிருந்து காப்பாத்திக் கொள்வே? வாரென்கா, தைரியமாக நிமிர்ந்து நில்! புத்தி கெட்ட ஆலோசனைகளுக்குக் காது கொடுக்காதே! உன்னோட புத்தகத்தெ ஆழ்ந்து படி. அது உனக்கு நல்ல உபயோகமா இருக்கும்.

'தபால்காரன்' கத பத்தி ராட்டாசியாயேவ் கிட்டப் பேசினேன். "அது ஒரு பழங்காலப் புத்தகம். படமெல்லாம் போட்டு புதுசா கொண்டு வந்திருக்காங்க" அப்படீங்கறாரு. புஸ்கின்தான் சிறந்த எழுத்தாளர், ரஷ்யாவுக்கே பெருமை தேடித்தந்த வருங்கறாரு. இவரப் பத்தி நெறையச் சொன்னாரு. புஸ்கினோட 'தபால்காரன்' கதயெ நீ கண்டிப்பா படிக்கணும். ஆழமாப் பாக்கணும். நான் சொல்றதக் கேளு. உன்னோட ஆதரவாலே இந்த வயசாளி சந்தோசமா இருக்கான்.

அப்பறம், அன்பானவளே, ஆண்டவன் உனக்கு நல்லருள் புரிவார். நிச்சயமா உனக்கு அவரோட பரிசுகள் கிடைக்கும்.

உன்னோட உண்மையான நண்பன்

மகார் தேவுஷ்கின்.

ஜூலை 6

அன்பிற்குரிய அய்யா, மகார் அலெக்சியேவிச் அவர்களே!

ஃபெடோரா இன்று எனக்கு பதினைந்து வெள்ளி ரூபிள்கள் கொண்டு வந்து தந்தாள். அவளுக்குத்தான் எவ்வளவு மகிழ்ச்சி! நான் அவளுக்கு மூன்று கொடுத்தேன். கொஞ்சம் அவசரத்தில் இதை எழுதுகிறேன்.

உங்களுக்கு ஒரு உள்கோட்டுக்கான துணியை வெட்டிக் கொண்டிருக்கிறேன். துணி பிரமாதமாக இருக்கிறது. மஞ்சள் நிறத்தில், சின்னச் சின்னப் பூக்கள் போட்டது. உங்களுக்கு ஒரு புத்தகம் அனுப்பியிருக்கிறேன். வித்தியாசமான கதைகள் கொண்டது.

சிலவற்றைப் படித்துப் பார்த்தேன். அவற்றில் ஒன்று 'பெரிய கோட்டு' என்ற தலைப்புக் கொண்டது. [நிக்கலாய்கோகலின் 'ஓவர்கோட்டு'- மொ.ஆ.]

என்னை நீங்கள் நாடகத்திற்கு அழைத்தீர்கள். அது ரொம்ப செலவாகும் அல்லவா? அதில் கேலரி இருக்கிறதா? நாடகம் பார்க்கப் போய் நீண்ட காலம் ஆகிவிட்டது. அது எப்போது என்பதுகூட மறந்துவிட்டது.

செலவு அதிகமாகுமே என்று பயமாகத்தான் இருக்கிறது. ஃபெடோரா வேண்டாம் என்கிறாள். நீங்கள் சக்திக்கு மீறிச் செலவு செய்து வருவதாகச் சொல்கிறாள். அது எனக்கு தெரியத்தான் செய்கிறது. அதுவும் எனக்காக!

இதனால் நெருக்கடி எதுவும் ஏற்பட்டு விடக்கூடாது நண்பரே! ஏதோ ஒரு வதந்தி பரவி வருவதாகவும் ஃபெடோரா சொல்கிறாள் - வீட்டுக்கார அம்மாவுடன் ஏதோ சண்டை போட்டீர்களாமே? பணம் ஏதோ நீங்கள் கொடுக்க வேண்டி இருந்ததற்காக!

*உங்களை நினைத்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. சரி. அவசரம். முடித்துக் கொள்கிறேன். ஒரு முக்கியமான வேலை. உடனே முடிக்க வேண்டும். என் தொப்பியின் ரிப்பனை மாற்றி விட்டேன்.*

*வா. அலெ.*

*பி.கு:*

*நாம் நாடக அரங்கிற்குப் போவதானால் என் புதிய தொப்பியைப் போட்டுக் கொள்ளலாமா? அப்புறம் கறுப்புச் சால்வையைத் தோளில் போட்டுக் கொள்ளலாமா? நன்றாக இருக்கும்தானே?*

ஜூலை 7

அன்புள்ள மேடம், வார்வரா அலெக்சியேவ்னா,

...... செரி. அப்பறம் நான் நேத்தத்த விவகாரத்தப் பத்தி பேசிட்டிருந்தனா.... ஆமாம்மா, ஒரு விபரீத சமாச்சாரம் நம்மள தாக்கிருச்சு. ரொம்ப பளய விஷயம்தான்.

அது...... நான் ஒரு சின்ன நடிகையோட அழகில கவுந்து போயிட்டேன், அப்போ. சுத்தமா தலகீழாக் கவுந்திட்டேன்! சொல்லப்போனா, அவளெ நான் சரியாகக்கூட பாத்ததில்லெ!

ஒரு தடவை நாடகம் பாக்கப் போயிருந்தப்போதான் நான் கவுந்தது! அப்போ நான் குடியிருந்த எடத்தில பக்கத்தில அஞ்சாரு பசங்க இருந்தாங்க. அவங்க கூட எனக்குக் கொஞ்சம் பழக்கம். கொஞ்சம்தான். நான் தனிமைப்பட்டுக் போயிரக்கூடாதின்னுதான் அவங்க சொல்லறதுக்கெல்லாம் தலயாட்டிட்டிருந்தேன்.

அவங்கதான் இந்த நடிகையைப் பத்தி எங்கிட்ட சும்மா சொல்லிகிட்டே இருந்தாங்க. நாடகம் ஆரம்பிச்சாப் போதும் இந்தப் பசங்க கும்பலா அங்க போயிடுவானுக. ஒவ்வொருத்தங்க கிட்டயும் ரெண்டு காசுக்கு மேல இருக்காது. அவமேல இவனுக ளுக்கு ஒரு பைத்தியம். காலரிடிக்கட்தான் வாங்க முடியும்.

நாடகம் பாத்திட்டு வந்து வெடிய வெடிய அவளப் பத்திப் பேசிகிட்டே இருப்பானுக. தூங்க உடமாட்டானுக. அவனு களுக்கு எக்கச்சக்க காதல். அவங்க மனசுக்குள்ள அவ எப்பவும் பாட்டுப் பாடிகிட்டே இருப்பா போல!

வேற ஒண்ணும் பண்ண முடியாமெ நானும் கேட்டுகிட்டே இருந்தேன். எப்படித்தான் அவனுக கூட நாடகம் பாக்கப் போனனோ எனக்கே தெரியலெ.

போயிட்டனா? போயி கேலரியில ஒக்காந்தா முன்னால இருக்கறவன் முதுகு மறைக்குது. முக்காவாசி. திரைச்சீலயோட ஒரு ஓரம்தான் தெரிஞ்சிச்சு. ஆனா பேச்சு பாட்டெல்லாம் கேக்க முடிஞ்சது.

அவ மேடைக்கு வந்தா. என்ன குரல்! பாடினா வானம்பாடி மாதிரி. குயில் மாதிரி. தேன்குரல். எல்லாரும் கை தட்டுனாங்க. நானும் தட்டினேன். சத்தம் போட்டு ஆரவாரம் செஞ்சோம்.

வூட்டுக்கு வந்தா, அடடா, என்ன சொல்ல. ஒரு போதை! குடிச்சுப் போட்டு நடக்கற மாதிரி... எங்கிட்ட அப்ப ஒரே ஒரு வெள்ளி ரூபிள் நாணயந்தான் இருந்தது. பத்து நாளைக்கு வருமே. என்ன'மா நெனக்கிறே? என்ன செஞ்சேன் தெரியுமா?

வேலக்கிப் போகாமெ சென்ட் விக்கிற கடைக்கி நேராப் போனேன். கமகமண்ணு பிரஞ்சு சென்ட்டு வாங்கினேன்! அப்பறம், வாசமுள்ள சோப்பு ஒரு காசுக்கு வாங்கிட்டேன். இதெல்லாம் எதுக்காக வாங்கினேன்கறதுகூட எனக்குத் தெரியலே. வீட்ல சாப்பாடு அண்ணிக்கி இல்லெ!

அந்த நடிகை இருக்கற கட்டடத்துக்கீழ நடக்க ஆரம்பிச்சேன். இப்படியும் அப்படியும். அவ எங்க இருந்தா தெரியுமா? நெவ்ஸ்கி சாலையில ஒரு கட்டடத்தில், தெருவப் பாத்த மாதிரி அறையில் மூணாவது மாடியில இருந்தா!

ஒண்ணர மாசம் இப்பிடியே ஓடிகிட்டு இருந்தேன். ஒரு வாடகை வண்டி புடிச்சிகிட்டுக்கூட அப்பிடியும் இப்படியும் போனேன்! அப்பறம் களச்சிப் போயிட்டேன்! கடனாயிருச்சு! காதல் பறந்து போச்சு! சலிச்சுப்போச்சு!

ஒரு யோக்கியமான மனுசனெ என்னவெல்லாம் ஒரு நடிகையால செய்ய முடியும்ங்கறதுக்கு இது உதாரணம். ஆனா, அப்ப நான் சின்ன வயசுக்காரன்! இளரத்தம்! ரொம்பச் சின்னப் பையன்......

ம. தே.

ஜுலை 8

அன்பு மேடம் வார்வரா அலெக்சியேவ்னா!

நீ அனுப்பிச்ச புத்தகம் எனக்கு 6ஆம் தேதிதான் கைக்குக் கெடச்சது. அவசரமாக அத திருப்பி அனுப்பறேன்! அவசரமா சில விஷயங்களெ சொல்ல வேண்டி இருக்கு.

என்னெ ரொம்ப மோசமான நிலைக்கு நீ தாழ்த்திட்டே. இது மோசமான குணம். ஆமா ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க. எல்லா மனுசரோட வாழ்க்கையும் கடவுளாலதான் தீர்மானிக்கப் படுது. ஒரு தளபதியோட சீருடை அணியறதா, இல்லெ கடைநிலை ஊழியனா வேல பாக்கறதாங்கறது 'அவன்' முடிவு. அதுக்கு நாம கட்டுப்பட்டாகணும். குத்தம் சொல்லக் கூடாது. பயப்படவும் கூடாது. ஒரு மனுசனோட தகுதிக்குத் தகுந்தபடி அது ஏற்கனவே முடிவு செய்யபட்டது. அந்தத் தெறமைக கூட கடவுளாலதான் முடிவு செய்யப்படுது.

இதுவரைக்கும் நான் முப்பத்தி மூணு வருஷம் வேல பாத்தாச்சு. குத்தம் சொல்ல முடியாதபடி. நான் அமைதியான ஆளு. ஒழுங்கீனமா நடந்து கிட்டதா எந்தக் குற்றச்சாட்டும் என்மேல இல்லெ. மனசாட்சியுள்ள ஒரு மனுசன்.

எங்கிட்ட கொஞ்சம் குறைபாடுக உண்டு ஆனா, நல்ல அம்சங்களும் உண்டு. என்னோட மேல் உத்தியோகஸ்தர்கள நான் ரொம்ப மதிப்பேன். கவர்னர்கூட என்னப் பாராட்டியிருக்காரு. ஆனா இதுவரைக்கும் அவர் எந்தச் சலுகையும் செஞ்சதில்லே. ஆனாலும் அவுருக்கு என் வேலைல திருப்திதான்.

எனக்கும் தல நரச்சிப்போச்சு. எந்தப் பாவமும் பண்ணல. சின்னதா பாவம் செய்யாதவங்க யாரு இருக்காங்க? எல்லாருமே பாவிகதான். என் அன்பே, நீயும் கூடத்தான். ஆனா பெருசா ஒண்ணும் எங்கண்ணுக்கு படலெ. அரசாங்க சட்டங்களுக்கு எதிரா, பொது விதிகளுக்கு மாறா எதுவும் செஞ்சதாத் தெரியலெ. எனக்கு ஒரு பதக்கம்கூட குடுக்கப் போறாங்க - சரி. அதனால என்ன! நீ இதையெல்லாம் தெரிஞ்சுக்கணும்.

நான் உங்கிட்ட இத எதிர்பாக்கலெ வாரென்கா! உங்கிட்ட அந்தப் புத்தகம் குடுத்த ஆளுக்கு எல்லாமே தெரிஞ்சிருக்கணும். அதுக்குள்ள என்ன இருக்கும்னு தெரியாமயா உங்கிட்ட குடுத்திருப்பாரு?

சரி நீ இனிமே உன்னோடமூலையில முடங்கிக்கோ. சேத்தக் கலக்கிவிடாமெ அமைதியா, யாரையும் தொந்தரவு பண்ணாம, கடவுள் பயத்தோட, உன்ன யாரும் வந்து உளவு பாக்கமெ வாழ ஆரம்பிச்சுடு.

இனிமே மத்தவங்க வாழ்க்கைக்குள்ள எட்டிப் பாத்து, "உன்னோட உள்கோட்டு ஏன் இப்பிடி இருக்கு, உனக்கு உள்ளாடை இருக்கா, நல்ல பூட்ஸ் இருக்கா, என்ன சாப்பிடறீங்க, தேநீர் குடிக்கிறீங்களா?" அப்படீண்ணு கேக்க வேண்டிய தேவை இருக்காதில்லை.

மத்தவன் தேநீர் குடிச்சா என்ன, குடிக்காட்டி என்ன? தேநீர் குடிச்சுத்தான் ஆகணுமா என்ன? ஒருத்தன் வாயசைச்சா, 'வாயில என்ன, எத மெல்றீங்க?', ண்ணு கேக்க நாம யாரு? ஏம்மா மத்தவங்களெ தடுமாறச் செய்யணும்?

வார்வரா, நீ கடுமயா உழைக்கிறே. ஈடுபாட்டோட வேல செய்யறே. சுறுசுறுப்பா செய்யறே - சரிதான் மேலதிகாரிக மதிக்கிறாங்க எல்லாமே சரிதான். ஆனா எவனோ ஒருத்தன் வறுத்தெடுக்கறாண்ணு வச்சிக்க. சில சமயம் நீ புதுக்கோட்டு போட்டுக்கறே, புது பூட்சு மாட்டிக்கறே, எல்லாம் சரிதான். ஆனா, ஃபியோதர் ஃபியோதரோவிச் எப்பிடி அந்தப் புத்தகத்தெ உங்கிட்ட குடுத்தனுப்பலாம். அவரு பெரிய மனுசரா இளைஞரா இருக் கலாம். அதுக்காக மத்தவன இப்பிடி அவமானப்படுத்தணுமா?

சும்மா இருக்க முடியாமெ யாரையாச்சும் இப்பிடிப் பண்ணுவாங்களா? முன்கூட்டி சொல்ல வேண்டாமா?

இது நமக்குள்ள இருக்கட்டும் வாரென்கா - நாம அப்பிடி முன்கூட்டித் தெரிவிக்காமெ ஏதாச்சும் செஞ்சிருக்கமா சொல்லு. 'நான் இதச் செஞ்சேண்' ணு சொல்லிடறமல்ல. ஆனாலும், நாம பொறுப்பெ தட்டிக் கழிக்கறோம்.

வேலையில எத்தனையோ பதவிப் படிகள் இருக்கு. மேல இருக்கறவன் கீழ இருக்கறவனெ வறுத்தெடுப்பான். அது நடைமுறைதான். ஆனா, சமூகக் கட்டுமானம் அதிலதான் இருக்க. முன்னறிவுப்பு இல்லாமெ சித்ரவதெ பண்ணுவாங்க. அது எப்படி ஃபியோதர் ஃபியோதரவிச், எப்பிடி அப்படி ஒரு குறிப்பை எனக்கு அனுப்பலாம்?

எதுக்கு அப்பிடி எளுதணும்? என்ன தேவை? எனக்கு யாராச்சும், வாசகர்கள்ல ஒருத்தர் ஓவர் கோட்டு தச்சுக் குடுக்கப் போறாங்களா என்ன? அவரு எனக்கு புஸ்தகங்க வாங்கிக் குடுப்பாரா? இல்லெ, வாரென்கா. அதப் படிச்சிட்டு அதுக்குப் பின்னுரை ஒண்ணு கேப்பாரு.

நீ எதையோ ஒளிக்கிறே. உன்னையே ஒளிச்சுக்கறே. எட்டிப் பாக்க விடமாட்டேங்கறே, வதந்தி பரவிடுமோண்ணு பயப்படறே. அவங்க எதையுமே நகைச்சுவையா எழுதி இலக்கியம் ஆக்கிடுவாங்க. அப்பறம் எல்லாரும் அதப்படிப்பாங்க கேலி செய்வாங்க வதந்தி பரப்புவாங்க இதெல்லாம் இங்க நடந்திட்டுத்தானெ இருக்கு.

இப்ப அந்த ஆளு என்ன செஞ்சிருக்கணும்? கடைசில ஒரு பக்கம் எழுதிச் சேத்திருக்கலாம். எப்பிடி? "அந்த மனிதன் ஒழுக்கமான குடிமகன். அவனோட தோழர்கள் அவனெ அந்தக் கோட்டுக்காக அப்படி அவமானப் படுத்தத் தேவையில்லை. அவன் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாதவன். கடவுள் நம்பிக்கை உள்ளவன். சாகும்போது ரொம்ப வருத்தப்பட்டான்." இப்படி எளுதிச் சேத்திருக்கலாம்.

ஆனா, அந்தக் கதாசிரியர் அவன சாகவிட்டிருக்கக் கூடாது! அவனுக்கு ஒரு ஓவர்கோட்டு கெடச்சிருச்சில்லே? அதனால, மேலதிகாரி, அவனோட நல்ல ஒழுக்கத்தெ வெவரமா விசாரிச்சுத் தெரிஞ்சுகிட்டு, தன்னோட அலுவலகத்துக்கே கூப்புட்டுக்கணும். மேல் பதவி கொடுக்கணும். நல்ல சம்பளம் கொடுக்கணும். அப்பிடி இருக்கணும் கதெ.

*தீமைதான் தண்டிக்கப்படணும். நன்மை போற்றப்படணும். அந்த ஆளு வேல செஞ்ச ஆபீசில இருக்கவங்களுக்கு அவன் சாவுனால என்ன கெடச்சது? அப்படி செஞ்சிருந்தா?*

*அவனுக்கு அதனால என்ன கெடச்சது? அது மோசமான உதாரணம் இல்லயா? படுமட்டமான உதாரணம் அவனோட சாவு,*

*அந்த மாதிரி ஒரு புத்தகத்தெ எப்பிடி அனுப்ப உனக்கு மனசு வந்தது? மோசமான நோக்கமுள்ள புத்தகம் இல்லயா இது? வாரென்கா, சுத்தமா அது சரியில்லெ. அந்த மாதிரி ஒரு கிளார்க் இல்லாமக்கூடப் போகலாம். நீ அதன்மேல ஒரு குற்றச்சாட்டை வச்சிருக்கணும் வாரென்கா. ஒரு சாதாரணக் குற்றச்சாட்டை யாவது!*

*மிகுந்த அடக்கமுள்ள உன் பணியாள்*

மகார் தேவுஷ்கின்

ஜுலை 27

அன்பான அய்யா, மகார் அலெக்சியேவிச் அவர்களே!

அண்மையில் நடைபெற்ற நிகழ்வுகளும், உங்கள் கடிதங்களும் என்னைப் பயமுறுத்திவிட்டன; திகைப்படையச் செய்துவிட்டன; குழப்பத்தில் ஆழ்த்திவிட்டன. ஃபெடோராதான் எனக்கு எல்லாவற்றையும் தெளிவு படுத்தினாள்.

மகார் நீங்கள் ஏன் இப்படி மனம் சலித்து வேண்டாத இருளில் வீழ்ந்து தத்தளிக்கிறீர்கள்? உங்கள் விளக்கம் எதுவும் எனக்குத் திருப்தி தரவில்லை. உயர் பதவி தரப்பட்டால் யாராவது வேண்டாம் என்று சொல்வார்களா? அப்புறம், எனக்கு நிகழ்ந்த அண்மைச் சம்பவம், என்னையும் பயமுறுத்திவிட்டது.

நீங்கள் என்னை நேசிப்பதாகவும், அந்த நேரம்தான் உங்களை என்னிடமிருந்து விலகி இருக்கச் சொல்கிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறீர்கள். எனக்காக நீங்கள் அதிகம் செலவழித் திருக்கிறீர்கள். அது உங்கள் சேமிப்பிலுள்ள பணம் என்று சொல்கிறீர்கள். வங்கியில் நிறையச் சேமித்து வைத்திருப்பதாகச் சொல்கிறீர்கள். உங்களுக்காக நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்.

ஆனால், உங்களிடம் பணமே இல்லை என்று தெரிந்து கொண்டு விட்டேன். என்னுடைய தேவையைத் தெரிந்து கொண்டு உங்கள் ஊதியப் பணத்தைத்தான் எனக்காகச் செலவு செய்து வந்திருக்கிறீர்கள். நான் நோய்வாய்ப்பட்டிருந்தபோது உங்கள் ஆடைகளைக்கூட விற்றிருக்கிறீர்கள்!

இதையெல்லாம் தெரிந்து கொண்டுவிட்ட பின் என் நிலைமை மிகவும் சிக்கலாகிவிட்டது. இதை எப்படி எடுத்துக் கொள்வது என்று விளங்காமல் மன வேதனைப் படுகிறேன். உங்கள் நற்செயல்களை நிறுத்தியிருக்க வேண்டும். உணர்ச்சி மிகுதியினாலும், பரிதாப உணர்ச்சியாலும் இப்படிச் செய்து வந்திருக்கிறீர்கள். தேவையற்ற உதவி. மகார் அவர்களே, என் நட்பிற்கு நீங்கள் துரோகம் செய்து விட்டீர்கள்.

காரணம், நீங்கள் என்னிடத்தில் வெளிப்படையாக இல்லை. எனக்காக நல்ல ஆடைகள், இனிப்புத் திண்பண்டங்கள், வெளியே உலா போய் வந்தது, நாடகம் பார்க்கப்போன செலவு, புத்தகங்கள் வாங்கி அனுப்பிக் கொண்டிருந்தது எல்லாவற்றையும் கொஞ்சம்கூட யோசனை இல்லாமல் ஏற்றுக் கொண்டிருந்து விட்டேன். உங்களைப் பற்றிய கவலையே இல்லாமல் உமது உதவிகளை நான் ஏற்றுக் கொண்டிருந்தேன்.

உங்கள் உதவிகளுக்காக நான் மகிழ்ச்சிதான் அடைந்துவந்தேன். இப்போது நான் பெரும் கடனாளி ஆகிவிட் டேன். பயனற்ற வருத்தத்தைத் தெரிவித்து என்ன பயன்? உங்கள் கவலை இப்போது எனக்குப் புரிந்தது. நான் எதையோ ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்துவிட்டேன். அது நிறைவேறவில்லை.

நீங்கள் எல்லா நம்பிக்கைகளையும் இழந்து விட்டீர்களா, மகார் அலெக்சியேவிச்? என்ன? மற்றவர்கள் உங்களைப் பற்றி இப்போது என்ன நினைப்பார்கள்? என்ன பேசுவார்கள்? உங்களைக் கருணை உள்ளம் கொண்டவர் என்றும், நாகரிகமான மனிதர் என்றும், அறிவுள்ளவர் என்றும் நாங்கள் இதுவரை மதித்திருந்தோம்.

ஆனால், சட்டென நீங்கள் படுபாதாளத்தில் விழுந்துவிட்டீர்கள்! இந்தத் தீய பழக்கம் எப்படி உங்களுக்கு ஏற்பட்டது. இது இருப்பதற்கான எந்த அறிகுறியும் முன்பு உங்களிடம் காணப்படவில்லையே! ஃபெடோரா எல்லாம் சொன்னாள்.

குடித்துக் குடித்து போதம் கெட்டு தெருவில் விழுந்து கிடந்தீர்களாமே! காவலர் உதவியுடன் உங்களை உங்கள் அறைக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார்கள்! இதைக் கேள்விப்பட்டதும் நான் ஆடிப்போய்விட்டேன். ஏதோ ஒரு விபரீதம் நடக்கப் போகிறது என்று நான் எதிர்ப்பார்த்திருந்தும்கூட இப்படி நடக்குமென்று நான் நினைக்கவில்லை. ஏனென்றால் நீங்கள் நான்கு நாள்களாகக் காணாமல் போய்விட்டீர்கள்.

உங்கள் மேலதிகாரிகள் என்ன நினைப்பார்கள், யோசித்துப் பார்த்தீர்களா, மகார் அலெக்சியேவிச்? நீங்கள் காணாமற் போனதற்கான காரணம் இதுதான் என்று அறிய வந்தால் அவர்கள் என்ன சொல்வார்கள்?

உங்களைப் பார்த்தால் எல்லாரும் சிரிப்பதாகச் சொல்கிறீர்கள். நாம் இருவருக்கும் இடையிலுள்ள பந்தம் அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். இங்கே அக்கம் பக்கத்திலிருப்பவர்கள் சாடைமாடையாகப் பேசுவதும் எனக்குத் தெரியும். அவர்கள் கேலி பேசுவதை நான் கேட்டிருக்கிறேன்.

மகார், அவற்றையெல்லாம் காதில்போட்டுக் கொள்ளக் கூடாது. அருள்கூர்ந்து அமைதியாக இருங்கள். எனக்குப் பயமாக இருக்கிறது. உங்கள் மேலதிகாரிகளைப் பற்றி நான் கேள்விப் பட்டேன். அரை குறையாகத்தான் காதில் விழுந்தது. அங்கே என்னதான் நடக்கிறது?

என்னிடம் வெளிப்படையாக நடந்துகொள்ள நீங்கள் அஞ்சுகிறீர்கள். அவ்வாறு வெளிப்படையாகப் பேசினால் நம் நட்பு முறிந்துவிடுமோ என்று அஞ்சுகிறீர்கள். நான் நம்பிக்கை இழந்துவிட்டேன். என்னுடைய உடல் நலமில்லாத இந்தத் தருணத் தில் உங்களுக்கு எந்த விதத்தில் உதவுவது என்று எனக்குத் தெரியவில்லை.

நீங்கள் எல்லாவற்றையும் எனக்காக விற்றிருக்கிறீர்கள். என்னை மருத்துவமனையில் சேர்த்துவிடக் கூடாது என்று உதவியிருக்கிறீர்கள். வீட்டுக்கார அம்மையாருடன் சண்டை போட்டுக் கொண்டு இருந்திருக்கிறீர்கள், நாள்தோறும். இதையெல்லாம் என்னிடம் மறைத்துவிட்டு ஒரு மோசமான பாதையைத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள். இப்போது எல்லாம் வெளிச்சத்திற்கு வந்துவிட்டது.

உங்களுடைய இந்த மோசமான நிலைமைக்கு நான்தான் காரணம் என்பதை அறியும்போது எனக்கு மிகவும் சங்கடமாக இருக்கிறது. இப்போது உங்களது மோசமான நடத்தையால் என் மனவருத்தம் இரண்டு மடங்கு ஆகிவிட்டது. எனக்கு அதிர்ச்சி யாக இருக்கிறது மகார் அலெக்சியேவிச் அவர்களே!

ஆ! என் தோழரே, துரதிர்ஷ்டம் ஒரு தொற்று நோய். ஏழைகளும், பரிதாபத்திற்குரியவர்களும் விலகியிருக்க வேண்டும். ஏனென்றால் இந்தத் தொற்றுநோய் கடுமையாகப் பாதித்துவிடும்! நான் உங்களுக்கு அவ்வகைத் தொற்று நோயைக் கொண்டு வந்துவிட்டேன். இதற்கு முன்னால், நீங்கள் அமைதியாக ஒதுங்கியிருந்து வாழ்ந்து கொண்டிருந்தீர்கள். இப்போது, இதெல்லாம் என்னைச் சித்திரவதை செய்கிறது.

என்ன நடந்தது, நீங்கள் ஏன் இந்த அளவுக்குத் தாழ்ந்து போனீர்கள், ஏன் இப்படியொரு முடிவுக்கு வந்தீர்கள் என்பது பற்றி ஒளிவு மறைவு இல்லாமல் எனக்கு எழுதித் தெரிவிக்க வேண்டும். என்னை அமைதிப் படுத்துங்கள், உங்களால் முடிந்தால்.

இதையெல்லாம் என்னை உயர்த்திக் கொண்டு எழுதவில்லை. உங்கள் மீது நான் வைத்திருக்கும் நட்பாலும், நேசத்தாலும் சொல்ல முன் வந்தேன். இந்த அன்பை என் இதயத்திலிருந்து அழித்துவிட எதனாலும் முடியாது. வணக்கம். உங்களது பதிலுக்காகப் பொறுமையின்றிக் காத்திருக்கிறேன். மகார் அவர்களே, நீங்கள், என்னைப் பற்றித் தவறாக நினைத்துவிட்டீர்கள்.

உங்களை உண்மையா நேசிக்கும்

வார்வரா டொப்ரோசிலோவா

ஜுலை 28

விலை மதிப்பிட முடியாத என் வார்வரா அலெக்சியேவ்னா,

சரிம்மா. எல்லாமே ஒரு முடிவுக்கு வந்திடுச்சு. எல்லாமே கொஞ்சம் கொஞ்சமா பழைய நிலைமைக்குத் திரும்பிட்டிருக்கு. மத்தவங்க என்ன நினைப்பாங்கங்கறது தான் உன்னோட கவல.

வார்வரா, எதைவிடவும் என்னோட கவுரவம்தான எனக்கு ஒசந்தது. நீ கவலப்பட்டமாதிரி என்னோட கவுரவத்துக்குக் கேடு வந்த மாதிரி நடந்துகிட்டாலும் அது என்னோட மேலதிகாரிக காதுக்கும் போகலெ. இனியும் போகாது. அதே மரியாதையோட தான் அவங்க என்னெ நடத்தறாங்க.

எனக்குப் பயமெல்லாம் ஒரே ஒரு விசயத்திலதான். அதுதான், வதந்தி. வீட்டுக்காரம்மா கத்திகிட்டே இருந்தாங்க. நீ அனுப்பிச்சு வெச்ச பத்து ரூபிள வெச்சு அவ வாயெ அடச்சாச்சு. ஒரு பகுதிதான் அது. இன்னும் பாக்கி இருக்கு. இருந்தாலும் இப்ப கொஞ்ச நாளக்கிக் கத்தமாட்டா.

மத்தவங்க எல்லாம் சரியாயிட்டாங்க. என்ன, அவங்க கிட்ட கடன் கேக்காம இருந்தா சரி. அவ்வளவுதான். நான் விளக்கமொண்ணும் உனக்கு சொல்ல வேண்டியதெ இல்லெ. நீ என்மேல வச்சிருக்கற மரியாதைக்கு மேல இந்த உலகத்தில எனக்கு எதுவுமே இல்ல.

இந்தத் தற்காலிக ஒழுங்கீனம் நடந்தப்பக்கூட அத நெனச்சுத்தான் நான் என்னெ அமைதிப்படுத்திகிட்டேன். இந்த முதல் ஒழுங்கீனமும், முதல் அதிர்ச்சியும் இப்பக் கடவுள் அருளால சரியாயிட்டுது. சித்ரவத செய்யற நண்பன்னு என்னெ நீ நெனச்சிக்கக் கூடாது. கர்வம் பிடிச்சவன்னு நெனச்சிறக்கூடாது.

என்னால உன்னவிட்டுப் பிரிய முடியாது. அதற்கான சக்தி எனக்கு இல்லெ. நீ எம் பக்கத்திலதான் இருந்திருக்கறே. ஆனா உன்னெ ஏமாத்திட்டேன், என் சின்னத் தேவதையே. நான் என்னோட கடமைகளெ ஒழுங்கா செய்ய ஆரம்பிச்சாச்சு.

நேத்துக்கூட, யெவ்ஸ்டாஃபி இவர்னவிச்ச நான் கடந்து போனப்ப அவரு ஒரு வார்த்தைகூட எதுவும் கேக்கலெ!

நான் உங்கிட்ட எதையுமே மறைக்கல'மா. என்னோட கடன்களும், மோசமான உடுப்புகளும் என்னக் கொல்லுதுங்கறது உண்மைதான். ஆனா இதெல்லாம் ஒண்ணுமில்லே. இதுக்காக என்னப்பத்தி நீ கவலப்படாதெ. அப்பறம் நீ மறுபடியும் ஒரு அம்பது கொப்பெக் எனக்கு அனுப்பி வெச்சிருக்கெ. அந்தக் காசுதான் எம் மனசெத் தொளைச்சிடுச்சு, வாரென்கா!

சரி. இப்படியாக எல்லாமே நடந்திட்டிருக்கு. இப்பிடியிருக்க, இந்த வயசான மடையன் உனக்கு உதவறதுக்குப் பதிலா, அநாதையான உங்கிட்ட இருந்து வாங்கிட்டிருக்கம் பாரு! ஃபெடோரா எனக்குப் பணத்துக்கு ஒரு ஏற்பாடு பண்ணிட்டிருக்கா. கெடக்குமாங்கற நம்பிக்கையில்லெ. கெடைச்சா. நல்லது நான் எல்லாத்தையும் விரிவா அப்பறம் எளுதறேன்.

எனக்கு வதந்திதான் கவலயா இருக்கு. ஆமா வதந்திகதான். சரி. இப்ப முடிச்சுக்கறேன். நான் உன்னோட கைகளை முத்தமிடறேன். நீ சீக்கிரம் குணமடையணும். நான் வேலக்கிப் போற அவசரம். அதான் விரிவா எழுத முடியலெ. வேலைல எல்லாக் குறைகளையும் நான் சரி செஞ்சிடுவேன். மத்த விசயங்க எல்லாத்தையும் சாயந்திரம் வந்து விளக்கமாகத் தெரிவிக்கறேன்.

உன்னோட மரியாதைக்குரிய

உன் உண்மையான அன்பிற்குரிய

மகார் தேவுஸ்கின்.

ஜுலை 28

ஆ, வாரென்கா, வாரென்கா!

சொல்லப்போனா, குத்தமெல்லாம் உம்மேலதான். அது உன் மனசாட்சியில எப்பவும் இருக்கும். உன்னோட கடுதாசி என்னோட அறிவுணர்ச்சியில மிச்சமிருந்த கடைசித் துளியையும் வெறட்டிருச்சு; ரொம்பக் கொழப்பிவிட்டிருச்சு. என்னோட மனசின் அடியாழத்தில போய் நிதானமா பாத்தப்ப, நான்தான் சரீண்ணு தெரிஞ்சது. ஆமா, நாந்தான் சரி. சுத்தமா சரி.

என்னோட குழப்பத்தப் பத்திச் சொல்லலெ. [அத மறந்திடு. அத மறந்திடு] நான் உன்னெ நேசிக்கிறேன். அது ஒண்ணும் அறிவு கெட்டதனமில்லெ. ஆமா. உனக்கு ஒண்ணும் தெரியாது. நான் ஏன் உன்னை நேசிக்கிறேன்கற காரணம் உனக்குத் தெரியாது. சுத்தமா ஒண்ணுமே தெரியாது. அது உனக்குத் தெரிஞ்சிருந்தா, நான் ஏன் உன்னெ நேசிக்கணும்கறது உனக்குத் தெரிஞ்சிருந்தா நீ வேற மாதிரி பேசியிருப்பே. நீ என்னென்னமோ அறிவு பூர்வமா பேசிகிட்டு இருந்தாலும், ஆனா, உம் மனசில வேற ஒண்ணு இருக்கறது நிச்சயமாத் தெரியும்.

அன்பானவளே, எனக்கும் என்னோட மேலதிகாரிகளுக்கு இடையில என்ன நடந்ததிங்கறது எனக்கு சரியா ஞாபகம் வர்லே. அதுக்கு முன்னால நான் பயங்கரக் குழப்பத்தில இருந்தேன். கற்பன பண்ணிப்பாரு. ஒரு மாசமா நான் ஒத்தக் கயித்தில தொங்கிட்டிருந்தேன். நிலமெ அப்ப படுமோசம்.

நான் எல்லாத்தயும் உங்கிட்ட மறச்சிட்டேன். ஊட்டுக்கார அம்மா ஒரு ஆட்டம் ஆடிக்காட்டிட்டா. நான் அதப் பத்தி ஒண்ணும் கவலப்பட்டுக்கலெ. அவளுக்கு எப்பிடித்தான் நமக்குள்ள இருக்கற ஒறவப் பத்தித் தெரிஞ்சுக்கிட்டாளோ, கடவுளுக்குத் தான் வெளிச்சம். எல்லார் முன்னாலயும் அதப்பத்தி சத்தம் போட்டு பேசினா. நான் அப்பிடியே வாயடச்சிப் போயிட்டேன். காதப் பொத்திக்க வேண்டியதாயிடுச்சு. ஆனா, மத்தவங்க அப்பிடி செய்யலெ ரசிச்சுத்தான் கேட்டாங்க! அன்பே, இப்ப என்ன செய்றதின்னே எனக்குத் தெரியலெ.

சமீப காலத்தில் எனக்கு ஏற்பட்ட விபத்துக்களின் பல வண்ணத் தொகுப்புதான் இதெல்லாம்னு தோணுது என் சின்னத் தேவதையே. திடீர்னு ஃபெடோரா மூலம் ஏதேதோ கேள்விப்படறேன். எவனோ ஒரு கடை கெட்டவன் உன்னை மணந்து கொள்ள வந்து உன்னை அவமதித்ததா நான் நெனக்கிறேன். நானும்கூட இப்படித்தான் அவமானப்படறேன்.

இதெல்லாம் ஒண்ணுசேந்துதான் என் மூளையெ தடுமாற வெச்சிருச்சு. நான் கட்டுப்பாட்டை இழந்திட்டேன். என் தோழியே, வாரென்கா, நான் அப்பதான் வெறிபுடிச்ச மாதிரி அவனப் பாக்க ஓடினேன். எனக்கு என்ன செய்யறதின்னே தெரியலெ. அந்தப் பாவியப் பாக்கனும். அவ்வளவுதான். அப்பறம் என்ன செய்வேண்ணும் தெரியாது.

உனக்கு ஒண்ணும் ஆயிரக்கூடாது.. அவ்வளவுதான். எனக்கு ரொம்பக் கவலயாயிருச்சு. மழை வேற பேஞ்சுகிட்டு இருந்திச்சு. எங்கியும் சேறும் சகதியும். அவன் ஒரு அரசாங்கப் பணியாள்தான். ஆனா, அவனோட எதோ தப்பாலெ வேலய விட்டு நீக்கிட்டாங்க. சாப்பாட்டுக்கு என்ன பண்ணீட்டிருந்தானோ தெரியலெ. அவன் பின்னாலயே அவனுக்குத் தெரியாமெப் போயிட்டே இருந்தேன்.

மூணாநாளு அவனோட ஆபிசுக்குப் போனேன். விலாசம் விசாரிச்சேன். அப்பறம் பாத்தா அந்த ஆளு, எங்க குடியிருப்புல தான் இருந்திருக்கான்! அப்பறம் என்ன பேசினேன், என்ன நடந்ததின்னே சரியா நெனப்பில இல்லெ. ஒரே ரகளதான். என்னெ அவன் மாடிப் படிக்கட்ல தூக்கி வீசி எறிஞ்சிட்டான். அதாவது நான் வெளில வந்து விளுந்திட்டேன்! வாரென்கா, அதயாரும் பாக்கலெ! நானும் வெளில சொல்லலெ!

நான் தோத்துப் போனவன்தான் வாரென்கா. என்னோட தலவிதி அப்படித்தான் எழுதப்பட்டிருக்கு. விதியில இருந்து யாராச்சும் தப்ப முடியுமா? முடியாதுங்கறது உனக்கே தெரியும்?

என்னோட துர்பாக்கியம், தோல்விகள் பத்தியெல்லாம் விரிவா சொல்ல வேண்டியிருக்கு. அதையெல்லாம் படிக்க உனக்குப் பிடிக்காது...... எனக்குக் கொஞ்சம் ஒடம்பு

சரியில்லெம்மா. என்னோட வேடிக்கை, சின்ன சந்தோசங்க எல்லாம் போயிடுச்சு.

ஆனாலும், உம்மேல வச்சிருக்க பாசம், நேசம் மரியாதை எல்லாம் அப்பிடியே இருக்கு. வாரென்கா அன்பு மேடம்.

உன் மிகவும் பணிவுள்ள பணியாள்

மகார் தேவுஷ்கின்

ஜூலை 29

அன்புள்ள மகார் அலெக்சியேவிச் அய்யா அவர்களே,

உங்கள் இரண்டு கடிதங்களையும் படித்துப் பார்த்துத் திகைத்துப்போனேன். பாருங்கள் நண்பரே, நீங்கள் ஏதோ ஒன்றை என்னிடம் மறைக்கிறீர்கள். உங்கள் பிரச்சனைகளில் ஒரு பகுதியைத்தான் என்னிடம் தெரிவித்திருக்கிறீர்கள். உங்கள் கடிதங்கள் ஏதோ ஒரு கவலையை நுட்பமாகத் தெரிவிக்கின்றன.

தயவு செய்து என்னை நேரில் வந்து பாருங்கள், இன்றைக்கே! நேராக பகலுணவுக்கே வாருங்கள். எப்படித்தான் அங்கே வாழ்ந்து கொண்டிருக்கிறீர்களோ, வீட்டுக்கார அம்மையாரிடம் இன்னமும் என்ன விவகாரம்? அதைப் பற்றியெல்லாம் விபரமாக நீங்கள் எழுதுவதே இல்லை. வேண்டுமென்றே எதையோ மறைக்கிறீர்கள்.

சரி இன்றே வாருங்கள். சொன்னபடி பகல் உணவுக்கே வந்துவிடுங்கள். ஃபெடோரா நன்றாகச் சமைப்பாள். வணக்கம்.

உங்கள்,

வார்வரா தொப்ரோஸ்கோவா.

ஆகஸ்டு 1

எனதன்பு வார்வரா அலெக்சியேவ்னா!

என் அன்பே, நீ சந்தோசப் பட்டதில எனக்கும் ரொம்ப சந்தோசம். என் மீது அன்பும் கருணையும் காட்ட கடவுள்தான் உன்னெ அனுப்பி வெச்சிருக்காரு. நான் இதெ உறுதியா நம்பறேன் வாரென்கா. உன்னோட தேவ மனுசில இருக்கற நன்மை மேலெ நான் நம்பிக்கை வச்சிருக்கேன். இதநான் ஏன் சொல்றேண்ணா, வயசான காரணத்தினாலெ நான் ஒளர்னத யெல்லா நீ மனசில வச்சிக்காதெ.

அது தப்புதான். குத்தம்தான். எம்மனசு உறுத்துது. நான் குத்தம் செஞ்சவண்ணு நீ நம்பறயா? கோவப்படாதே. அதக் கேக்கற சக்தி எனக்கில்லே. எம் மனசு வலிக்கிறது.

ஏழைக சலன புத்தி உள்ளவங்க. இயற்கை அப்பிடித்தான் படைச்சிருக்கு. இத நான் முனனாலயே உணர்ந்திருக்கறேன். இப்ப அது தெளிவாவே புரிஞ்சிடுச்சு. ஏழைபாளைகளுக்குத் தேவை இருக்கு. ஏழை, கேப்பான். கடவுளக்கூட வித்தியாசமாத் தான் பாப்பான். வழியில போறவங்க கிட்டகூடக் கைநீட்டத்தான் செய்வான். அவன் பார்வயே வேதனப்பட்ட பார்வையாதான் இருக்கும்.

யார் பேசினாலும் ஒவ்வொரு வார்த்தையையும் கவனமாத் தான் கேப்பான். எல்லாத்திலயும் சந்தேகக் கண் இருக்கும். 'அவங்க என்னைப் பத்தித்தான் பேசிக்கறாங்களோ? அவன் ஏன் அப்படி இருக்கான்? இவன் ஏன் இப்படி இருக்கான்? அவன இந்தப் பக்கம் இருந்து பாத்தா எப்பிடி இருக்கு? அந்தப் பக்கம் இருந்து பாத்தா எப்பிடி இருக்கும்?' அப்படீங்கற சந்தேகம் எல்லாம் வரும்.

ஆனா எல்லாரும் என்ன நெனைக்கிறாங்கண்ணா, இந்த ஏழை, பழைய கந்தல் சாக்கைவிட மோசம். மரியாதையே அவனுக்குக் கெடயாது. அவனுக என்ன எளுதினாலும் அதெல் லாமே கிறுக்கல், குப்பை, அப்பிடீண்ணு ஒதுக்கித் தள்ளிடுறாங்க.

ஏழைகளப் பத்தின எல்லாமும் அப்பிடித்தான் இருக்கு. ஏன் அது முன்னப்போல இல்லெ? ஏன்னா, அவங்க எல்லாத்தையும், அதாவது உள்ள இருக்கற எல்லாத்தையும் வெளிய கொட்டிடணும்னு நெனைக்கிறாங்க. அவங்கிட்ட எந்தப் புனிதமான அம்சமும் கெடயாது அப்படீண்ணு நெனைக்கிறாங்க. அவங்களுக்கு எந்தக் கவுரவமும் கெடையாதுண்ணு நெனைக்கிறாங்க.

அன்பானவளே, காலம் கெட்டுக்கிடக்கிறது. நல்ல காரியங்களக்கூட வித்தியாசமான முறையில செய்ய ஆரம்பிச்சிட்டாங்க. ஒருவேள அவங்க எப்பவுமே அப்பிடித்தான் செஞ்சிட்டு வர்றாங்களோ என்னமோ! யாருக்குத் தெரியும்? ஒருவேள அவங்களுக்கு எப்பிடி செய்யறதின்னு தெரியலயோ, இல்லெ, அவங்க அதில ரொம்ப தெறமசாலிகளோ? உனக்கு இதெல்லாம் தெரியாது!

நாம எதுக்குமே லாயக்கில்லெ. ஆனா இதில ரொம்பப் பேர்வாங்கினவங்க! ஒரு ஏழைக்கி இதெல்லாம் எப்படிம்மா தெரியும்? அனுபவத்தில தெரிஞ்சிக்கலாம். ஒரு கனவான் உணவு விடுதிக்குப் போறப்ப என்ன நெனச்சுக்குவாரு ஒரு ஏழையப் பத்தி, ஏழ என்ன சாப்பிடுவான். என்னப் போல சாப்பிட முடியுமா? வெறும் கஞ்சியும் வெண்ணயுந்தான் அவனுக்குண்ணுதானே நெனைப்பாரு. கஞ்சிக்கு வெண்ணகூட ஒரு ஏழை கிளார்க்குக் கெடைக்காதுண்ணுதானே நெனப்பாரு. நான் எதத்திண்ணா அவுருக்கென்ன? கஞ்சி வெண்ணயில்லாமக் குடிச்சா அவருக்கென்ன? இந்த மாதிரி ஆளு இருக்காங்க வாரென்கா.

இவங்க இப்படித்தான் நெனைப்பாங்க. 'இந்தப் பிரிவுல இருக்கிற இந்த வேலபாக்கற இந்த ஆளோட கால்வெரலு, பூட்சுக்கு வெளில நீட்டிட்டிருக்கு,' அப்படீன்னு எளுதி அதையும் பதிப்பிச்சிடுவாங்க. என்னோட கோட்ல மொழங்கை பக்கம் ஓட்டை இருந்தா இவுனுகளுக்கு என்ன? இப்பிடி எளுதறதுக்காக என்னெ மன்னிச்சிடு வாரென்கா.

உனக்கு எப்பிடித் தோணதோ அப்பிடித்தான் ஒரு ஏழைக்கும் தோணும். வேற ஆளு எல்லார் முன்னாலயும் -

மன்னிச்சுக்க இந்த வார்த்தைக்காக - 'அவுத்துக்காட்னா' எப்பிடி இருக்குமோ அப்பிடித்தானே ஒரு ஏழைக்கும் இருக்கும்?

ஒரு நாய்க்கூண்டு மாதிரி எடத்தில குடியிருக்கற ஏழைகிட்டப் போயி, - உன் குடும்ப உறவுகள் எப்படி இருக்கு?- அப்படீண்ணு கேட்டா எப்பிடி இருக்கும்? நீயேன் என்னை அவமானப்படுத்தணும்? என் விரோதிகளுக்கு ஆதரவா என்னோட கவுரவத்தெயும், பெருமையயும் ஏன் அபகரிக்கணும்? நானொரு மரியாதையான மனுசனில்லையா!

நான் இண்ணிக்கி என்னோட ஆபிசில ஒக்காந்திட்டிருந் தேன். ஒரு குட்டிக்கரடி மாதிரி, ஒரு கொத்தப்பட்ட சிட்டுக்குருவி மாதிரி அவமானத்தில ஒக்காந்திட்டிருந்தேன். மொழங்கை பகுதியில ஓட்டை இருந்தா, கோட்டுப் பொத்தானுக துணில தொங்கிட்டிருந்தா அப்பிடித்தானே இருக்கும் வாரென்கா?

நான் அப்படித்தான் இருந்தேன். உனக்கு இது சங்கடமாத்தான் இருக்கும். ஸ்டீபன் கார்லோவிச் கூட எங்கிட்ட வந்து வேலயப் பத்தி பேசிகிட்டு இருந்தாரு. பேசினாரு பேசினாரு அப்பிடிப் பேசினாரு. அப்பறம் ஏதோ எதேச்சயா, "ஓ மை டியர் மகார் அலெக்சியேவிச்..." அப்படீண்ணு ஆரம்பிச்சு முடிக்கறதுக்குள்ள அவுரு என்ன நெனச்சாரோ. என்னோட ஒட்டுப்போட்ட கோட்ட நெனச்சு எனக்கே வெக்கமாயிடுச்சு. மூஞ்சி செவந்துபோச்சு. ஒட்டுப்போட்ட துணிகூட செவந்து போச்சு!

அவுரு எதையாச்சும் கண்டு பிடிச்சிட்டாரோ? அட, கடவுளே. எல்லாமே கண்டு பிடிக்கப்பட வேண்டியது தானே? எனக்கு சந்தேகம் வந்திருச்சுங்கறதெ ஒப்புக்கிறேன். செல ஆளுக மேல எனக்கு ரொம்பச் சந்தேகம். இந்த வில்லன்களோட ஒப்பிடும்போது அதெல்லாம் ஒண்ணுமில்லதான்.

இந்த மாதிரி ஆளுக உனக்கு துரோகம் பண்ணிடுவாங்க. அவங்ககிட்ட எந்த நல்ல அம்சமும் கெடயாது. இதெல்லாமே யாரோட வெளயாட்டுங்கறது இப்ப எனக்குத் தெரிஞ்சு போச்சு. இதெல்லாம் ரட்டாசியேயெவ்வோட வெளையாட்டு.

எங்க டிபார்ட்மென்ட்ல வேல செய்யற யாருகிட்டயோ என்னப் பத்தி எல்லாத்தயும் சொல்லி இருக்காரு. அது அப்படியே ஆபீஸ் பூரா பரவிடுச்சு. எங்க டிபார்ட்மென்ட்ல எல்லாரப் பத்தி எல்லாமும் எல்லாருக்கும் தெரியும்!

அதனால அவங்க நம்ம வீட்டுப் பக்கம்போகும்போது நம்ம ஜன்னலக் காட்டிப் பேசுவாங்க. உன்னோட ஜன்னலக் காட்டியும் பேசுவாங்க. "கொழந்தெ திருடிப் பிசாசு" ண்ணு வூட்டுக்காரம்மா சொல்வாங்க. அப்பறம் அவ கெட்ட வார்த்தயில திட்ட ஆரம்பிச்சிடுவா.

இதெல்லாங்கூட ஒண்ணுமில்லாமெப் பண்ணிருவாரு ரட்டாசியேயெவ். நம் ரெண்டுபேரையும் இணைச்சு நகைச்சுவை கதை எழுதியிருக்காரு. அதெ எங்க வீட்ல குடியிருக்கற நல்லவங்க எங்கிட்ட காட்னாங்க. எனக்கு என்ன பண்றதின்னே தெரியல வாரென்கா.

எதாச்சும் செஞ்சாகணும். அதனால் நமக்குக் கடவுள் மேலயே கோவம். செரி. எனக்கு எதோ புத்தகங்க அனுப்பறதா சொன்னியே. என்னோட வெறுமையெ அது போக்கிடும்.

அந்தப் புத்தக விவகாரத்த மறந்திடு. அது வெறும் ஒரு புத்தகந்தானே? கற்பனைப் பாத்திரங்கள வெச்சுப் பின்னின கததானே? சோம்பேறிப் பசங்க படிக்கறதுக்காக எழுதற குப்பைதான் நாவல். என்னோட நீண்ட கால அனுபவத்திலிருந்து சொல்றேன்.

அவங்க சேக்ஸ்பியரப் பத்திகூட உங்கிட்ட புகழ்ந்து கிட்டே இருப்பாங்க. 'பாரும்மா, இலக்கியம் அப்படீண்ணா, அது சேக்ஸ்பியர்தான்'னு சொல்வாங்க. சேக்ஸ்பியர்னா என்ன அதுவும் குப்பைதான்! எல்லாமே குப்பை கூளம்தான். எல்லாமே கேலி பண்றதுக்காக எழுதப்பட்டதுதான்!

உன்னுடைய

மகார் தேவுஷ்கின்

ஆகஸ்டு 2

அன்புள்ள மகார் அலெக்சியேவிச் அய்யா அவர்களே!

எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டாம். கடவுள் அருளால் எல்லாம் சரியாகிவிடும். ஃபெடோரா, எனக்கும் தனக்குமாக நிறைய வேலைகள் வாங்கி வந்திருக்கிறாள். உற்சாகமாகப் பணிகளை ஆரம்பித்துவிட்டோம். நாங்கள் எல்லா வற்றையும் சரி செய்து விடுவோம்.

என்னுடைய சமீபத்திய பிரச்சனைகள் எதுவும் ஆன்னா ஃபியோதரோவ்னாவுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை என்று ஃபெடோரா நினைக்கிறாள். என்னவோ இன்றைக்கு வழக்கத் திற்கு மாறாக மிகவும் உற்சாகமாக இருக்கிறது.

நீங்கள் கடன் வாங்க நினைக்கிறீர்கள்; தயவு செய்து அதைச் செய்ய வேண்டாம். திருப்பித் தரும்போது ஏகப்பட்ட பிரச்சனைகள் ஏற்படும். உங்களுக்குக் கெடுதல் நினைப்பவர்கள், எதிரிகள் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அற்ப காரணங்களுக் காக நீங்களே உங்களை வருத்திக் கொள்கிறீர்கள்.

மகார் சொல்வதைக் கவனியுங்கள். சென்ற தடவையே சொன்னேன். உங்கள் தோற்றம் ஒழுங்காக இல்லை. பொருத்தமாக உடுத்த வேண்டாமா? சரி. விடைபெறுகிறேன். தவறாமல் என்னை வந்து பார்ப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

உங்கள்

வா.அலெ.

ஆகஸ்டு 3

*என் சின்னத் தேவதை வார்வரா அலெக்சியேவ்னா!*

என் வாழ்வின் ஒளியே! சில நம்பிக்கைகள் எனக்குள் பிறந்திருப்பதால அதெ நான் அவசரமாக உனக்கு அறிவிக்க வேண்டியிருக்கு.

என் சின்னமகளே, என் சின்னத் தேவதையே, நான் கடன் வாங்கக் கூடாதுன்னு எழுதியிருக்கே. என் பொம்முக்குட்டி, கடன் வாங்காமெ ஒண்ணும் நடக்காது. இப்பவே நெலமெ எனக்குப் படுமோசம்.

யாருக்குத் தெரியும், உனக்கு எதாச்சும் ஆயிருச்சின்னா என்ன செய்யறது? இப்பவே நீ ரொம்பப் பலவீனமா இருக்கே. அதனால், நான் கண்டிப்பா கடன் வாங்கியே தீருவேன்ங்றதெத் தெரிவிக்கத்தான் இத எழுதறேன். சரி. தொடர்ந்து......

வார்வரா அலெக்சியேவ்னா, ஆபிசில, நான் உக்காந்திட்டிருக்கற சீட்டுக்குப் பக்கத்து சீட்டுதான் யெர்மெல்யான் இவானவிச். இந்த ஆளு உனக்குத் தெரிந்த யெர்மெல்யான் அல்ல. இவர் வேறெ. இவரு என்னப்போல அதிகாரமில்லாத அதிகாரி. நாங்க ரெண்டு பேரும் பழைய போர்வீரர்கள். எங்க டிப்பார்ட்மெண்ட்டிலயே நாங்கதான் ரொம்ப மூத்தவங்க.

அவரு ரெம்ப நல்ல மனுசன். சுயநலமில்லாத ஆத்மா. அதிகம் பேசமாட்டாரு. பாத்தா உண்மையான கரடி மாதிரியே இருப்பாரு. மத்தபடி அவரு தொழில்ல ரொம்ப சரியா இருப்பாரு. அவரோட பேனா இங்கிலீஸ்தான் பிரதி எடுக்கும்.

உண்மை சொன்னா, என்னோட கையெழுத்து அவருட அவ்வளவுக்கு அழகா இருக்காது. சரியான ஆளுதான். நாங்க ரெண்டு பேரும் ரொம்ப நெருக்கமா இல்லெ. சும்மா, அலோ, வணக்கம் அவ்வளவுதான்.

எப்பவாச்சும் பேனாக்கத்தி வேணும்னா, "யெவ்மெல்யான் இவானவிச், கொஞ்சம் கத்தி குடுக்கறீங்களா"ண்ணு கேப்பேன். வேறென்ன பேச இருக்கு. அவ்வளவுதானே? இண்ணக்கி அவரு, "மகார் அலெக்சியேவிச் என்ன அவ்வளவு ஆழமா யோசனை?"ண்ணாரு. மரியாதையான ஆளுங்கறதனால, "யெர்மெல்யான் இவானவிச்.... அப்படீண்ணு ஆரம்பிச்சு சில விசயங்களை கொஞ்சமா சொன்னேன். பூரா சொல்ல மனசு வரலெ. "

எல்லாத்தயும் கேட்டுகிட்டு "நீங்க கண்டிப்பா கடன் வாங்கித்தான் ஆகணும்"அப்படீண்ணாரு. "கடனெ பியோத்தர் பெத்ரோவிச் கிட்டயே வாங்கலாம். வட்டிக்கித்தான் குடுக்கறார். நாங்கூட வாங்கியிருக்கேன். வட்டி ஜாஸ்தி இல்லெ. கொறச்சலாதான் இருக்கும்,"ணாரு.

அடடா, என்னோட சின்ன இதயம் அப்பிடியே பொங்கிருச்சு. கடவுள், அந்தக் கடன் கொடுக்கிறவர் மனசில கருணை வரவெச்சு, எனக்குக் கடன் குடுக்க சம்மதிக்க செஞ்சிடுவார்னு நம்பினேன். அப்பறம், வீட்டுக்கார அம்மாளுக்கு எவ்வளவு குடுக்கறது, உனக்கு எந்த அளவுக்கு உதவி செய்யறதிண்ற மனசில கணக்குப் போட்டேன். இல்லேண்ணா விவகாரம் ரொம்ப மோசமாயிடுமே! என்னோட ஆபிசில எல்லாரும் என்னெக் கேவலமாப் பாப்பாங்களே, சிரிப்பாங்களே. கடவுள் அவர்களை மன்னிப்பாராக!

சில சமயம் என் மேலதிகாரி என்னோட மேசயக் கடந்து போறப்ப, நான் மோசமா உடுத்தியிருக்கறதெப் பாக்கத்தான் செய்யறாரு! அவுருக்கு எல்லாமே சுத்தமா நீட்டா இருக்கணும். அதுதான் அவருக்கு ரொம்ப முக்கியம். அவுரு ஒண்ணும் சொல்லமாட்டாரு. எனக்குத்தான் வெக்கமா இருக்கு. நான் உடுத்தியிருக்கற கந்தலுக்குள்ள அப்பிடியே ஒடுங்கிப் போயிடறேன். என்னோட அவமானத்த என்னோட கிளிஞ்ச பாக்கட்டுக்குள்ள ஒளிச்சு வெச்சிடறேன். நான், கடன் கெடைக்கும்கற நம்பிக்கையிலதான் எல்லாத் திட்டங்களையும் போட்டுகிட்டு இருந்தேன்.

ஆனா, வாரென்கா, எல்லாமே படுமுட்டாள்தனமா ஆயிடுச்சு. நாம் போனேன். கடன் கேக்கதான். பவ்வியமா அவருகிட்ட, "பியோத்தர் பெத்ரோவிச்" அப்படீண்ணு ரெண்டு தடவெ கூப்பிட்டேன். அப்பறம் மெல்லத் திரும்பிப் பாத்தாரு. "அதுங்க, வந்து...ஒரு முப்பது ரூபிள் அளவுக்கு..."ண்ணு மெல்ல இழுத்தா, அவரு ஒண்ணுமே புரியாத மாதிரி முளிச்சாரு.

நான், பெறகு வெளக்கி சொன்னா, அவரு சிரிக்கிறாரு! அப்பறம் மௌனமாயிட்டாரு. மறுபடியும் அதையே திருப்பிச் சொன்னனா, அவுரு, "உனக்கு செக்கூரிட்டி இருக்கா?" ண்ணு கேட்டாரு! ஒடனே ஏதோ பத்தரத்தப் பாக்கறதும் எளுதறதுமா என்னக் கவனிக்கவே இல்லெ.

"சம்பளம் கெடச்சவுடனே திருப்பிக் குடுத்திடுவேன். தவறாமெக் குடுத்திடறேன் அய்யா. அது என்னோட மொதக் கடமெ இல்லயா?"ண்ணு சொன்னேன். அப்ப அவர யாரோ கூப்பிட எந்திருச்சு போயிட்டாரு. நான் காத்திட்டிருந்தேன். திரும்பி வந்தாரு. வந்து இறகு பேனாவெ சீவ ஆரம்பிச்சாரு! என்னெத் திரும்பிக்கூடப் பாக்கலெ!

நானும் விடலெ, "அய்யா, எதாச்சும் வாய்ப்பு இருக்குங்களா?"அப்பிடீண்ணா, அவுரு வாயெ தெறக்கலெ. நான் நிண்ணுகிட்டே இருந்தேன். மறுபடியும் ஒரு தடவெ கடேசியா கேட்டிறலாம்ணு, அவரோட சட்டெயப் புடிச்சு மெல்ல இழுத்தேன். அவுரு அசையில. எழுதுகோல சீவி முடிச்சி எளுத ஆரம்பிச்சிட்டாரு.

நான் வெளியே வந்திட்டேன். பாரும்மா, இவங்க எல்லாம் வசதியானவங்க. ரொம்பக் கர்வம் புடிச்சவங்க - ஆனா நானு? நம்மள அவங்களோட ஒப்பிட முடியுமா வாரென்கா? அதனாலதான் நான் இதயெல்லாம் உனக்கு எளுத வேண்டியதாயிடுச்சு.

யெர்மெல்யான் சிரிக்கிறாரு. அந்த நல்ல மனுசர் எனக்கு நம்பிக்கை கொடுத்தார். வேறு ஒருவரை அறிமுகப்படுத்தி வைப்பதாக உறுதியளித்தார். அந்த ஆள் 'வைபோர்க் சைடு'என்ற இடத்தில் வசிப்பதாகச் சொன்னார்.

ரொம்பக் கம்மி வட்டிக்குக் கடன் குடுக்கறாராம். எதோ கீழ்ப் பதவியில வேல பாக்கறவராம். இந்தத் தடவெ உறுதியா கடன் கெடச்சிடும்னு சொல்றாரு யெர்மெல்யான். என் சின்னத் தேவதையே, நானு நாளைக்குப் போயி அவரப் பாக்கப் போறேன். நீ என்ன நெனைக்கிறே?

நான் கடன் வாங்கலெ, பெரிய பிரளயமே நடந்திடும். வீட்டுக்கார அம்மா, என்னெ ரூமக் காலி பண்ணச் சொல்லி வெறட்டரா. மத்தியான சாப்பாடு கெடயாதுன்னுட்டா! ஆமா, என்னோட பூட்சுக கிளிஞ்சுதான் இருக்கு. என்னோட கோட்டு பொத்தானுகளக் காணம்... சரி. இல்லாத விவகாரங்க அவ்வளவு தான்! என்னோட மேலதிகாரிக கண்ணில படக்கூடாதது பட்டிட்டா நான் என்னம்மா செய்யறது? பெரிய குழப்பம் வாரென்கா, பெரிய குழப்பம் குழப்பமேதான்!

மகார் தேவுஷ்கின்

ஆகஸ்டு 4

அன்பு மகார் அலெக்சியேவிச்!

தயவு செய்து கொஞ்சம் பணத்தைச் சீக்கிரம் கடன் வாங்கிவிடுங்கள். இப்போதைய சூழ்நிலையில் உங்களிடம் உதவி கேட்கக் கூடாதுதான். ஆனால், நீங்கள் என்னுடைய தற்போதைய நிலையை மட்டும் அறிந்தால்......!

நாங்கள் தொடர்ந்து இந்த வீட்டில் குடியிருக்க முடியாது போலிருக்கிறது. படுமோசமான சம்பவங்கள் நடந்துவிட்டன. இப்போது நான் எந்தவிதமான நெருக்கடியிலும் பதற்றத்திலும் இருக்கிறேன் என்பதை நீங்கள் அறிந்தால்.....!

இன்று காலை ஓர் அறிமுகமில்லாத முதியவர் எங்களைப் பார்க்க வந்திருந்தார். அவர் ஏகப்பட்ட பதக்கங்களை மார்பில் குத்தியிருந்தார். எனக்குத் திகைப்பாக இருந்தது. அவர் எதற்காக எங்களைப் பார்க்க வந்தார் என்று விளங்காமல் விழித்தேன்.

அப்போது ஃபெடோரா கடைக்குப் போயிருந்தாள். அந்தப் பெரியவர் நிறையக் கேள்விகள் கேட்டார். நான் எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறேன், என்ன தொழில் செய்கிறேன், என்றெல்லாம் கேட்டுக் கொண்டே போனார். நான் பதில் சொல்வதற்கு அவர் விடவே இல்லை.

தான், யாரோ ஒரு இளம் அதிகாரியின் மாமன் என்றும், அவன் மட்டமானவன் என்றும், அவர் எங்களுக்கு அந்தக் குடியிருப்பில் கெட்ட பெயர் ஏற்படுத்திவிட்டான் என்றும், அவனை நம்ப வேண்டாம் என்றும், இளைஞர்களை நம்ப வேண்டாம் என்றும், எங்களைக் காப்பாற்றவே அவர் முன்வந்திருப்பதாகவும், எனக்கு அவர் தந்தைபோல இருந்து பாதுகாப்பு தரப்போவதாகவும், என்மேல் அவர் மிகவும் பாசம் கொண்டிருப்பதாகவும், என்ன உதவி வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறி என்னை அருகில் இழுத்துப் பிடித்து என் கன்னத்தைக் கிள்ளினார்! என் கன்னங்களில் குழி விழுவது

கண்டு மிகவும் மகிழ்ச்சியடைவதாகவும் என்னை முத்தமிட முயன்றார். அந்தக் கிழவரின் நடவடிக்கை வெறுப்பைத் தந்தது.

நல்ல வேளையாக அப்போது ஃபெடோரா அறைக்குள் நுழைந்தாள். அந்த ஆள் தடுமாற்றம் அடைந்து, என்னுடைய நாகரிகம், மற்றும் ஒழுக்கத்தில் தாம் மிகவும் மகிழ்ச்சியடைவதாகவும், நான் அவரை வெளியேற்றிவிட மாட்டேன் என்று நம்புவதாகவும் கூறினார்.

அப்புறம் ஃபெடோராவைத் தனியே அழைத்து அவளுக்குப் பணம் கொடுக்க முயன்றிருக்கிறார். இயல்பாகவே அவள் அதை வாங்கிக் கொள்ளவில்லை. கடைசியில் தாம் புறப்படப் போவதாகச் சொல்லி எல்லாவிதமான உறுதி மொழிகளையும் மறுபடியும் சொன்னார். தாம் மறுபடியும் என்னை வந்து பார்க்கப் போவதாகவும், அப்போது எனக்குக் காதணி வாங்கி வரப் போவதாகவும், [அவரே அப்போது வெட்கப்பட்டது போல் தெரிந்தது] நாங்கள் இப்போதிருக்கும் வீட்டை மாற்றி, நல்ல வசதியான இடத்தில் குடியேறிவிடச் சொல்லி அதற்காக ஏற்பாட்டை அவரே செய்து கொடுப்பதாகவும், என் மேல் அவருக்கு விருப்பம் என்றும், நான் நேர்மையான, அறிவுள்ள சின்னப் பெண் என்பதால் இளைஞர்களிடம் ஏமாந்துவிட வேண்டாம் என்றும் அறிவுரை கூறத் தொடங்கிவிட்டார்.

அத்துடன் தமக்கு ஆன்னா ஃபியோதரோவ்னாவை நன்றாகத் தெரியும் என்றும், அவள்தான் என் விலாசம் கொடுத்து அனுப்பியதாகவும், ஆன்னா விரைவில் என்னைப் பார்க்க வருவாள் என்றும் கூறினார்.

எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. வாழ்க்கையில் இந்த மாதிரி ஒரு விவகாரத்தை நான் முதன்முதலாகச் சந்திக்க நேர்ந்த அதிர்ச்சியில் அந்த ஆளை அவமானப்படுத்தி எங்கள் குடியிருப்பை விட்டு விரட்டினோம்.

இது ஆன்னாவின் வேலை என்று தெரிகிறது. இல்லாவிட்டால் அவர் எப்படி என்னைத் தேடி வரமுடியும்?

இப்போது, மகார் அவர்களே, உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு உதவுங்கள். என்னைக் கைவிட்டு விடாதீர்கள். தயவு செய்து கொஞ்சம் கடன் வாங்கி விடுங்கள். இதே குடியிருப்பில் தொடர்ந்து இருக்கவும் முடியாத நிலை, அதே சமயம் வெளியேறிவிடவும் முடியாத நிலை. ஃபெடோராவும் இதைத்தான் சொல்கிறாள்.

குறைந்தபட்சம் ஒரு இருபத்தைந்து ரூபிளாக இருந்தால் நல்லது. கட்டாயம் அதை நான் திருப்பித் தந்துவிடுவேன். நான் சம்பாதித்துவிடுவேன். ஃபெடோரா எனக்கு சிறிது வேலை வாங்கித் தருவதாகச் சொன்னாள். சீக்கிரம் கிடைத்துவிடும்.

ஒருவேளை வட்டி மிகவும் அதிகமாகத் தோன்றினால்கூட வாங்கிவிடுங்கள் அய்யா. நான் எல்லாவற்றையும் திருப்பிச் செலுத்திவிடுவேன். எனக்கு உதவுவதில் பின்வாங்கிவிட வேண்டாம். உங்களுடைய இந்த நெருக்கடியான சூழ்நிலையில் உங்களுக்கு நான் மிகவும் சிரமம் கொடுக்கிறேன். ஆனால், எனது எல்லா நம்பிக்கைகளையும் உங்கள் மேல்தான் வைத்திருக்கிறேன்! மகார் அலெக்சியேவிச் அவர்களே, என்னை மறந்துவிட வேண்டாம். நீங்கள் வெற்றியடைய ஆண்டவன் அருள் புரிவாராக!

வா. அலெ.

ஆகஸ்டு 4

என் இனியவளே, வார்வரா அலெக்சியேவ்னா,

இந்த எதிர்பாராத அடிகள் என்னெ கிடுகலங்க வெச்சிடுச்சு. இந்த துரதிர்ஷ்டம் என்னோட உற்சாகத்தை யெல்லாம் கொண்ணு போட்ருச்சு. இந்த எச்சக்கலைகளும், தண்டப் பசங்களும் சேந்து உன்னெப் படுக்க வச்சிட்டாங்களே!

அத்தோட விடாமெ அந்த எச்சக்கலப் பசங்க என்னெ அடியோடு ஒழிச்சுக்கட்ட முடிவு பண்ணிட்டாங்க. அவங்க அப்படியே செஞ்சிருவானுக. ஆமா, அவங்களால அது முடியும்! உனக்கு மட்டும் உதவ முடியாமப் போனா நான் முன்னாடியே செத்துப் போயிருவேம்மா. உனக்கு உதவ முடியாமப் போறதே எனக்கு சாவுதான். சுத்தமான சாவு!

நான் உதவறேண்ணு வச்சுக்க. ஒரு சிட்டுக் குருவி மாதிரி பறந்து போயிடுவே. என்னெ விட்டும் பறந்து போயிடுவே. அந்தக் கொள்ளைக்கார ஆந்தைக் கூட்டத்தோட கூண்டில இருந்து தப்பிச்சு பறந்து போயிடுவே! இல்லேண்ணா அதுக உன்னெக் கொத்திக் கொண்ணுடுமே. அதுக தயாராத்தான் இருக்கு.

வாரென்கா, நீ எவ்வளவு கொடுமைக்காரி! இப்படிச் சொல்ல உனக்கு எப்பிடி மனசு வருது? நீ ரொம்பவும் சித்ரவதெ அனுபவிச்சிட்டே; காயம்பட்டிட்டே; வேதனப்பட்டிட்டே. எல்லாம் சரிதான். அதுக்காக, என்னெக் கஷ்டப்படுத்தறதா நீ எப்படி நெனைக்கலாம்? என் பறவைக் குஞ்சே, எப்படி அப்படி நீ நெனைக்கலாம்?

தையல்வேலகூட செய்ய முடியாத கஷ்டம் வந்து நோயில படுத்திட்டாத்தான் என்னோட உதவிக்கு வருவியா? எதுக்காக நீ அப்படி தையல் வேல செய்யணும்? ஒடம்பக் கவனிக்காமெ எதுக்கு இப்பிடிக் கஷ்டப்படணும்? உன்னோட அழகான கண்ணு போயிடும். நெனச்சு நெனச்சு மூள கொழம்பிடும்.

வாரென்கா, என்னெ என்ன உதவாக்கரண்னு நெனச்சுகிட்டயா? நான் உதவாக்கரதான். ஆனா, இப்ப செய்யற வேலயோட, சைடில கொஞ்சம் வேல தேடிக்கிவேன். வெவ்வேற ஆளுகளோட காயிதங்க, கடிதங்க எல்லாத்தையும் காப்பி பண்ற வேல வாங்கிக்குவேன். தொந்தரவு பண்ணியாச்சும் வேல வாங்கிக்குவேன். உனக்குத் தெரியும் நான் நல்லாவே காப்பி பண்ணுவேன்.

ஆளுக தேவையும் இருக்கு. உன்னெ மோசமான நிலைமை:'பில நான் கைவிட்ருவனா? நான் கடன் வாங்கத்தான் போறேன். என் சின்னத் தேவதையே, கடன் மட்டும் வாங்கலெ, நான் செத்தே போயிருவேன்! வட்டி அதிகம்னு பயந்து போயிரு வேண்ணு நெனைக்கறயா? நான் எதுக்கும் பயப்படமாட்டேன்!

நாப்பது ரூபிள் கடன் கேக்கப் போறேன். அதென்ன அவ்வளவு பெரிய தொகையா? என்ன சொல்றே வாரென்கா? நாப்பது ரூபிளுக்கு நான் நம்பிக்கைக்கு உரியவனா? என்னப் பாத்தவுடனே அந்த நம்பிக்கை வந்திடுமா? எம் மூஞ்சியப் பாத்தா கடன் கொடுக்கலாங்கற நம்பிக்கை வந்திடுமா? கொஞ்சம் யோசிச்சுப் பாரு, நம்பிக்கை தர்ற மாதிரி நான் இருக்கனா? என்ன நெனைக்கிறே?

எனக்கென்னமோ கொஞ்சம் பயமாத்தான் இருக்கு! உண்மையெச் சொல்லப்போனா அப்பிடித்தான் இருக்கு! நாப்பது கெடைச்சா இருவத்தஞ்சு உனக்கு. ரெண்டு வெள்ளி ரூபிள் வீட்டுக்கார அம்மாவுக்கு. பாக்கி என் சொந்த செலவுக்கு தேவப்படுது. வீட்டுக்கார அம்மாவுக்கு கொஞ்சம் ஜாஸ்தியாத் தான் குடுக்க வேண்டி இருக்கு. இருந்தாலும் எனக்கு எத்தனை யோ செலவுக இருக்கே. அதனால ஜாஸ்தி குடுக்க முடியாது.

அதப்பத்தி எதுக்கு? அந்தப் பேச்சே வேண்டாம். ஒரு வெள்ளி ரூபிளுக்கு காலணி வாங்குவேன். நாளைக்கி பழைய பூட்சுகளப் போட்டுட்டு ஆபீசுக்கு என்னால போக முடியுமாங்கறது சந்தேகமா இருக்கு. கழுத்துக்கு சுத்திக்க ஒரு துணி வேணுமே. அப்பறம் ஒரு கைக்குட்டை. கழுத்துத் துணி ஒரு வருசத்துக்கு முன்னால வாங்குனது.

நீ கூட எனக்கு ஒரு கைக்குட்டையும், உன்னோட மேலாடையில இருந்து ஒரு சட்டையும் தெச்சுக் குடுக்கறாச் சொல்லியிருந்த இல்லே? ஆனா, நான் பூட்சும், கைக்குட்டையும் வாங்கிடுவேன். அப்பறம் பொத்தானுக. என்னருமை சிட்டுக் குருவியே, பொத்தானுக இல்லாமெ எப்பிடி? என் கோட்ல பாதி பொத்தானுக கழண்டு போயிடுச்சு! மேலதிகாரி கண்ணில பட்டிட்டா என்ன சொல்வாரோ? என்ன சொல்வார்? என்னால அதெல்லாம் கேக்கவே முடியாது. ஏதாச்சும் கேவலமாப் பேசிட்டா நான் செத்தே போயிருவேன் வாரென்கா. ஆமா, செத்தே போயிருவேன். அந்த எடத்திலயே. அப்பிடியே! அத நெனச்சுப் பாத்தாலே உயிர்போற மாதிரி இருக்கு!

அதனால, என்னனோட அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி பண்ணப்பறம் மூணு ரூபிள்கள் மிச்சமிருக்கும். அதுக்கும் செலவிருக்கு. ஒரு அரப்பவுண்டு பொகையிலத்தூள் வாங்கணும். பொகை பிடிக்காமெ என்னால இருக்க முடியாது வாரென்கா. பொகைக் குழாயத் தொட்டு ஒம்பது நாளாயிடுச்சு. அதப்பத்தி உங்கிட்டகூட நான் எதுவும் சொல்லலெ. அத நெனச்சா அவமானமாத்தான் இருக்கு.

நீ அங்க அடிப்படை செலவுகளுக்கே காசில்லாமெ கஷ்டப்படறப்ப, நான் இங்க சந்தோசமா அனுபவிக்க முடியுமா? எம்மனசாட்சி முள்ளாக் குத்துமே. நான் வெளிப்படையாவே சொல்லிடறேன் வாரென்கா. எனக்கு இப்ப கட்டாயம் பணம் வேணும். இப்படி ஒரு தட்டுப்பாடு இதுவரைக்கும் எனக்கு ஏற்பட்டதே இல்லெ.

வீட்டுக்கார அம்மாளுக்கு என்னக் கண்டாலே வெறுப்பு. எம்மேல மரியாதையே கெடயாது. காரணம் கடன்தான். ஆபீசிலயும் அப்படித்தான். என்னெ மதிக்கவே மாட்டங்க. நான் என்னோட கஷ்டத்தெ மறைச்சுக்குவேன், யாருக்கும் தெரியாத படிக்கு. அவங்க கண்ணிலயே படாமெ இருக்கத்தான் முயற்சி பண்ணுவேன்.

உங்கிட்ட மட்டுந்தான் நான் வெளிப்படையா நடந்திக்கறேன். அதுக்கான தைரியம் எனக்கு இருக்கு.......

கடன் கெடைக்காமப் போனா என்ன ஆகும்? அய்யோ, அப்பிடி நெனைக்கவே பயமா இருக்கு. அந்த நெனப்பே என் உற்சாகத்தைக் கொண்ணுரும். அதனாலதான் இத எழுதறேன். எதுக்கும் தயாரா, முன்னெச்சரிக்கையா இருக்கணும் இல்லயா? இருந்தாலும் இந்த மோசமான ஏமாற்றத்தை எதிர்பார்த்துக் கவலப்படாதே. அப்பிடி ஏதாச்சும் ஏற்பட்டிட்டா உன்னோட நெலமெ என்ன ஆகுமோ? நீ இப்ப குடியிருக்கற எடத்த விட்டு வெளியேற உனக்கு விருப்பமில்லெ. நீ போகாதே நானிருக்கேன். எப்பவும் உங்கூட இருப்பேன்.

பணம் கெடக்கலே நான் அப்பிடியே காணாமப் போயிடுவேன்! மறைஞ்சு போயிருவேன்.

சரி. முகச்சவரம் பண்ணிக்கிட்டு சுத்தபத்தமா போய்ப் பாக்கறேன். நல்லபடியா நீட்டாப் போனா காரியம் கைகூடும்ங்ற நம்பிக்கை. கடவுள் இருக்கார். அவுரு கருண காட்டுவாரு. ஒரு பிரார்த்தனைகூட சொல்லீட்டுதான் போகப்போறேன்!

ம. தேவுஷ்கின்

ஆகஸ்டு 5

அன்புமிக்க மகார் அலெக்சியேவிச்!

குறைந்த பட்சம் நம்பிக்கை இழக்காமலாவது இருக்கலாமே! கவலைகள்தாம் கொட்டிக் கிடக்கின்றனவே!

இத்துடன் 30 வெள்ளி கொப்பெக் காசுகளை அனுப்பியிருக்கிறேன். இதற்கு மேல் என்னால் முடியவில்லை. ஏதோ உயிரோடிருக்கக் கொஞ்சம் உதவலாம், நாளை வரையாவது!

எம்மிடம் எதுவுமே இல்லை. நாளைக்கு என்ன ஆகுமோ தெரியவில்லை. மிகவும் வருத்தமாக இருக்கிறது மகார் அலெக்சியேவிச். என்னாலும் கவலைப்படாதீர்கள். அதனால் என்ன பயன்? சரி. என்னதான் செய்ய முடியும் உங்களால்?

நிலைமை அவ்வளவொன்றும் மோசமாகப் போய்விட வில்லை என்று ஃபெடோரா சொல்கிறாள். கொஞ்ச காலம் இப்போதிருக்கும் குடியிருப்பிலேயே இருப்பது, நிலைமை சற்று சரியானால், அவர்கள் விரும்பினால் வேறிடம் பார்ப்பது என்கிறாள். இங்கேயே தொடர்வது சங்கடமாகவே இருக்கிறது. இந்தக் கவலை சற்றுத் தணிந்தவுடன் உங்களுக்கு வேறு விபரங்கள் பற்றி எழுதுகிறேன்.

நீங்கள் என்ன மிகவும் வித்தியாசமான மனிதராக இருக்கிறீர்களே! எல்லாவற்றையும் மிகவும் அழுத்தமாக எடுத்துக் கொள்கிறீர்களே. அதனால்தான் எப்போதும் உங்களிடம் துயரம் நிலைபெற்றிருக்கிறது. உங்கள் கடிதங்கள் எல்லாவற்றையும் நான் கவனமாகப் படித்ததில் உங்கள் கவலைகள் எல்லாம் என்னைப் பற்றியதாகவே இருக்கின்றனவே தவிர, உங்களைப் பற்றி நீங்கள் கொஞ்சம்கூட நினைத்துப் பார்ப்பதே இல்லையே!

உங்களுக்கு இளகிய மனம் என்றுதான் எல்லாரும் சொல்கிறார்கள் நான் என்ன சொல்கிறேன் என்றால், உங்களுக்கு எல்லை மீறிய இளகிய மனம். நட்பு முறையில் உங்களுக்குச் சில அறிவுரைகள் சொல்ல விரும்புகிறேன்.

மகார் அவர்களே நான் உங்களுக்கு மிக மிகக் கடமைப்பட்டிருக்கிறேன். எனக்காக நீங்கள் என்னவெல்லாம் செய்திருக்கிறீர்கள்! அதற்காக என் ஆழ்ந்த நன்றிகள். என்னுடைய படுமோசமான நிலைமைகளை அனுசரித்து நீங்கள் கவலைப்படுவதும் சரிசெய்ய முயல்வதும், என் மகிழ்ச்சிக்காகவும், என் கவலைகள் போக்கவும் நீங்கள் இதயபூர்வமாக உதவ முன் வருவதும் பற்றியெல்லாம் நான் என்ன சொல்ல!

எனக்குப் பதிலாக, வேறு யாருக்காவது நீங்கள் இதே போல உதவியிருந்தால், உங்களைப் போன்ற பரிதாபத்திற்குரியவர் வேறு யாரும் இருக்க முடியாது.

இன்று நீங்கள், உங்கள் பணி முடித்து என்னைப் பார்க்க வந்தபோது, உங்கள் முகம் வெளிரிப்போய், நம்பிக்கையிழந்து, பரிதாபமாகக் காட்சியளித்தது. பார்க்கவே பயமாக இருந்தது. உங்கள் தோல்வியை என்னிடம் சொல்ல நீங்கள் அஞ்சுவதையும் நான் உணர்ந்து கொண்டேன். என்னைக் கவலைக்குள்ளாக்க நேருமே என்று நீங்கள் அஞ்சினீர்கள்.

ஆனால், நான் உங்கள் தோற்றத்தைக் கண்டு கடகடவென்று உரக்கச் சிரித்தேன். அது உங்கள் மனப் பாரத்தை அகற்றிவிட்டது. வேண்டாம் அய்யா, கவலைப்படாதீர்கள். சோகத்தில் மூழ்கி விடாதீர்கள். அறிவுபூர்வமாக யோசியுங்கள். நான் உங்களை மன்றாடிக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்; எல்லாம் சரியாகிவிடும். எல்லாமே நல்லதாக மாறிவிடும்; இல்லாவிட்டால், உங்கள் வாழ்வு நீங்காத துக்கத்தில் மூழ்கிவிடும்; மன வேதனைக்கு முடிவே இருக்காது.

சரி. முடிக்கிறேன் நண்பரே, மீண்டும் மன்றாடி வேண்டுகிறேன்; கவலையை விடுங்கள். என்னைப் பற்றி அதிகம் கவலைப்பட வேண்டாம்.

வா. அலெ.

ஆகஸ்டு 5

இனியவளே, வாரென்கா!

சரி. எல்லாமே நல்லபடியா இருக்கு. ஆமா. எல்லாமே! நீ முடிவு பண்ணீட்டயல்ல. எனக்குப் பணம் கெடைக்காமப் போனது ஒண்ணும் பெரிய விஷயமல்லண்ணு சொல்லீட்டயல்ல. அப்பறம் என்ன? சரி. நான் சமாதானம் அடைஞ்சிடறேன். உன்னெ நெனச்சாத்தான் எனக்கு சந்தோசமா இருக்கு.

இந்த வயசான மனுசனெ நீ கைவிட்டிடலேங்கறதெ நெனச்சா, நான் என்னோட அறையிலயே தொடர்ந்து இருக்கலாம்ணு நீ சொல்றதெ நெனச்சா சந்தோசமாத்தான் இருக்கு.

உண்மையச் சொன்னா, எம்மனசில சந்தோசம் ரொம்ப வழியிது. நீ எனக்கு எழுதியிருக்கற கடிதங்களெப் படிக்கறப்போ அப்பிடித்தான் ஆகுது. நீ என்னெ எவ்வளவு நேசிக்கிறே, என்னெப் பத்தி எவ்வளவு கவலப்படறேங்கறதெ நெனச்சா பெருமையாத் தான் இருக்கு. சரி. இப்ப அதப்பத்தி எதுக்கு?

மனசு, மனசெ சரியாப்பாத்துக்கும்! ஆனா நீ என்ன சொல்றே, ‘மனசெ விட்றாதீங்க’, அப்பிடீங்கறே.

செரி, ஆனா, நாளக்கி காலைல கால்ல எதப்போட்டுகிட்டு வேலைக்கிப் போறது? இந்த நெனப்புத்தான் ஆளக் கொல்லுது. சுத்தமாக் கொண்ணு போடும். ஆனா, நான் கவலைப்படறது எனக்காக அல்ல. கால்ல பூட்ஸ் இல்லாமெ, பெரிய கோட்டுப் போட்டுக்காமெ மோசமான உறைபனியில வெளிய போகக்கூடத் துணிஞ்சவன்தான். நான் கஷ்டப்படத்தயார். எதையும் தாங்கிக்கு வேன். ஆமா. நான் சின்ன மனுசன். சாதாரண மனுசன். ஆனா, பாக்கறவங்க என்ன சொல்லுவாங்க?

என்னோட எதிரிக, அந்த கரிநாக்கு வாயனுக நான் பெரிய கோட்டுப் போடாமாப் போனா என்னவெல்லாம் பேசுவாங்க தெரியுமா? கால்ல பூட்ஸ் போட்டுக்கறதுகூட அவுங்களுக்காகத்

தான்! அன்பானவளே, என்னோட கவுரவத்தெக் காப்பாத்த இதயெல்லாம் மாட்டிக்க வேண்டியிருக்கு. என்னோட ரெண்டு பூட்சுகள்ளயும் ஓட்டைகதான்.

இந்த அழுக்குச்சாமி சொல்றதெ நம்பு. இந்த நகலெடுக்கிறவன் சொல்றதெ நம்பு. எனக்கு எத்தன வருச அனுபவம்! எனக்கு இந்த உலகத்தையும் தெரியும், இந்த ஜனங்களயும் புரியும். அதனாலதான் நான் சொல்றதெ நம்பச் சொல்றேன்.

அப்பறம், இண்ணக்கி என்ன நடந்ததிண்ணு நான் வெளக்கமே சொல்லவே இல்லயே. என்னமோ இண்ணக்கிக் காத்தாலே எம் மனசில ஒரு அழுத்தம். ஒருவித ஆன்மீக அழுத்தம்ணு சொல்லலாம். அது எவ்வளவு பெரிசிண்ணா, ஒரு வருசத்து வேதனயெ கொஞ்ச நேரத்திலெ சேத்து அனுபவிச்ச மாதிரி.

அவ்வளவுதான். காலங்காத்தாலெ கெளம்பிட்டேன். கொட்ற பனியிலெ. நடுங்குற குளிர்லெ வெளிய கெளம்பிட்டேன். அந்த ஆளெ நேரத்திலயே புடிச்சிறணும்ணுதான் கெளம்பினேன். அப்பதான் சரியான நேரத்தில வேலைக்கும் போயிற முடியும்.

மழை பேஞ்சிகிட்டு இருந்திச்சு. எங்க பாத்தாலும் சேறும் சகதியும். இண்ணக்கி அப்பிடி விடிஞ்சது. என் சின்னப் பூவே, நான் என்னோட பெரிய கோட்டுக்குள்ள பூந்திட்டு, நடக்க ஆரம்பிச்சேன். நடக்கறேன், நடக்கறேன் அப்பிடி நடக்கறேன்......

அப்பிடி நடக்கறப்ப, "ஆண்டவரே, என்னை மன்னியுங்கள் சுவாமி! நான் கொஞ்ச வேலி கடந்து, எல்லை மீறிப் போயி, என்னோட ஆசைகளை நிறைவேத்தும்படியாகக் கேட்டுக்கறேன்," அப்படீண்ணு வாய்க்குள்ள சொல்லிக்கிட்டே போறேன்.

அந்த தேவாலயத்தத் தாண்டிப் போறப்ப சிலுவைக் குறி போட்டுக்கிட்டேன். நான் இதுவரை செஞ்ச பாவங்களெயெல்லாம் நெனச்சுப் பாக்கறப்போ ஆண்டவர்கூடப் பேசறதுக்கு எனக்கு எந்தத் தகுதியும் இல்லேங்கறதெ நல்லா உணர்ந்துகிட்டேன்.

நான் அப்பிடியே சேர்ந்து போயிட்டேன். எனக்கு முன்னால எதுவுமே தெரியில. திக்குத்திசை தெரியாமெ, எங்க போறோம் கறதும் தெரியாமெ நடந்து கிட்டே இருந்தேன்.

தெருவுகள்லெ ஆள் நடமாட்டமே இல்ல. எதிர்ல வர்றவங்களும் அவசர அவசரமாப் போயிட்டிருந்தாங்க. அந்தப் பனிக்குளிர்ல மழயில அந்த நேரத்தில எங்கதான் போவங்களோ! அப்ப ஒரு அழுக்குப் புடிச்ச தொழிலாளி மேல நான் இடிச்சுகிட்டேன். இல்லெ அவந்தான் இடிச்சிட்டுப் போனான். மொரட்டுப்பசங்க! அந்த நிலைமையில பணங்கூட எனக்கு முக்கியமாப் படலெ. கெடச்சாக் கெடக்கட்டும், கெடக்காட்டிப் போகட்டும்ங்ற மாதிரி ஆயிடுச்சு. அப்ப நான் வோஸ்க்ரெசன்ஸ்கி பாலத்து மேல போயிட்டிருந்தேன். திடீர்னு என்னோட பூட்ஸ் அடிப்பாகம் கழண்டு வந்திடுச்சு! எப்பிடி நடக்கறது? அப்பதான் எங்கூட வேல செய்யற அசிஸ்டெண்ட் கிளார்க் யெர்மொலயேவ் எதிர்ல நிமிந்து நிக்கறான்! ஏதோ காசு கேக்கற மாதிரி அவனோட பார்வை! அட அப்பனே, எங்கிட்ட ஏதப்பா காசு?

எனக்கு களச்சுப் போச்சு. ஒரு வினாடி அங்கயே நிண்ணேன். ஓய்வெடுக்கற மாதிரி. அப்பறம் நானே கொஞ்ச உற்சாகத்தெ வரவழைக்க முயற்சி பண்ணிப் பாத்தேன். ஒண்ணும் நடக்கலெ. வேற எதயாவது நெனச்சுப் பாக்கலாம்னா, அதுவும் முடியலெ. ஒடம்பெல்லாம் அளுக்கு, சேறு. எனக்கே அது அவமானமாப்பட்டது.

அப்பதான் தூரத்தில மஞ்சள் நெறத்தில ஒரு மரவீடு வலப் பக்கத்தில தெரிஞ்சது. அதுதான் யெமல்யான் இவானவிச் சொன்ன மார்க்கோவ் வீடா இருக்கணும். வட்டிக்குப் பணங்குடுக் கற ஆளு. இருந்தாலும் விசாரிச்சுப் பாப்பமேண்ணு ஒரு போலீஸ்காரர்கிட்ட கேட்டேன். "அது யார் வீடுங்க?" அப்படீண்ணு கேட்டா அந்த ஆளு யார்மேலயோ போற கோவத்தெ எங்கிட்ட காட்றான்! பல்லக் கடிச்சிட்டு ஆமாங்கறான்! இந்தப் போலீஸ்காரங்களே இப்பிடித்தான். கொஞ்சங்கூட உணர்ச்சியே இல்லாதவங்க. சரி. இப்ப போலீசப் பத்தியெல்லாம் எதுக்கு. சுருக்கமாகச் சொன்னா ஒண்ணுக்குப் பின்னால ஒண்ணா எல்லாமே மோசமாவே நடந்திட்டிருந்திச்சு.

நான் அந்த வீட்டுக்கு முன்னால போயி ரோட்ல அப்பிடியும் இப்பிடியும் மூணுதடவெ நடந்தேன். எனக்கு அவன் கடங்குடுக்கப் போறதில்லெ. ஒண்ணுமெ குடுக்கமாட்டாண்ணு நெனச்சிகிட்டே நடந்தேன். நான் அவனுக்குப் புது ஆளு. பாக்கறதுக்குப் படு மோசமான நிலமையிலவேற இருக்கேன். நம்ம சமாச்சாரமோ பக்குவமான விஷயம். அவன் எங்க குடுக்கப் போறாண்ணு நெனச்சிகிட்டே வெளிக் கேட்டத் திறந்தா, என்னோட துரதிர்ஷ்டத்த என்ன சொல்ல, ஒரு குட்டி நாயி பாஞ்சு வருது. கத்து கத்துண்ணு கத்துது. இத்தனூண்டு இருந்துகிட்டு என்ன கொரலு. எப்படியோ சமாளிச்சு கதவத் தொறந்து வீட்டுக்குள்ள போனா, இன்னொரு துரதிர்ஷ்டம், வாசப்படியிலயே காத்திட்டிருக்கு!

அங்க ஒரு பொம்பள, கதவோரமா நிண்ணுகிட்டு ஒரு பெரிய பாத்தரத்தில இருந்து இன்னொரு பாத்தரத்தில் பால் ஊத்திகிட்டிருந்தா. நான் தெரியாமப் போயி முட்டி பால் சிந்தப் போச்சு! அவ ஒடனே கத்த ஆரம்பிச்சிட்டா. "ஆரு நீயி? எங்கிருந்து வந்தே? என்ன வேணும் உனக்கு?" ண்ணு கத்தறா. ஏதோ சாத்தான்னுகூட சொன்னமாதிரி இருந்திச்சு. இத உனக்கு ஏன் சொல்றேண்ணா, எனக்கு எப்பவுமே இந்த மாதிரிதான் நடந்திட்டிருக்கு. இதெல்லாம் என்னோட தலவிதியாத்தான் இருக்கனும். ஏதோ ஒண்ணு. எங்கூடவே வந்து என்னெ அலக்கழிச்சிருது.

அந்த சமயத்தில ஒரு கெளட்டுப் பிசாசு, உள்ள இருந்து தலைய நீட்டி, என்னண்ணு பாத்தா? நான் சட்டுண்ணு அவகிட்டயே கேட்டேன்..... "மார்க்கோவ் இங்கதான இருக்காரு?"ண்ணேன். அந்தப் பிசாசு உடனே, 'இல்லே'ங்கறா! அப்பறம் என்னெ முழுசா ஒரு பார்வெ பாத்திட்டு, "உனக்கு என்ன வேணும்? அவரெ எதுக்குப் பாக்கனும்?" ணு கேட்டா.

நான் வெவரமா சொன்னேன். ஒடனே அவ தன்னோட மகளெக் கூப்டா. அவ ஒடனே வந்தா. அவ அப்பிடியொண்ணும் சின்ன வயசாத் தெரியலெ. வெறுங்காலோடதான் நடந்து வந்தா. "உங்கப்பாவெக் கூப்டு. ஒராள்கூடப் பேசிட்டிருக்காரு. சரி. நீ உள்ள வாய்யா" அப்படீண்ணா.

அந்த அறை அப்பிடியொண்ணும் மோசமில்லெ. சுவத்தில பெரிய படங்க மாட்டியிருந்திச்சு. எல்லாமே படைத்தளபதிக மாதிரி தெரிஞ்சிச்சு. ஒரு சோபா, ஒரு வட்டமேசை, வாசம்வர்ற மரத்தில செஞ்ச நாற்காலிக எல்லாம் இருந்திச்சு.

"ஒடனே வெளிய ஓடிறதுதான் நல்லது" - அப்பிடீண்ணுதான் அப்ப எனக்குத் தோணிச்சு. ஆனா, அப்பிடிப் போயிட முடியாதிண்ணு உனக்குத் தெரியும். ஒருவேள நாளக்கி வந்தா நெலமெ சரியா இருக்குமோ, பால்வேற சிந்திருச்சு. அந்த படங்கள்ல இருக்கற தளபதிக வேற மொறச்சு மொறச்சுப் பாக்கறாங்க!.... சரீண்ணு கதவப் பாத்துத் திரும்பி நகர ஆரம்பிக்கிறேன், அவுரு வந்திட்டாரு!

ஆளு. தல நரச்சவருதான். சின்னக் கண்ணுக. அளுக்கு கவுன் போட்டுகிட்டிருந்தாரு. இடுப்பில அதக் கட்ட கயிறு. என்னப் பாத்து என்ன ஏதுண்ணு கேட்டாரு நான் சொன்னேன்.

"பாருங்கய்யா, யெர்மல்யான் இவானவிச் - சொன்னாருங்க - ஒரு நாப்பது ரூபிள் போதுங்க..." அப்பிடி சொல்லி முடிக்கிறதுக்குள்ள.. தெரிஞ்சு போச்சு. அவுரு பார்வையிலேயே தெரிஞ்சுபோச்சு. கெடைக்காது.

அவுரு கத்தறாரு. "என்ன நெனச்சுகிட்டு வந்தே? இங்க காசுகீசு கெடயாது. எதாச்சும் செக்யூரிட்டி இருக்கா?" அந்த ஆளு முடிக்கிறக்குள்ள, நான், "அய்யா, அப்பிடி வெக்கறதுக்கு எங்கிட்ட எதுவும் இல்லெ. ஆனா, யெமல்யான்..." அப்படீண்ணு குறுக்க பூந்து விளக்க முயற்சி செஞ்சேன்.

எல்லாத்தையும் கேட்டிட்டு இல்லேங்கறாரு! "என்னய்யா யெமல்யான்? எங்கிட்ட இப்ப பணம் இல்லெ" ண்ணு அடிச்சு சொல்லீட்டாரு. இத நான் எதிர்பார்த்ததுதான். ஆனாலும் நிலமெ எவ்வளவு மோசம் பாரு. அப்பிடியே பூமி ரெண்டாப் பொளந்து என்னெ முளுங்கிடாதாண்ணு தோணுச்சு.

காலு ரெண்டும் நிக்கமுடியலெ. முதுகெல்லாம் செவந்து போச்சு. "சரி புறப்படு"ண்ணுட்டார்! பணம் எதுக்குங்கறாரு. என்ன சொல்ல வாரென்கா. வாயத் திறக்கவே விடல. கொஞ்சம்தான் வேணும். கண்டிப்பா திருப்பிக் கொடுத்திருவேன், என்ன

வட்டியானாலும் சரிண்ணு மறுபடியும் கெஞ்சிப் பாத்தேன். ஒண்ணும் நடக்கலெ. அப்ப நான் உன்னத்தான் நெனச்சிகிட்டேன்; உன்னோட துரதிர்ஷ்டங்கள், உன்னோட தேவைகள், உன்னோட அம்பது கொப்பெக் காசு எல்லாம். முடியாதிங்கறான் அந்த ஆளு. செக்கூரிட்டி வேணுங்கறான். அயோக்கியப் பய!

சரி. அப்பறம் என்ன நடந்ததிங்கற ஞாபகமே வரலெ. நான் எப்பிடி வெளில வந்தேன், எப்பிடி வைபோர்க்சைடக் கடந்து வோஸ்கரெசன்ஸ்கி பாலத்தெ கடந்து வந்தேன்கறதே ஞாபகம் இல்லெ. ரொம்பக் களச்சிட்டேன். ஆபீசுக்கு வேற நேரமாயிடுச்சு.

ஆபிஸ் கூலியான் ஸ்ரெக்கிரெவ் கிட்ட கொஞ்சம் பிரஷ் குடுப்பா, பனி சேறு எல்லாம் தொடச்சிட்டு உள்ள போறெண்ணா, அவன் என்னங்கறான், பிரஷ் கெட்டுப்போயிடும் அய்யாங்கறான்! பிரஷ், டிப்பார்ட்மெண்டுக்கு சொந்தமானது. அதெ எப்பிடி கொடுக்கறதுங்கறான்!

என்ன செய்யறது. ஒரு கந்தல் துணியெ எடுத்து காலையெல்லாம் தொடச்சிகிட்டு உள்ளே போனேன் வாரென்கா. இப்ப என்னெக் கொல்றது பணமல்ல வாரென்கா. இந்த சின்னச் சின்ன ஆபத்துகள், வதந்திக, கிசுகிசுப்புக, நமுட்டுச் சிரிப்புகதான்.

அன்பானவளே, என்னோட பொற்காலம் எல்லாம் போயே போயிடுச்சு. உன்னோட கடிதாசுகள்யெல்லாம் மறுபடியும் படிச்சுப் பாத்தேன். எனக்கு ரொம்ப வருத்தமா, கவலயா இருக்கும்மா. சரி. முடிக்கிறேன். ஆண்டவர் உன்னைக் காப்பாராக!

மா. தேவுஷ்கின்

பி.கு:

என்னோட கவலயச் சொல்றப்ப கொஞ்சம் நகைச்சுவையக் கலந்திட்டேன். சந்தோசப் படுத்ததான். சீக்கிரம் வந்து உன்னப் பாப்பேன். கட்டாயம் வருவேன். கட்டாயம் நாளக்கி வருவேன்.

ஆகஸ்டு 11

வார்வரா அலெக்சியேவ்னா, என் இனியவளே,

எனதன்பே,

நான் தொலஞ்சேன். நாம ரெண்டு பேரும் அடியோடு தொலஞ்சோம்! மீள முடியாத அளவுக்கு நாம அழிஞ்சு போயிட்டோம்! என்னோட பேரு, கவுரவம் எல்லாம் போச்சு! நான் அழிஞ்சேன், நீ அழிஞ்சே. எல்லாமே சரிகட்ட முடியாத அளவுக்குப் போயிடுச்சு. நான்தான் உன்ன இந்த அழிவுக்குக் கொண்டு போய் விட்டது!

நான் தண்டிக்கப்பட்டேன். கேவலப் படுத்தப்பட்டேன். கேலி செஞ்சாங்க. வீட்டுக்கார அம்மா தொடர்ந்து திட்டிகிட்டே இருக்கா. இன்னிக்கிக் கத்துணா பாரு. அப்பிடிக் கத்தித் தொலச்சா. வறுத்தெடுத்திட்டா. ஒரு சீமாத்துக் குச்சிய விடக் கேவலமா என்னெ நெனச்சிட்டா.

அப்பறம் நேத்து சாயந்திரம் ரட்டாசியேயெவ்வோட இலக்கியக் கூட்டத்தில ஒரு ஆளு ஒரு கடிதத்தெ சத்தமா படிச்சாரு. அது நான் உனக்கு எழுதின கடிதம். எப்பிடியோ அது என் கோட்டுப் பையிலிருந்து எனக்குத் தெரியாமெ கீழ விழுந்திடுச்சு. அய்யோ! அங்க சிரிப்பப் பாக்கணுமே. ஒரே ரகளை, சத்தம். கூச்சல். கேலி. துரோகிக!

நான் ஆட்சேபனை சொன்னேன். அதுக்கு அவுரு சொல்றாரு நாந்தான் துரோகியாம்! நம்ம ரெண்டு பேருக்கும் நடுவுல இருக்கற ஒறவ நாந்தான் மறச்சு வெச்ச துரோகியாம்! அவங்களுக்கு எல்லாம் தெரிஞ்சு போச்சு. ஆமா, எல்லாமே. ஒண்ணும் இனி மிச்சமில்லெ.

அந்த குடியிருப்பு வேலக்காரனும் அப்படித்தான். அவங்களோட சேந்திட்டான். சூப்பு வாங்கிட்டு வாப்பாண்ணா, வேற வேல இருக்குங்கறான். "நீங்க வூட்டுக்கார அம்மாவுக்குப் பணம் குடுக்கறதில்லெ. அப்ப நான் ஏன் போகணும், நீங்களே போயிட்டு வாங்க!"ங்கறான்.

படிப்பறிவில்லாத அவங்கூட என்னெ மதிக்கலெ. நான் அவனெ நல்லாத்திட்டிட்டேன். அவன் குடிச்சிருந்தானா என்னமோ, ரொம்ப மொரட்டுத் தனமா நடந்துகிட்டான், 'முட்டாளுக்குத்தான் முட்டாளத் தெரியும்' , ங்கறான். 'ஒரு பொம்பள கிட்டப் போயி 10 கொப்பெக் பிச்ச கேட்ட ஆளுதான நீங்க ?' ங்கறான்! 'எப்படி நீங்க எனக்கு உத்தரவு போடலாம் ?'ங்கறான்.

எம்மானமே போச்சு வாரென்கா. எவ்வளவு அவமானம் பாரு. இன்னும் உயிரோட இருக்கம்பாரு! எனக்கு சாமி வந்த மாதிரி ஆயிடுச்சு. பாஸ்போர்ட் இல்லாமெப் போற நாடோடியவிட மோசமாயிட்டேன். எப்பேர்ப்பட்ட குழப்பம் ? நான் தீந்தேன். சுத்தமாத் தீந்தேன். அடியோட தொலஞ்சேன், மீளவே முடியாதபடி.

ம. அ.லெ.

ஆகஸ்டு 13

அன்புமிக்க மாகார் அலெக்சியேவிச்!

தொல்லைக்குப் பிறகு தொல்லைகள் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கின்றன, நமக்கு. என்ன செய்வதென்றே எனக்குத் தெரியவில்லை! உங்களுக்கு என்ன ஆகுமோ தெரியவில்லை. இன்றைக்கு என் இடக்கையைச் சுட்டுக் கொண்டேன். எதிர்பாராத விபத்துதான். அதனால், தையல் வேலை செய்ய முடியவில்லை. ஃபெடோராவுக்கும் உடல் நலமில்லை. நான் துன்பத்திலும் துயரத்திலும்தான். இருந்தாலும் ஒரு முப்பது கொப்பெக் காசுகளை அனுப்புகிறேன். இதுதான் என்னிடமுள்ள மிச்சம். எப்படித்தான் உங்கள் துயரத்தைத் துடைப்பது என்று தெரியாமல் தத்தளிக்கிறேன்! உங்கள் நிலைமை எனக்குக் கண்ணீரை வரவழைத்துவிட்டது. வணக்கம், நண்பரே. இன்று நீங்கள் எங்களைப் பார்க்க வந்தால் எங்களுக்குப் பெரும் ஆறுதலாக இருக்கும்.

வா. அலெ.

ஆகஸ்டு 14

மகார் அலெக்சியேவிச்! என்ன ஆயிற்று உங்களுக்கு? என்ன, உங்களுக்குக் கடவுள் பயம்கூட இல்லாமற் போய்விட்டதா? என்னைப் பைத்தியமாக்கிவிட்டீர்கள். உங்களுக்கு அவமானமாக இல்லையா? நீங்கள் உங்களையே நாசம் செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் நற்பெயரைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். நீங்கள் ஒரு கவுரவமான, மரியாதைக்குரிய, பெரிய மனிதர் அல்லவா? ஆனால், உங்களது இப்போதைய நிலைமையை மற்றவர்கள் கண்டுபிடித்துவிட்டால் என்ன ஆவது? அப்போது நீங்கள் அவமானத்தினாலேயே செத்துப் போவீர்கள்!

உங்கள் தலை நரைத்துவிட்ட நிலைமைக்காவது மரியாதை கொடுங்கள். கடவுள் பயம் இருக்கிறதா, இல்லையா? இனி உங்களுக்கு உதவி செய்யக் கூடாது என்று ஃபெடோரா சொல்கிறாள். பணம் கொடுக்கக் கூடாது என்கிறாள். மகார், என்னை எந்த நிலைமைக்குக் கொண்டு விட்டுவிட்டீர்கள்!

இப்படி நடந்து கொண்டால் எனக்கு எதுவும் எதுவும் இல்லையென்றா நினைத்தீர்கள். உங்களால்தான் நான் இன்னும் இங்கே தாக்குப் பிடித்து வாழ்ந்து கொண்டிருக்கிறேன். மாடிப்படி வழியாக மேலும் கீழும் என்னால் போக முடியவில்லை. அவர்கள் என்னைச் சுட்டிக்காட்டி ஏதேதோ பேசுகிறார்கள். மோசமான வார்த்தைகளால் ஏசுகிறார்கள். 'அந்தக் குடிகாரனோடு உறவு வைத்திருக்கிறாள், பார்', என்று காதுபடப் பேசுகிறார்கள். அதையெல்லாம் கேட்க எனக்கு எப்படி இருக்கும்! உங்களை அவர்கள் கொண்டுவந்து போட்டபோது கேவலமாகப் பேசினார்கள். நான் எவ்வளவு அவமானப் பட்டேன் தெரியுமா?

நான் இனி இங்கே குடியிருக்கப் போவதில்லை. வெளியேறிவிடுவேன். நான் எங்கேயாவது வேலைக்காரியாகவோ, துணி துவைப்பவளாகவோ வேலை பார்த்துப் பிழைத்துக் கொள்வேன். எத்தனை தடவை உங்களை இங்கே வரச்

சொன்னேன். நீங்கள் வரவே இல்லை. என் கண்ணீரும், வேண்டுதல்களும் உங்களுக்கு ஒரு பொருட்டே அல்ல.

மகார் அலெக்சியேவிச்! உங்களுக்கு எங்கிருந்து பணம் கிடைத்தது? தயவு செய்து உங்களைக் கொஞ்சம் கவனியுங்கள். வீணாக நீங்கள் நாசம் செய்து கொண்டுவிட்டீர்கள். என்ன அவமானம்! என்ன கேவலம்!

நேற்று உங்கள் வீட்டுக்கார அம்மாள் உங்களை உள்ளே அனுமதிக்கவில்லையாமே! நீங்கள் முற்றத்திலேயே இரவெல்லாம் கிடந்தீர்களாமே! எனக்கு எல்லாம் தெரிந்துவிட்டது. இதையெல் லாம் அறிய வந்தபோது என் மனம்பட்ட பாட்டை என்னவென்று சொல்வது?

வாருங்கள்! இங்கே வந்து எங்களைப் பாருங்கள். இங்கே மகிழ்ச்சியாகக் காலத்தைக் கழிக்கலாம். நாம் சேர்ந்து படிக்கலாம். பழைய கதைகள் பேசலாம். ஃபெடோரா தான் போய் வந்த தீர்த்தயாத்திரை பற்றியெல்லாம் கதை கதையாகச் சொல்வாள். தயவு செய்து எனக்காக நீங்கள் கவனமாக இருங்கள்; உங்களைப் பாழாக்கிக் கொள்ளாதீர்கள். உங்களுக்காக மட்டுமே நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.

கவுரவம் தாழாமல், துரதிர்ஷ்ட காலங்களில் மனவுறுதியோடு நில்லுங்கள்.

வறுமை ஒரு பாவமல்ல என்பதை மறந்துவிடாதீர்கள். ஏன் மனம் தளர்கிறீர்கள்? எல்லாத் துயரங்களும் தற்காலிகம்! கடவுள் அருளால் எல்லாம் சரியாகும். நீங்கள் மனவுறுதியுடன் நின்றால்போதும். நான் இப்போது இருபது கொப்பெக்குகளை அனுப்புகிறேன். புகைக்குழாய்க்கு புகையிலை வேண்டுமானால் வாங்கிக் கொள்ளுங்கள். வேறு செலவு செய்ய வேண்டாம்.

முன்பே நீங்கள் அவமானப்பட்டிருக்கிறீர்கள். ஆனால், அதெல்லாம் ஒருவித, பொய்யான அவமான நினைப்புத்தான். தவறுகளை நினைத்து வருந்தினால் போதும். உண்மையான பாவமன்னிப்பு அதுதான். கடவுளை நம்புங்கள். அவர் எல்லாவற்றையும் சரிசெய்து விடுவார்.

வா. அலெ.

ஆகஸ்டு 19

என் அன்பே, வார்வரா அலெக்சியேவ்னா,

எனது சின்னப் பூவே வார்வரா அலெக்சியேவ்னா, எனக்கு அவமானமாப் போச்சு. ஆமா. சுத்தமா அவமானந்தான். அது சாதாரணமான விஷயந்தான். அதில் என்ன இருக்கு? நீ உன்னோட சின்ன இதயத்தில கொஞ்சம் உற்சாகத்தக் கொண்டாந்தா என்ன?

என்னோ பூட்சோட 'சோல'ப்பத்தி நான் நெனக்கவே இல்ல.' 'சோல்'எப்பவுமே புத்திகெட்டது. சாதாரணமா, அழுக்குப் புடிச்சு, மட்டமா இருக்கறதுதான் 'சோல்'. பூட்சுககூட புத்திகெட்டதுதான்!

கிரேக்கஞானி ஒருத்தர் எப்பவுமே வெறுங்காலோடதான் நடப்பாராம். அப்படியிருக்கும்போது, கூறுகெட்ட பூட்சப் பத்தி ஏன் பெருசா அலட்டிக்கணும்? அதுக்காக ஜனங்க ஏன் என்னெ அவமானப்படுத்தணும்? ஏன் வெறுக்கணும்?

ஆ, அன்பே, அன்பே, உனக்கெல்லாம் என்ன எழுதுணும்னு நல்லாத் தெரிஞ்சிருக்கு. ஃபெடோராகிட்ட சொல்லு, அவ ஒரு வெறும் வீடு பாத்துக்கறவதான். அவளுக்குத் தலையில சூடு ஜாஸ்தி. கொதிச்சுப்போயி ஒளர்றா. அவ ஒரு முட்டாள். படு முட்டாள்!

என்னோட தல நரச்சதப் பத்தி சொன்னா, நீ தப்பா நெனச்சிட்டே. என் அன்பே, நீ நெனக்கிற மாதிரி நான் ஒண்ணும் வயசானவன் இல்லெ!

யெமல்யா உனக்குத் தன்னோட வணக்கத்தத் தெரிவிக்கறார். நீ துக்கப்பட்டு அழுதுகிட்டே கடிதம் எழுதினதாச் சொல்றே. நானும் துக்கப்பட்டு அழுதுகிட்டேதான் எழுதறேன். முடிவா, உனக்கு நலமும் வளமும் உண்டாக வாழ்த்தறேன். என்னப் பொறுத்தவரெ, நான் நலமும் வளமுமாகத்தான் இருக்கறேன், என் சின்னத் தேவதையே.

உன் நண்பன்,

மகார்தேவுஷ்கின்.

ஆகஸ்டு 21

அம்மையாரும் என் இனிய நண்பருமான

வார்வரா அலெக்சியேவ்னா,

தப்புத்தான். நான் உனக்கு தப்பு பண்ணிட்டதாத்தான் நெனக்கிறேன். ஜெயிக்கிறதுக்கு எதுவுமேஇல்லேங்கறதுதான். என்னோட அபிப்பராயம். நீ என்ன நெனக்கிறே? நீ என்ன சொன்னாலும் சரி. என்னோட தப்பான நடத்தைக்கு முன்னாடியே எனக்கு இது தெரியும். என்னோட உற்சாகமெல்லாம் இப்ப அடியோட கவுந்திருச்சு. குற்ற மனப்பான்மையோட சேந்து உளுந்திருச்சு.

நான் கெட்டவனில்லெ. கல்மனசுக்காரனில்லெ. ஆனா, என் பொம்முக்குட்டியே, உன்னெ சித்திரவதெ பண்ணதால நான் ரத்தவெறி புடிச்ச புலியா மாறிட்டேன். அது உனக்கே தெரியும். எனக்கு ரத்ததாகம் ஒண்ணும் இல்லெ.

என்னோட மோசமான நடத்தைக்கு நான் மட்டும் காரணமில்லெ. என் சின்னத் தேவதையே என்னோட நெனப்பையோ, மனசயோகூடக் குத்தம் சொல்ல முடியாது. புடிக்காத விவகாரம்தான்.

நீ எனக்கு முப்பது வெள்ளிக் காசுகளெ அனுப்பிச்செ. அப்புறம் ஒரு இருவது. மனசு ரொம்ப வலிக்கிதும்மா. ஒரு அனாதையின் காசுதானே அது? கையெ வேற எரிச்சுகிட்டே! சீக்கிரம் பட்டினி கெடக்கப்போறெ. அப்பிடியிருந்து பொகையில வாங்கிக்கச் சொல்றே.

இந்தச் சூழ்நிலையிலே நான் என்ன செய்யணும்கறது எனக்குத் தெரியலெ. ஒருதுளிகூட மனசாட்சி இல்லாமெ ஒரு வழிப்பறிக் கொள்ளக்காரன் மாதிரி உன்னெக் கொள்ளயடிச் சிட்டிருக்கேன், ஒரு அனாதைக் கொழந்தகிட்ட இருந்து!

இத நெனச்சாத்தான் எம் மனசு அப்படியே கவுந்துபோகுது. மொதல்ல எனக்குத் தோண்றது இதுதான். நீ

ஒப்புக்கறயோ இல்லயோ, நானொரு தெண்டம்! என்னோட பூட்ஸ் சோலவிடக் கொஞ்சம் தேவலாம். அவ்வளவுதான்.

ஏதாச்சும் உபயோகமா இருக்கலாம்னு நெனச்சா, ஒதவாக்கறையா, மரியாத கெட்டவனா நடந்திக்கறேன். என்னப் பத்திய மரியாதையே எனக்குப் போச்சு. எப்ப நான் என்னோட நல்ல குணங்களயெல்லாம் கைவிட்டனோ, அப்பவே, எல்லாமே நாசமாயிடுச்சு. இதுக்காக என்னெ குத்தம் சொல்லக்கூடாது. எல்லாமே விதி!

மொதல்ல, கொஞ்சம் சுத்தமான காத்து வாங்க வெளில போனேன். அப்பதான் அதெல்லாமே நடந்து போச்சு. ஒண்ணுமேல ஒண்ணா ஏறி நிக்கிது! இயற்கை கொடூரமா இருந்திச்சு. ரொம்பக் குளிரு. மழை வேற. அப்பதான் யெமல்யா வந்தாரு. அவுரு, இருக்கறத எல்லாம் அடகு வெச்சிட்டாரு. அவருக்கு சொந்தமானது எல்லாத்தயும்!

நான் அவரப் பாத்தப்ப கடிக்கிறதுக்கு ஒரு துண்டு ரொட்டிகூட அவருகிட்ட இல்லெ. ஆளு ரெண்டு நாளா சாப்பிட ஒண்ணுமில்லாமெ வரப்பட்டினி! அப்பதான் அவுரு அத அடகுவெக்க நெனச்சாரு. அத ஒரு செக்கூரிட்டியா அடகுவெக்க முடியுமா? அது எப்பிடி ஒரு செக்கூரிட்டி ஆகும்? எனக்கு மனசு ரொம்பப் எளகிப் போச்சு. என்னோட கஷ்டம் ஒருபக்கம் இருந்தாலும், மனிதநேயம் வேண்டாமா? அப்பதான் அந்தப் பாவகாரியம் நடந்தது.

நாங்கள் ரெண்டுபேரும் சேந்து அழுதோம். என் அன்பே! உன்னப் பத்தி நாங்க பேசிக்கிட்டோம். அவுரு ரொம்ப நல்ல மனுசரு. ரொம்ப ரொம்ப நல்லவரு. உணர்ச்சிவசப்படக்கூடிய ஆளு. அத எனக்குத் தெரிஞ்சது.

நான் உனக்கு எவ்வளவு கடமப்பட்டிருக்கேங்கறது உனக்கே தெரியும். நான் உன்னெ தெரிஞ்சிக்கிறதுக்கு முன்னாடி, என்னெப் பத்தித் தெரிஞ்சிக்கதான் முயற்சி பண்ணினேன். அப்பதான் உன்னெ நேசிக்க ஆரம்பிச்சேன் என் சின்னத் தேவதையே.

அதுக்கு முன்னாடி ஒரு தனிமை என்னெ வாட்டிச்சு. நான் இந்த உலகத்திலயே இல்லாத மாதிரி. என்னோட விரோதிக, என்னோட உருவமே அசிங்கமா இருக்குண்ணு சொன்னாங்க. பாத்தாலே ஒரு வெறுப்புத் தோணுதுண்ணு சொன்னாங்க. ஆமா, அப்பிடித்தான் நான் இருந்தேன். நான் மங்கலா இருப்பதாச் சொன்னாங்க எனக்கும் அப்பிடித்தான் தோணுச்சு.

ஆனா, நீ வந்தவுடனே என் வாழ்க்கையில ஒரு வெளிச்சம் வந்தமாதிரி ஆச்சு. என் மனசிலயும், நெனப்பிலயும் வெளிச்சம் வந்திடுச்சு. ஒரு ஆத்ம திருப்தி ஏற்பட்டிருச்சு. நான் அவ்வள வொண்ணும் மோசமா இல்லேங்கற நெனப்பு வந்தது. எல்லாரப் போலத்தான் நானும் இருக்கறதாத் தோணுச்சு. நானும் ஒரு மனுசந்தான், அப்படீண்ணு நெனச்சிட்டிருந்தப்பதான் இந்த விதி வந்து தண்டிச்சிருச்சு. நானே என்னெத் தாழ்த்திகிட்டு அழிஞ்சிட்டேன்.

இப்ப உனக்கு எல்லாமே தெரியும். இதுல ஆச்சரியப்பட ஒண்ணுமே இல்லெ. தயவு செஞ்சு இதப் பத்தி எல்லாம் நெனக்காதே. என்னோட இதயம் ஒடஞ்சுபோச்சு. கசந்து போச்சு. வலிக்கிது.

என் அன்பானவளே, மேலானவளே,

என்றும் உன் நன்றி விசுவாசமுள்ள

மகார் தேவுஷ்கின்.

செப்டம்பர் 3

இதற்கு முந்தைய கடிதத்தை நான் முடிக்கவில்லை மகார் அலெக்சியேவிச் அவர்களே. சிலசமயம் எழுதச் சிரமமாக இருக்கிறது. சில சமயம் தன்னந்தனியே ஏகாந்தமாக இருந்துவிட மனம் விரும்புகிறது. எந்தத் துணையும் இல்லாமல், பகிர்ந்து கொள்ள யாரும் தேவைப்படாமல், நான் மட்டுமாகப் பொழுதைக் கழிக்க மனம் அடிக்கடி ஆசைப்படுகிறது.

சில சமயம் என் மனதில் தோன்றும் நினைவுகளை என்னால் விளக்கிச் சொல்ல முடியாது. அவை என்னை எங்கோ கொண்டு சென்று விடுகின்றன. அவை என் கட்டுப்பாட்டில் இல்லை. அவை மிகவும் ஆற்றல் மிக்கவை. சில சமயம் நான் பல மணிநேரம் அப்படி ஆழ்ந்து விடுகிறேன். அவை பிரக்ஞையற்று வருகின்றன. அதன் காரணமாக நான் இந்த நிகழ்காலத்தை அடியோடு மறந்துவிடுகிறேன்.

எனது நிகழ்காலப் பதிவுகள் அப்படி இருப்பதில்லை. எவ்வளவு மகிழ்ச்சிகரமாக இருந்தாலும், துயரம் கொண்டதாக இருந்தாலும், இவை என் கடந்த காலத்தைப் போல் அழுத்தமாகப் பதிவதில்லை. குறிப்பாக என் குழந்தைப் பருவத்தைப்போல.

என் பிள்ளைப் பிராயம் பொன்மயமான காலம். அந்தப் பொற்கால நினைவுகள் வந்து போன பிறகு தற்காலம் எனக்குப் பாரமாக ஆகிவிடுகின்றது. நான் தளர்ந்து போகிறேன். சக்தியிழந்து போய்விடுகிறேன். அந்தப் பழங்கனவுகள்தாம் என்னைத் தளர்ச்சிடையச் செய்திருக்க வேண்டும். இப்போது என் உடல்நிலை மோசமாகிக் கொண்டே போகிறது.

ஆனால், இன்றைய காலைப்பொழுது, புத்தம் புதியதாய், ஒளி நிறைந்ததாய், பளிச்செனப் புலர்ந்தது. இலையுதிர் காலத்தில் இத்தகைய விடியல் மிகவும் அரிதானது. இந்த விடியலை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்றேன். நமக்கான இலையுதிர் காலம் தொடங்கிவிட்டதா?

எங்கள் கிராமப்புறத்தில் வந்த இலையுதிர்காலம் எவ்வளவு அற்புதமாக இருந்தது! நான் அதை எவ்வளவு நேசித்தேன்! அப்போது நான் சிறுமிதான் என்றாலும் அதை உணர முடிந்தது. காலைப் பொழுதைவிட இலையுதிர்கால மாலைப் பொழுதை நான் மிகவும் நேசித்தேன்.

எங்கள் வீட்டிலிருந்து கல்லெறி தூரத்தில் ஓர் ஏரி இருந்தது. குன்றின் அடிவாரத்தில். அது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. இப்போதும் அது என் கண்முன்னால் விரிகிறது. அது ஒரு பெரிய ஏரி. பளிச்செனெ, ஒளிமயமாக இருக்கும் தூய்மையான ஏரி. எப்போதும் அமைதியாக இருக்கும். எதுவுமே அசையாது. ஏரிக்கரை மரம் செடிகொடிகள் எதுவுமே அசைவில்லாமல் தோன்றும். ஏரி நீர் ஓர் கண்ணாடி போல் தோன்றும். தூய்மை கொண்ட குளிர்ந்த ஏரி அது.

பனித் துகள்கள் புல்களின் மேல் மெல்ல விழும். ஏரிக்கரைக் குடில்களில் ஒவ்வொன்றாக விளக்குகள் ஏற்றப்படும். கால்நடைகள் வீடுகள் நோக்கித் திரும்பும். நான் அந்த அந்தி மாலைப் பொழுதில், வீட்டுக்குள்ளிருந்து மெல்ல நழுவி என் ஏரியை பார்க்கப் போய்விடுவேன். அப்போது நான் எல்லாவற்றை யும் மறந்துபோய் விடுவேன். சில சமயம் நான் பார்த்த காட்சிகள் எல்லாம் மறந்து போய்விடுகின்றன. மீனவர்கள் காய்ந்த சுள்ளி களைக் கட்டிக் கொண்டு வந்து ஏரிக்கரையில் தீமூட்டுவார்கள். அந்த வெளிச்சம் ஏரி நீர்மீது வெகுதூரத்திற்குப் படிந்திருக்கும்.

வானம் மிகக் குளிர்ந்து நீலம் பாரித்து இருக்கும். ஓரங்களில் சிவந்த பட்டைகள். சற்று நேரத்தில் அந்தச் சிவப்பு வெளிரிப் போய்க் கொண்டே இருக்கும். அப்போதுதான் நிலா தோன்றும். காற்று ஓசையுடன் வீசத் தொடங்கும். ஏதோ ஒரு சின்னப் பறவை பயந்து எழுந்துபோய்ப் பறக்கும்.

அல்லது ஏரிக்கரைக் கோரைப் புற்கள் காற்றடிப்பில் சரசரக்கும். அல்லது, மீன் ஒன்று ஏரியில் துள்ளிக் குதிக்கும். அந்த ஓசை தெளிவாகக் கேட்கும். வெள்ளை நீராவி நீல ஏரியின் மேற்பரப்பில் மெல்ல மேலெழும். அது லேசானதாய், கண்ணாடி போல் இருக்கும்.

தூரத்துக் காட்சிகள் எல்லாம் மூடுபனியில் மூழ்கிப் போகும். ஏரிக்கரையில் ஒரு படகு ஏரிக்கரை, ஏரி நடுத்தீவு, ஏரிக்கரையில் கைவிடப்பட்டுக் கிடக்கும் ஒரு பீப்பாய், தண்ணீரின் மேற்பரப்பில் விழும் தூண்டில்கள், மஞ்சள் இலைகளுடன் ஒரு வில்லோ மரக்கிளை கொடிகள் பின்னியபடி, காலங்கடந்த கடற்புறா ஒன்று மேலே பறந்து நீருக்குள் பாய்வது, பிறகு மீண்டும் மேலே வந்து உயரப் பறந்து மூடுபனிக்குள் மறைந்து போவது போன்ற காட்சிகளை எல்லாம் மறந்து பார்த்துக் கொண்டும், கேட்டுக் கொண்டும் இருப்பேன். என்ன ஆனந்த பரவசம்! அப்போது நான் சிறுமி, சின்னக் குழந்தை......

இலையுதிர் காலத்தின் மீது அவ்வளவு பிரியம் எனக்கு. இலையுதிர் காலத்தின் இறுதிப் பகுதியில் அறுவடை முடிந்திருக்கும். எல்லா வேலைகளும் முடிந்துபோயிருக்கும். உழவர் இல்ல இளைஞர்கள் தங்கள் குடில்களில், மாலையில் ஒன்று கூடுவார்கள்; மற்றவர்கள் குளிர்காலத்திற்காகக் காத்திருப்பார்கள்.

எல்லாமே ஒருவித மந்தநிலையில் காணப்படும். வானம் மேகங்களைப் பார்த்து முறைக்கும். அடுத்துள்ள காட்டில் மஞ்சள் இலைகள் தரையெல்லாம் பரவிக் கிடக்கும். பாதை முழுக்க பழுத்த இலைகள். மரங்கள் கருமை நிறம் கொள்ளும், அல்லது நீல நிறம். குறிப்பாக மாலை வேளைகளில்.

ஈரமான மூடுபனி மரங்களின் மீது இறங்கும். அதன் மூலமாகப் பார்க்கும்போது, மரங்கள் பூதங்கள் போலத் தோற்றமளிக்கும்; அருவருப்பாகவும் அச்சந்தருவதாகவும் இருக்கும். வெளியே போய்விட்டு வீடு திரும்பும்போது நேரமாகிவிட்டால், பயந்துபோய் அவசர அவசரமாக நடக்க வேண்டி வரும். அய்யோ, அது பயங்கரம்! காற்றில் அலையும் இலைபோல நடுங்க வேண்டி வரும்.

மரங்களின் இருண்ட பொந்துகளில் இருந்து யாரோ எட்டிப் பார்ப்பதுபோல் தோன்றும். காற்று பெருத்த ஓசையுடன் மரங்களிடையே வீசும்; உறுமும்; முழங்கும்; ஊளையிடும்; அழும்.

சட்டென ஒரு மரத்தின் இலைகளைப் பொலபொலவெனக் கீழே உதிர்க்கும். பறவைகள் அலறிக் கொண்டு பறக்கும். அவை கூட்டம் கூட்டமாக வானத்தையே மறைத்துக் கருப்பாக்கிவிடும்.

அந்த வேளையில் பயம் பிடித்துக் கொள்ளும். யாரோ அலறுவதுபோல் குரல் கேட்கும். "ஓடு, ஓடு குழந்தாய், நில்லாதே ஓடு, தாமதிக்காதே ஓடு" என்று யாரோ காதில் கிசுகிசுப்பதுபோல் தோன்றும். ஓடு ஓடென்று ஓடிக் கொண்டே இருக்க வேண்டும். பயம் பிடித்துத் தள்ளும்; மூச்சுத் திணறும்.

மேலும் கீழும் மூச்சு வாங்க வீட்டை அடைந்தால், வீடு உற்சாகமாக மகிழ்ச்சியுடன் இருக்கும். என்னைப் போன்ற சிறார்களுக்கு வேலை கொடுத்து விடுவார்கள். கடலை உடைப்பது, பருப்புகள் எடுப்பது, கசகசாச் செடியின் விதைகளை உதிர்ப்பது எனப் பல வேலைகள். நாங்கள் உற்சாகமாகக் கணப்படியின் கதகதப்பில் அமர்ந்து கொள்வோம். கணப்பில் விறகு சடசடவென எரியும். எங்கள் சிறுவேலைகளை அம்மா மகிழ்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருப்பாள்.

எங்கள் பாட்டி உல்யானா எங்களுக்குக் கதை சொல்வாள். எல்லாமே பயங்கரக் கதைகள்! அச்சமூட்டும் தேவதைக் கதைகள்! சூனியக்காரிகள், பிணங்களின் கதைகள்! நாங்களெல்லாம் அச்சத்தால் ஒன்றாக ஒட்டிக் கொண்டுதான் கதை கேட்போம். ஆனால், எங்கள் உதடுகளில் புன் சிரிப்புத்தான் இருக்கும். திடீரென்று நாங்கள் மௌனமாகிவிடுவோம்.

ஆ! எங்கோ ஓர் ஓசை கேட்கிறது! யாரோ கதவை இடிக்கிறார்கள். அது ஒன்றுமில்லை. ஃப்ரலோவ்னா பாட்டியின் நூற்புச் சக்கரம் விழுந்த ஓசைதான் என்பது பின்பு தெரியவரும். சட்டென எல்லாரும் சிரித்துவிடுவோம்!

சில சமயங்களில் பயங்கரக் கதை கேட்ட பிறகு எங்களுக்குத் தூக்கம் வராது. தூங்கினால் பேய்க் கனவுகள் வரும். விழிப்பு வந்தால், எழுந்து உட்காராமல், போர்வைக்குள்ளேயே நடுங்கிக் கொண்டிருப்போம். காலையில் கண் விழித்தால், பளிச்சென்று டெய்சி மலரைப் போல் ஆகிவிடுவோம். வெளியே சாளரத்தின் வழியாகப் பார்த்தால் தோட்டம் முழுவதுமே உறை

பனியால் மூடப்பட்டிருக்கும். மென்மையான, இலையுதிர்காலத்தின் கடைசியான நாள்கள், இலையுதிர்ந்த கிளைகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கும்.

ஏரியின் மேற்பகுதியில் காகிதம் போன்ற லேசான பனித்திரை காணப்படும். வெள்ளை நீராவி ஏரியின்மீது மேலே எழுந்து கொண்டிருக்கும். பறவைகள் உற்சாகமாகப் பாடும். வெயிலின் கதிர்கள் ஏரிப் பனியின் மீது விழுந்து, அதைப் பிளக்கும். ஏரி, ஒரு பெரிய, முகம் பார்க்கும் கண்ணாடிபோல் படுத்துக் கிடக்கும். அது மிக லேசானதாக, ஒளிமிக்கதாக, உற்சாகம் கொள்ளும்படி இருக்கும்.

வீட்டின் கணப்பில் விறகு சடசடக்கும். நாங்கள் சோமவார் அருகில் அமர்ந்து கொள்வோம். எங்கள் கறுப்பு நாய் போல்கன், இரவில் வெளியில் இருக்க நேர்ந்தால், உறைந்து போய்க்கிடந்து, காலைச் சூட்டில் எழுந்து கண்ணாடிச் சாளரம் வழியாக எங்களைப் பார்த்து வாலாட்டும்.

யாரோ ஒரு உழவர் அந்த வழியாக வண்டியில் கடந்து போவது தெரியும். எல்லாரும் அவரவர் பணிகளில் உற்சாகமாக இருப்பார்கள். ஆ! எப்பேர்ப்பட்ட பொற்காலம் என் குழந்தைப் பருவம்!

எனது பழம் நினைவுகளால், நான் இப்போது ஒரு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழுகிறேன். எல்லாம் என் மனத்திரையில் தெளிவாகவும், துல்லியமாகவும், பளிச்செனவும் தோன்றுகின்றன. நிகழ்காலமோ மந்தமாய், இருண்டு போய்க் கிடக்கிறது!.... இது எங்கேபோய் எப்படி முடியப் போகிறது? உங்களுக்குத் தெரியுமா, எனக்குள் ஓர் உறுதியான எண்ணம் தோன்றிக் கொண்டிருக்கிறது. நான் விரைவில் செத்துப்போவேன் என்ற எண்ணம்தான் அது! எனக்கு உடல்நிலை மிகவும் மோசம். அடிக்கடி சாவு நினைப்புத்தான் வருகிறது. ஆனால், நான் இப்படிச் சாகக்கூடாது- இந்தப் பூமியில் இங்கே படுத்துக் கிடந்து.

நான் இளவேனிற் பருவத்தைப் போல நலம் பெற வேண்டும், என முயல்கிறேன்.

ஃபெடோரா எங்கோ வெளியில் போய் விட்டாள். என்னால் நலம் பெற முடியவில்லை. நாள் முழுதும் தன்னந்தனியே நான் நாளைக் கழித்துக் கொண்டிருக்கிறேன். இந்தத் தனிமையில், என்னறையில் வேறு யாரோ இருந்து என்னைப் பார்த்துக் கொண்டிருப்பதுபோலவும் தோன்றுகிறது. யாரோ பேசுவது போலவும், தோன்றுகிறது. என் மயத்திலிருந்து சட்டென உணர்வு பெறும்போது, எனக்குப் பயமாக இருக்கிறது.

அதனால்தான் நான் உங்களுக்கு நீண்ட கடிதங்கள் எழுதுகிறேன். எழுதும்போது அந்த உணர்வு இருப்பதில்லை. ஆனால், இப்போது என்னிடம் காகிதங்களும் இல்லை, காலமும் இல்லை. அதனால் இத்துடன் முடித்துக் கொள்கிறேன். இருந்த காசுக்கு சில உடுப்புகளையும் ஒரு தொப்பியையும் வாங்கிக் கொண்டேன். மிச்சம் இருப்பது ஒரே ஒரு வெள்ளி ரூபிள் நாணயம்தான்.

வீட்டுக்கார அம்மாளுக்கு இரண்டு ரூபிள் கொடுத்து விட்டதறிந்து மகிழ்ச்சியடைகிறேன். கொஞ்ச காலத்திற்கு அவள் அமைதியாக இருந்துவிடுவாள்.

உங்கள் ஆடை விஷயமாகக் கொஞ்சம் அக்கறை எடுத்துக் கொள்ளுங்கள். முடிக்கிறேன். மிகவும் களைப்பாக இருக்கிறது. நான் ஏன் இப்படி பலவீனம் அடைந்தேன் என்பது எனக்கு விளங்கவில்லை. ஏதாவது சிறிதாகச் செய்தாலும்கூடக் களைத்துப் போகிறேன். ஏதாவது வேலை கிடைத்துவிட்டால், எப்படிச் செய்வது என்று தெரியவில்லை. இந்த நினைப்பே என்னைக் கொல்கிறது.

வா. அலெ.

செப்டம்பர் 5

வாரென்கா என் பொம்முக்குட்டியே!

என் சின்னத் தேவதையே, இண்ணக்கி என்னவெல்லாமோ நடந்திருச்சு. முதல்ல, நாள்முழுதும் கடுமையான தலவலி. அதைச் சரிக்கட்டுவதற்காக ஃபான்டேங்கா வழியா ஒரு நட நடந்தேன். சாயந்திர நேரம். ஈரமா இருட்டா இருந்திச்சு. இப்பல்லாம் ஆறுமணிக்கு முன்னாடியே இப்பிடி ஆயிடுது.

மழ இல்லெ. ஆனா கனமான மூடுபனி, மழ பெய்யற மாதிரியே இருந்தது. புயல் மேகங்க மேல தெரண்டு இருண்டு போயிட்டிருந்திச்சு. தெருவில நெறய ஜனங்க போயிட்டிருந்தாங்க. அவங்க மூஞ்சியெல்லாம் அசிங்கமா சோர்ந்து போயி இருந்துச்சு. குடிகாரங்களும் எதிர்ல வந்தாங்க.

ஒரு சப்பமூக்கு பின்லாந்துக்காரி தலைல எதுவும் மறைக்காமல் போயிட்டிருந்தா. கால்ல பூட்ஸ் போட்டிருந்தா. கூலித் தொழிலாளிங்க, வாடகைக் காரோட்டிக, சின்னப் பசங்க, ஒருவேல பழகற பூட்டுசாவி ரிப்பேர்க்காரன் - இவன் கோடு போட்ட சட்ட போட்டிருந்தான், கையில ஒரு பெரிய பூட்டு, ஒடுக்கு விழுந்த கன்னம், கையெல்லாம் அழுக்கு எண்ணெ- ஒரு முன்னாள் ராணுவக்காரன் ஏழடி ஒசரத்தில- இப்படிப்பட்ட ஆளுக அவசர அவசரமாப் போயிட்டிருந்தாங்க.

இந்த மாதிரி குளிர்ல வெளில யாரும் வெளில வரமாட்டாங்க, இந்த மாதிரி ஆளுகளெத் தவிர. கப்பல்ல ஏறறகூட்டம் மாதிரி நெரிசலாத்தான் இருந்திச்சு. இந்த மாதிரி கூட்டம் எங்க பொருந்தும்ணே தெரியில.

பாலத்துமேல ஒரு பொண்ணு ஒக்காந்திட்டிருந்தா. அழுக்குப் புடிச்ச நனஞ்சு போன பொண்ணு. கையில ஒரு நனஞ்சுபோன ரொட்டித் துண்டு, ஒரு ஆப்பிள். பாக்க ரொம்பக் கஷ்டமாத்தான் இருந்திச்சு. தரையெல்லாம் ஈரமான சலவக் கல்லுக. சுத்திலும் அதான். ஒசரமான இருண்ட கட்டடங்க. ரொம்பச் சோகமான இருண்ட சாயந்தர நேரம்.

நான் கொரொகோவியா சாலையில திரும்பறபோது நல்லா இருட்டிருச்சு. தெருவுல இருக்கற காஸ் விளக்குகளெ பத்தவெக்க ஆரம்பிச்சிட்டாங்க. அந்தப் பக்கம் வந்து ரொம்ப நாளாயிடுச்சு- என்ன இரைச்சல்! பெரிய பெரிய கடைக, வெளக்கு வெளிச்சம், கண்ணாடித் தடுப்புக்குள்ள விதவிதமான பூவுக, அப்பறம் பலவிதமான தொப்பிக, ரிப்பனுக. அழகா அடுக்கி அடுக்கி வெச்சிருந்தாங்க. அதையெல்லாம் வசதியானவங்க வாங்கிட்டுப் போயி, தம்பொஞ்சாதிகளுக்குக் குடுப்பாங்க. பணக்காரத் தெருவு.

அந்த வீதியில ஜெர்மனி ரொட்டிக்காரங்க இருப்பாங்க போல. நல்ல வசதியா வியாபாரம் செஞ்சு பொழச்சிட்டிருந்தாங்க. எத்தன வண்டிக அப்பிடியும் இப்பிடியும் போயிட்டிருச்சு! வீதி தாங்குமா என்ன!

பணக்காரக் கோச்சு வண்டிகளோட ஜன்னல்கள்லெ கண்ணாடி பதிச்சிருந்தாங்க. உள்ள வெல்வெட் சிலுக்கு மெத்தைக. காவலுக்கு கத்தி பிடிச்ச காவல்காரங்க. நான் பாத்தேன். எல்லாக் கோச்சு வண்டிகள்லயும் பொம்பளகதான் ஒக்காந்திட்டிருந்தாங்க. ஆடம்பர உடையணிஞ்ச பிரபு வம்ச சீமாட்டிகளும், இளவரசிகளும்தான் உள்ள இருப்பாங்க போல. அந்த நேரம் அப்பிடி அவங்கல்லாம் பால் டான்சுக்கு போவாங்க போல. அவசர அவசரமாப் போயிட்டிருந்தாங்க.

அவ்வளவு பக்கத்தில இருந்து சீமாட்டிகளயும் இளவரசிகளையும் பாக்கறது பெரிய விஷயம் இல்லையா? நான் அதுவரைக்கும் பாத்ததில்லெ. அப்ப நான் உன்னெ நெனச்சி கிட்டேன். ஆ! என் அன்பான பொம்முக்குட்டியே, உன்னெ நெனச்சா இப்ப எனக்கு நெஞ்சு வலிக்கிது. நீ ஏன் இப்படி துரதிர்ஷ்டம் பிடிச்சவளா இருக்கே? வரென்கா, என் சின்னத் தேவதையே, அவங்களவிட நீ மோசமா இருக்கறதுக்கு என்ன காரணம்?

நீ நல்லவ. அழகானவ. படிச்சவ. அப்பிடியிருக்கும்போது விதி ஏன் உன்னெக் கீழ தள்ளிடுச்சு? ஒரு நல்லஆளுக்கு ஏன் இப்பிடியெல்லாம் கஷ்டங்க ஏற்படணும்? சில பேருக்கு ஏன் அதிர்ஷ்டங்க தானாப் போய்ச் சேருது?

எனக்குத் தெரியும். நல்லாவே தெரியும். இப்பிடியெல்லாம் யோசிக்கக்கூடாதின்னு தெரியும்! ஆனா, இதெல்லாமே சுதந்திரச் சிந்தனை! தாய் வயித்தில இருக்கும்போதே, ஒரு கொழந்தெ வசதியாப் பொறக்கனும், இன்னொரு கொழந்தெ அனாதையா அலையினும்னு விதி ஏன் எழுதி வெக்கிது? 'முட்டாள் ஐவானு'க்குத்தான் எல்லா அதிர்ஷ்டங்களும் போய்ச் சேருமா, சாப்பாடு, குடி, சந்தோசம், அரண்மனை எல்லாம்?

அது ஒரு பாவமில்லயா? அப்படியெல்லாம் நெனக்கிறது கூடப் பாவந்தானே? ஆனா, பாவம் மெல்ல நம் மனசுக்குள்ளே மெல்லப் பூந்திடும். விரும்புனாலும் விரும்பாவிட்டாலும். என் சின்னப் பூவே நீயும் அந்தமாதிரி கோச்சு வண்டியிலெ போகனும். தளபதிகள் எல்லாம் உன்னோட ஒரு பார்வைக்கு ஏங்கனும். நான் ஆசப்படற மாதிரி இல்லெ. நீ உன்னோட இப்பத்த ஆடையில போகக்கூடாது. பட்டும் தங்கமும் உன்னோட உடல்ல ஒளி வீசனும். இப்ப மாதிரி நோய் புடிச்சு, மெலிஞ்சு போயி இருக்கக்கூடாது. அப்படியே பள பளண்ணு ரோஜா நெறத்தில, நல்ல தடிப்பா இருக்கனும்! அப்ப நான் சந்தோசப்படுவேன், வெளிச்சமா இருக்கற உன் ஜன்னல்ல உன்னப் பாக்கும்போது தெருவிலிருந்து பாக்கும்போது ஒரு நிழலயாவது பாப்பேன். நீ அங்கே சந்தோசமா, நல்ல இருப்பேங்கற நெனப்பே என் உற்சாகத்துப் போதும் என் அழகான சின்னப் பறவையே.

இப்ப நிலம என்ன? கொடூரமான மனுசங்க உன் வாழ்க்கயெ நாசம் பண்ணிட்டாங்க. சில ஒழுக்கங்கெட்ட, அயோக்கியனுக உனக்கு ரொம்பக் கெடுதல் பண்ணிட்டாங்க.

ஆடம்பர கோட் போட்ட ஒரு பெரிய மனுசன், தன்னோட தங்கக் கண்கண்ணாடி வழியா உன்னெ அசிங்கமா பாக்கறான். அவன் சொல்றதெயெல்லாம் நீ அமைதியா கேக்க வேண்டி இருக்கு! அசிங்கமாத்தான் பேசறான். போதும் என் அன்பே! இல்லயா? ஏன் இப்படியெல்லாம் நடக்குது?

காரணம் நீ ஒரு அனாதை. அதான். உனக்கு எந்தப் பாதுகாப்பும் இல்லெ. உன்னெ ஆதரிக்கிற நல்ல நண்பர்களும்

உனக்குக் கெடயாது. என்ன ஜன்மங்க இவங்க! ஒரு அனாதைப் பெண்ணெ இப்படியா அவமானப் படுத்துவாங்க? அயோக்கியப் பசங்க! இவங்க மனுசஜென்மங்களே அல்ல. அவங்க அப்படித்தான்.

இந்த கொரொக்கேவயா தெருவுல பலபேரப் பாத்தேன். சும்மா ஊர் சுத்திட்டிருக்காங்க. ஏதாச்சும் காசு கீழ கெடக்குமாண்ணு தேடிட்டு இருக்கறவங்க. கெடச்சா எதாச்சும் வாங்கித் திம்பாங்க. ஆனா, பிச்ச கேக்கமாட்டாங்க. கையில ஒரு இசைக்கருவி இருக்கும். மாவறைக்கற மாதிரி சுத்துனா இசை வரும். அதவெச்சுக்கிட்டு அறைச்சு அறைச்சு காசு கேப்பாங்க. அதான் அவங்க உழைப்பு.

நானும் அப்படிப்பட்டவனாத்தான் ஆயிட்டேன். ஆனா நான் மரியாதக் கொறவா நடந்துக்கறது இல்லெ. பேசுவேன் அவ்வளவுதான். அந்த மாவறைக்கிற சங்கீதக் கருவி மாதிரி நான் ஏன் சும்மா பேசறேண்ணா, வறுமைதான் காரணம் என் அன்பே. இப்ப அது ரெண்டு மடங்காயிடுச்சு.

இண்ணிக்கி நான் அவனப் பாக்கலெ - அதோ அங்க ஒரு வாடகைக் காரோட்டி, ஒரு இளம்பொண்ணு எல்லாம் அழுக்குப் புடிச்சவங்க. சங்கீதக்காரன் ஏதோ ஒரு ஜன்னலுக்கு வெளிய நிண்ணு சுத்த ஆரம்பிச்சிட்டான்.

ஒரு சின்னப் பையன், பத்து வயசு இருக்கும், நல்லா இருக்க வேண்டிய பையன் நோயாளியா, ஒரு கிழிஞ்ச சட்ட மட்டும் போட்டுக்கிட்டிருந்தான். கால்ல செருப்புக்கூட இல்ல. அப்பிடியே வாயப் பொளந்துகிட்டு சங்கீதத்தெக் கேட்டுகிட்டு நிக்கிறான். என்ன பரிதாபமான குழந்தைப் பருவம். இசைக் கருவிப் பெட்டிக்கு மேலே ஒரு ஜெர்மன் பொம்மெ. அது கையுங்காலும் ஆட்றதெ அவன் அதிசயமாப் பாத்துகிட்டு நிக்கிறான். கையும், காலுங் குளிர்ல விறைச்சுப் போறதக்கூடக் கவனிக்காமெ, சட்டையோட நுனியை கடிச்சு மெண்ணுகிட்டே பொம்மலாட்டம் பாத்தபடி நிக்கிறான். அவங்கையில ஒரு சின்னக் கடுதாசி இருந்த மாதிரி தெரிஞ்சது.

அப்ப ஒரு பெரிய மனுசன் அந்த சங்கீதக்காரனுக்கு ஒரு சின்ன நாணயத்தக் தூக்கிப்போட்டான். அந்தக் காசு ஒரு திட்டுமேல உளுந்திச்சு. அங்க ஒரு பிரஞ்சுக்காரன் டான்ஸ் ஆடிக்காட்டிட்டிருந்தான்.

அப்ப அந்தப் பையன் எங்கிட்ட ஓடிவந்து, "ஐயா, ஒரு குறிப்பு" - அப்பிடீண்ணு அந்தக் காயிதத்தக் காட்னான். அதில் ஒரு வேண்டுகோள்: "ஐயா, இந்தப் பையனோட அம்மா நானு சாகக் கெடக்கறேன். மூணு கொழந்தைக சாகக் கெடக்குது, முழுப்பட்டினி. உதவுங்கய்யா. உங்கள மறு உலகத்திலும் மறக்க மாட்டேன்."

சரி. புரிஞ்சு போச்சு. கொடுக்க எங்கிட்ட என்ன இருக்குது? தினசரி பாக்கற காட்சிகதான். என்ன செய்ய முடியும்? எதுவும் என்னால கொடுக்க முடியாமப் போனா அது எம்மனசெ எப்பிடி வேதனைப்படுத்தும்! பையன் பொய் சொல்லலெ. அது நல்லாவே தெரியிது. ஒரு விஷயம் உறுத்தலாத் தோணுச்சு. இந்த அம்மாளுக ஏன் புள்ளங்களெ கவனிக்காமெ விட்டுட்டிர்றாங்க? ஏன் இப்படி குறிப்பெழுதி அர நிர்வாணமாக் கொழந்தைகளெ வெளில அனுப்பறாங்க. அவ முட்டாளோ? பலவீனம் காரணமோ? திக்கற்றவளோ? அல்லது சம்மணம் போட்டு ஒக்காந்துகிட்டு புள்ளைங்களெ வெளில வெரட்டறாளோ? இல்லெ நெசமாலுமே நோயில படுத்துத்தான் கெடக்கறாளோ?

அவ உதவிக்குப் போக வேண்டிய இடம் வேறெ. அவ ஒருவேள ஒரு போக்கிரிப் பெண்ணா இருக்கலாம். தன்னோட பசங்களுக்கு வியாதி வந்தாலும் பரவாயில்லேண்ணு பிச்சை எடுக்க வீதிக்கு வெரட்டலாம். கையில இருக்கற சீட்டில் என்ன எழுதியிருக்குங்கறது அந்தப் பையனுக்குத் தெரியுமா? அவன் தெருவுல அலஞ்சு அலஞ்சு மனசு இறுகிப் போவான்.

ஜனங்களுக்கோ அவசரம். அவங்க மனசு கல்லு. 'போடா அந்தப் பக்கம், தொந்தரவு பண்ணாதே, போ, போ!'ண்ணு வெறட்டறாங்க, அவங்காதில் விழுறது அந்த வாசகம் ஒண்ணுதான். அந்தப் பையன் பாவம் குளிர்ல நடுங்கறான். ஒரு

பறவக்குஞ்சு, கூட்டில இருந்து தவறிக் கீழ விழுந்து தவிக்கிற மாதிரி அவன் தத்தளிக்கிறான்.

இருமறான். அது அப்படியே அவனோட நெஞ்சுக் குழிக்குள்ள பாம்பு மாதிரி இறங்கி அது என்ன ஏதிண்ணு தெரியறதுக்குள்ளே சாவு பக்கத்துல வந்து நிக்கும். ஏதோ ஒரு நாத்தம் புடிச்ச மூலையில, கேப்பாரில்லாமே அனாதையா அவன் கெடந்து சாவான்! அவ்வளவுதான். அவனோட முழு வாழ்க்கையும் அவ்வளவுதான். முடிஞ்சுபோச்சு!

ஓ, வாரென்கா, எப்பேர்ப்பட்ட கொடுமெ. 'கடவுள் அருள்வார்' ங்கறது எவ்வளவு கொடுமையான வாசகம். பாக்கறவங்க கவலப் படாமெ போயிட்டே இருப்பாங்க. பிச்சை எடுத்து எடுத்து அதே ஒரு தொழிலா மாறுது. அவனோட குறிப்ப வாங்கி நான் பாக்கறப்ப ஓராளு அந்த வேலிப் பக்கத்தில நிண்ணுகிட்டு, "ஒரு காசு குடுங்க சாமீ!"ண்ணு கேக்கறான். சட்டுண்ணு அது காதுல விழுந்ததும் என்னோட ஒடம்பு கிடுகிடுண்ணு நடுங்கிப் போச்சு. நான் அவனுக்குக் காசு குடுக்கலெ. எங்கிட்டதான் காசே இல்லயே. வசதியானவங்க அதப்பத்திக் கவலையே படலெ. அத ஒரு தொந்தரவாத்தான் நெனச்சாங்க. "சே, என்ன தொந்தரவு! அதிர்ஷ்டமில்லாத பயலுக" அப்படீண்ணு சொல்லிட்டுப் போயிட்டே இருந்தாங்க.

வறுமைங்கறது நச்சரிப்பா? அவங்க வயித்துப்பசியில தூங்க முடியுமா? நச்சரிக்கத்தான் செய்வாங்க. வேற வழி?

உண்மை சொல்லப்போனா, இதெல்லாம் எதுக்கு இப்படி விவரிச்சு எழுதறேண்ணா, எம் மனசில இருக்கற பாரத்தெ எல்லாம் எறக்கி வெக்கத்தான். அப்பறம், நான் எழுதறதுகூட கொஞ்சம் கொஞ்சமா நல்லா ஆயிட்டு வருதில்லெ? உனக்குப் புடிச்சிருக்கும்ணு நம்பறேன். எல்லாம் உன்னாலதான். மொழிநடை கூட வளர்ச்சியடையிது.

என்னோட ஆத்மாவின் ஆழத்திலிருந்து வர்ற எண்ணங்கள் மேல எனக்கு அனுதாபம் உண்டு. ஆனா இந்த அனுதாபத்தினால எந்தவிதப் பயனும் இல்லேங்கறது எனக்கு நல்லாவே தெரியிது. ஆனா நீ உன்னெ கவனிச்சுக்கவே

மாட்டேங்கற. உனக்கே நீ அனியாயம் பண்ணிக்கறே. ஒரு காரணம் இல்லாமெ உன்னையே நீ அழிச்சிக்கறே. உன்னெ நீ அற்பமா நெனச்சுக்கிட்டே.

நான் எப்பிடி இருக்கேண்ணா, அந்த வெரட்டப்பட்ட பையன் மாதிரி வேட்டையாடப்பட்டு சீரழிஞ்சிட்டேண்ணுதான் சொல்லணும். இப்ப நான் உங்கிட்ட சில விஷயங்களெப் பேசியாகணும். கேட்டுக்க.

உருவகமா சொல்றேன். கேட்டுக்க. காலைல வேலைக்கிப் புறப்படறப்ப இந்த ஊர் காட்சியிலிருந்து கண்ணெ வெலக்க முடியலெ. ஊர் எப்பிடி காலைல கண் முழிக்கிது, எந்திரிக்கிது, புகை, சமையல் வாசனெ, வண்டிச் சத்தங்க எல்லாம் சேந்து நம்மெ சிறுத்துப் போக வெச்சிருது. மூக்கெ யாரோ ஒடச்சிட்ட மாதிரி பயந்து போயி ஒரு எலி மாதிரி ஓரமா ஓட வேண்டியிருக்கு.

அந்த பெரிய கட்டடத்துக்குள்ளெ நுழையரப்ப நம்ம தரத்தெ நெனச்சுப் பாத்தா, ஒரே குழப்பம்தான். பாரு, வாரென்கா, நான் உருவகமாத்தான் சொல்றேன். நேர்அர்த்தத்தில சொல்லலே.

ஒரு பொக பிடிச்ச மூலை. ஈரமான ஒரு நாய்க் கூண்டு. அதுதான் குடியிருப்பு. வேலக்காரன் தூங்கி வழிஞ்சு, முழிச்சிக் கிறான். அவன் கனவுல வர்றது நல்ல புது பூட்ஸ். முந்தின நாள்தான் அதில ஒரு ஓட்டை விழுந்தது. அப்பிடி கனவு காண்றது தெண்டம். கொழந்தைங்க வேற அழுதுகிட்டே இருக்கு. பசியோட மனைவி. ஒரு செருப்பு தைக்கிறவன் நெலமெ அது. ஒரு ஆள் நெலமெ மட்டும் இல்லெ. ரொம்பப்பேர் அப்பிடித்தான் என் அன்பே.

செரி. எல்லாமெ இப்பிடித்தான் இருக்கு. இதையெல்லாம் எழுதறதில ஒரு பிரயோஜனமும் இல்லெ. என்னோட பார்வையில இந்தக் கட்டடம் இருக்கே, இதில மேல ஒரு அடுக்கு. கீழ ஒரு அடுக்கு. மேல் அடுக்கில இருக்கறவன் வீடு ஜொலிக்கிது. அவனோட பூட்சு புதுசு. புது டிசைன். பளபளப்பா இருக்கு. ஆனா அது பூட்சுதான். பூட்சு பூட்சுதான். ஒரு வகையில பாத்தா நாம எல்லாருமே கொஞ்சம் கொஞ்சம் காலணி தைக்கிறவங்கதான்.

இது சரிதான். ஆனா, பணக்காரன் காதில இத சொல்றதுக்குத் தான் ஆளில்லை. என்ன சொல்லணும்?

"பாருங்க நீங்க இப்படி நினைக்கிறது சரியில்லெ. உங்களப் பத்தியே நெனச்சிட்டிருந்தா எப்படி? உங்களுக்காகவே நீங்க ஒரு செருப்பு தைக்கிறவர் அல்ல. உங்கள் குழந்தைங்க ஆரோக்கியமாத்தான் இருக்கறாங்க.உங்க வாழ்க்கையில உங்க காலணிகளத் தவிர மேலான ஒரு பொருளப் பார்த்ததுண்டா?"

இதுதான் நான் சொல்ல வந்தது வாரென்கா. இது ஒரு சுதந்தரச் சிந்தனையாகக்கூட இருக்கலாம். சில சமயம் மனசில இப்படி வருது. அப்பிடியே நெருப்பா எரிஞ்சுகிட்டே வந்து வெளில விழுந்திருது.

எதோடயும் என்னெ ஒப்பிட முடியாததுக்கு இதுதான் காரணம். ஏன்னா, பயம்! சத்தம்; இடி இதெல்லாம் பயத்துக்குக் காரணம். சில சமயம் நான் உங்கிட்ட தப்பா, தவறா பேசறனோங் கற சந்தேகம் எனக்கிருக்கு. அவதூரா எழுதிடறனோ? காரணம் மனச்சலிப்பு அல்ல. வேற யாராவது எழுதினதெ அப்பிடியே காப்பி பண்ணி உன் முன்னால கொட்டிடறனோ? இல்லெ. அதையெல்லாம் நீ பெருசா எடுத்துக்க மாட்டேண்ணு எனக்குத் தெரியும்.

வீட்டுக்கு சோகமாத்தான் வந்து சேந்தேன். வந்து மேச முன்னால உக்காந்தேன். கெட்டில பத்த வெச்சேன். தேநீர் தயாரிச்சு குடிச்சேன். அப்பதான் கோர்ஸ்கோவப் பாத்தேன். எங்க குடியிருப்பில இருக்கற பாவப்பட்ட மனுசன். என்னப் பாக்க அவுருதான் வந்தாரு. இன்னிக்கு காலைலயே அவுரு உள்ளயும் வெளியிலயுமா அலஞ்சிட்டிருந்தாரு. என்னோட அறையெவிட அவுருது ரொம்ப மோசம். ரொம்ப ரொம்ப மோசம். ஒரு சம்சாரம், கொழந்தைங்க, தரித்திரம்.

நான் அவரா இருந்தா என்ன செய்வேனோ தெரியிலெ.வந்தாரு. தலகுனிஞ்சு வணங்கினாரு. ஒண்ணும் பேசலெ. அவர் கண்ணில ஒரு துளி கண்ணீர்! அவரெ ஆசுவாசப்படுத்தி எதிர்ல இருந்த ஒடஞ்ச நாக்காலில உக்கார வெச்சேன். தேநீர் குடுத்தேன். எடுத்துக்கலெ. அப்புறம் வற்புறுத்திக் குடுக்க வாங்கிட்டாரு. சக்கர போடலாம்ணா,

மறுத்திட்டாரு. அப்புறம் அதையும் வற்புறுத்திப் போட்டுக் குடுத்தேன். அப்புறம் குடிச்சாரு.

வறுமை ஒரு மனுசனெ எந்த நிலமைக்குக் கொண்டாந்திடுது பாரு, “சரி சொல்லுங்க என்ன விஷயம்?” னு கேட்டேன். கொஞ்சம் தயங்கின பிறகு, “பாருங்க அய்யா, என் நலம் நாடும் மகார் அலெக்சியேவிச் அவர்களே, கடவுள் பேரால கேக்கறேன், இந்த தந்தைக்கு உதவி செய்யுங்கள். எனக்கு வெக்கமாத்தான் இருக்கு. எல்லாரும் கர்வமா மொரட்டுத்தனமா நடந்துக்கறாங்க. உங்களத் தொந்தரவு பண்ண நான் விரும்பலெ. உங்களுக்கும் எத்தனையோ பிரச்சனைக இருக்கு. உங்களால மத்தவங்களுக்கு ஒதவ முடியாது. எனக்குக் கொஞ்சமா ஒரு கடன் வேணும். கேக்கத் தயக்கமாத்தான் இருக்கு. உங்க நல்ல மனசு எனக்குத் தெரியும். கருணையுள்ள மனுசர் நீங்க. தயவு செஞ்சு என்னோட சம்பந்தமில்லாத கண்ணியக் குறைவான நடத்தைக்கு மன்னிக்கனும். அதாவது, ரொம்பக் கேக்க வர்லே, அது என்னண்ணா, வந்து, கொழந்தைங்க பட்டினி கெடக்கறாங்க, மனைவியும்தான். ஒரு ஒரு பத்து கொப்பெக் காசு கெடச்சாப் போதும்”, ண்ணு தயங்கித் தயங்கிச் சொன்னாரு!

எனக்கு நெஞ்சு வலிச்சது. அப்படியே நான் ஆடிப்போயிட்டேன். எங்கிட்ட அப்ப இருவது கொப்பெக்தான் இருந்தது! ஆமா, எண்ணிதான் வெச்சிருந்தேன். நாளச் செலவுக்கு வேண்டியிருந்த காசு. அவசியமான செலவுக்கு.

“இல்லீங்க... என்னால முடியாதே.. ஏண்ணா” அப்பிடீண்ணு இழுத்தா, அவரு, “மகார் அலெக்சியேவிச் பெரியவரே, அய்யா, ஒரு பத்து காசு முடியாதுங்களா,”ண்ணு கேட்டப்ப என்னால பின்வாங்க முடியலெ, இருவது கொப்பெக்கையும் எடுத்து மேசமேல வெச்சு, “எடுத்துக்கோங்க”ண்ணு சொல்லிட்டேன்!

நல்ல காரியந்தானே என் அன்பானவளே, என்ன செய்யறது. அட, தரித்திரமே! கொஞ்சம் பேசி ஆசுவாசப் படுத்தி அனுப்பிச்சு வெச்சேன். “இந்த நிலைமையில எதுக்காக அஞ்சு வெள்ளி ரூபிள் வாடகைக்கு இருக்கீங்க?” ண்ணு கேட்டேன். “ஆறு மாசத்துக்கு முன்னாடி மூணு மாச வாடகையெ முன்னாடியே கொடுத்து வந்தேன். அப்பறம் வாடகை குடுக்க முடியாமப் போச்சு,”ங்கறாரு!

ஏதோ கோர்ட்ல வழக்கு நடக்குதாம். முடிஞ்சா பணம் கெடைக்கும்போல. ஆனா அவரோட வழக்கு அவருக்கு சாதகமா வர்றதுக்கு வாய்ப்பே இல்லெ. ஏதோ அரசாங்க ஒப்பந்தம் போட்ட வியாபாரி, அரசாங்கத்தெ மோசடி பண்ணதா கேசு. இவரயும் அதில மாட்ட வெச்சிட்டாங்க. இவரு குத்தம் செய்யலெ. ஏதோ ஒரு கவனக்குறைவுல எதோ நடந்திருக்கு. கேசு பல வருசமா நடக்குது. நிறைய கஷ்டங்களெ அனுபவிச்சிட்டாரு பாவம். "நான் தப்புப் பண்ணல, கொள்ளையடிக்கில"ண்ணு பொலம்புனாரு. ஆனா, இவருக்கு வேல போச்சு. இவரோ தன்னோட நிரபராதத் தன்மையெ நிரூபிக்க முடியலெ. இவரோட பேச்சை நீதிமன்றம் நம்பலெ. ரொம்பச் சிக்கல். நூறு வருசமானாலும் சிக்கு அவுக்க முடியாது!

அந்த வியாபாரி ஒவ்வொரு கொக்கியா போட்டு இவரெ வசமா மாட்ட வெச்சிட்டாரு. பரிதாபப் படறதத் தவிர நான் என்னதான் செய்ய முடியும். சிக்கலான வழக்கு. சாப்பாட்டுக்கு வழியில்லெ. இந்த நெலமையில கொழந்தெ வேற- அதுவும் செத்துப் போச்சு. இருந்தாலும் செலவு. செத்தாலும் செலவு.

சம்சாரம் நோயாளி ஆயிட்டா. இவருக்கும் எதோ பெரிய வியாதி. இன்னும் வழக்கு ஜெயிக்கும், காசு கெடைக்கும்ணு நம்பிகிட்டிருக்காரு! சீக்கிரம் கெடச்சிருமாம். அதில சந்தேகமே இல்லையாம்!

நான் இவருக்காக ரொம்ப, ரொம்ப வருத்தப்படறேன். ஆள் நொடிஞ்சு முடிஞ்சு போயிட்டார். சரி, முடிக்கிறேன்.

என் அன்பானவளே, இயேசு உன் பக்கம் இருப்பார். உடம்பைப் பாத்துக்க. என்னோட நோய்களுக்கெல்லாம் மருந்து உன்னப் பத்தின நினைப்புத்தான். ஆனா, உனக்காக நான் ரொம்ப வருத்தப்படறேன். உனக்காக வருத்தப்படறதுகூட சுலபமாத்தான் இருக்கு.

உன் உண்மையான நண்பன்

மகார் தேவுஷ்கின்.

செப்டம்பர் 9

எனதன்புக்குரிய வார்வரா அலெக்சியேவ்னா!

நான் உனக்குக் கடிதம் எழுதும்போது நான் எனக்குப் பக்கத்தில்தான் இருக்கேன்! சமீபத்தில் நடந்த சம்பவங்களால, நான் ரொம்ப பதட்டமடைஞ்சிருக்கேன். என்னோட தலெ சுத்துது. எம் பக்கத்தில இருக்கிற எல்லாமே சுத்துது. ஆ! என் அன்பே, உனக்கு நான் என்னத்தச் சொல்ல!

இதையெல்லாம் முன்கூட்டியே எதிர்பார்க்கலெ, இல்லெ? எதிர்பார்க்கலேங்கறதெ நான் நம்பலெ. எல்லாமே எதிர்பார்த்தது தான். எல்லாமே எம்மனசுக்கு முன்னாடியே தெரிஞ்சுதான் இருந்திச்சு. நேத்து ராத்திரி இந்த மாதிரியான கனவுகூட வந்தது.

நடந்தது இதுதான்! எந்தவிதமான மொழி அழகும் இல்லாமே சொல்லிடறேன்; ஆண்டவர் எம் மனசில எப்பிடிப் பதிஞ்சிருக்காரோ அப்பிடி. காலை வேலைக்குப் போனேன். உக்காந்து எழுதிகிட்டு இருந்தேன். நேத்துங்கூட அப்படித்தான்ங் கறதெ நீ புரிஞ்சுக்கணும்.

நேத்து, திமோபே இவானவிச் எங்கிட்ட வந்தாரு. ஒரு பத்தரத்தக் குடுத்து பிரதி எடுக்கச் சொன்னாரு. 'ரெம்ப அவசரம். ஆனா சுத்தமா இருக்கணும். துல்லியமா இருக்கணும். நாளைக்கு மேலதிகாரி கையெழுத்துக்குப் போகுது'ண்ணாரு.

என் சின்னத் தேவதையே, நேத்து, நான் சரியான மனநிலைல இல்லேங்கறது உனக்குத் தெரியும். எதையுமே கவனிக்கிற நிலைமையில நான் இல்லெ. ஒரே கவலை, குழப்பம். மனசு என்னவோ இருண்டு இறுகிப் போயிருந்தது. ஆனா, என்னேரமும் நீதான் எம் மனசில இருந்திகிட்டே இருந்தே. என் சின்னப் பூவே, அந்த மனநிலைல நான் நகலெடுக்க ஆரம்பிச்சேன்.

நல்லபடியா பளிச்சிண்ணு, தெளிவாத்தான் எழுதினேன். அப்பறம், அதெ எப்பிடிச் சொல்றதிண்ணு எனக்குத் தெரியலெ. எனக்குள்ள ஒரு சாத்தான் புகுந்துகிட்ட மாதிரி ஆயிடுச்சு. அல்லது ஏதோ ஒரு ரகசிய விதி என்னெப் புடிச்சிகிச்சோ,

தெரியில, நான் எப்பிடியே ஒரு வரியெ விட்டிட்டு எழுதிட்டேன் - ஒரு முழுவரி - அதனால, என்ன மாதிரி அர்த்தம் மாறிப்போகுமோ தெரியிலெ. கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

நேத்து நேரமாயிடுச்சா. அத அப்பிடியே வெச்சிருந்து இண்ணிக்கி, மேலதிகாரி கையெழுத்துக்குக் கொண்டு போனாங்க. நானும் வழக்கம்போல வேலைக்குப் போயிருந்தேன். சாதாரணமா யெமல்யான் பக்கத்து மேசையில, என்னோட எடத்தில உக்காந்திட்டிருந்தேன்.

சமீப காலத்தில நான் ரொம்ப அவமான உணர்வோட இருந்தேன்கறதெ உனக்குச் சொல்லணும். முன்னவிட ரெண்டு மடங்கு. எம் பார்வை யார்மேலயும் இல்லெ. யாரோ என்னெ சொரண்டின மாதிரி இருந்திச்சு. நான் மரத்துப் போயி உக்காந்திட்டிருந்தேன். இண்ணிக்கிக் காலைல அப்படித்தான் இருந்தேன்.

அமைதியா, கூன்போட்டபடி, ஒரு முள்ளெலி மாதிரி உக்காந்திட்டிருந்தனா அப்பதான் யெஃபிம் அகிமோவிச் கத்தினான். [அவன்போல ஒரு விவகாரம் பண்ற ஆள இந்த உலகம் இதுவரைக்கும் பார்த்தே இருக்காது!] "மகார் அலெக்சியேவிச்! ஏன் அப்பிடி அங்கே உக்காந்திட்டிருக்கீங்க?" அப்படீண்ணு சத்தமா கத்தீட்டு, கேலி பண்ற மாதிரி கொக்காணி காட்டிட்டு எல்லாரையும் பாத்தான். எல்லாரும் சிரிச்சாங்க. அந்தக் கேலிச் சிரிப்பு அப்பிடியே பரவிட்டது. நான் காதத் தீட்டிக்கிட்டுக் கேட்டேன். கண்ணெ இடுக்கிட்டுப் பாத்தேன். அசையாமெ உட்காந்திட்டுதான் இருந்தேன். என்னோட பழக்கம் அது.

சட்டுன்னு எதோ சத்தம். யார்யாரோ ஓடற மாதிரி நெசமாவா? இல்லெ என் காதுகதான் ஏமாத்துதா? யாரோ என்னெ சத்தமா கூப்பிடறாங்க. 'தேவுஸ்கின்'ங்கற சத்தம் கேக்குது. என்னோட நெஞ்சு அடிச்சுக்க ஆரம்பிச்சிடுச்சு. நெஞ்சுக்குள்ள இதயம் கிடுகிடுண்ணு ஆடுது. வாழ்க்கையில எண்ணைக்குமே பயப்படாத அளவுக்கு அரண்டு போயிட்டேன்.

நான் அப்பிடியே நாக்காலியோட ஒட்டிகிட்டேன். ஒண்ணுமே நடக்காத மாதிரி. அவங்க என்னக் கூப்பிடலேங்கற மாதிரி. ஆனா அவங்க விடலெ. மறுபடியும் மறுபடியும்

கத்தினாங்க. எங்காதுகிட்ட வந்து, "தேவுஸ்கின்! தேவுஸ்கின்! எங்க இருக்கீங்க தேவுஸ்கின்?"அப்படீண்ணு சொன்னாங்க. "அவுரு எங்க போயிட்டாரு?"ண்ணு எம்முன்னாலயே சொல்லி அவமானப்படுத்தினாங்க.

யெவ்ஸ்டார்ஃபி இவானவிச் எம்முன்னால வந்து நிண்ணு, "மகார் அலெக்சியேவிச்! உங்களெ தலைவர் சீக்கிரமா வரச் சொல்லிக் கூப்பிடறாரு. டாக்குமென்ட்ல ஏதோ பெரிய தப்புப் பண்ணீட்டதா பெரியவர் சொல்றாரு," அப்படீண்ணாரு!

இதமட்டுந்தான் சொன்னாரு போதாதா? நான் அப்பிடியே ஒறஞ்சு போயிட்டேன்! ஐஸ் கட்டியா ஆயிட்டேன். எல்லா உணர்ச்சிகளும் போயிடுச்சு. நான் உயிரோட இல்ல, செத்துப் போயிட்டமாதிரிதான் தோணுச்சு. என்னெ யாரோ தலைவர் அறைக்குத் தள்ளிட்டுப் போனாங்க. இந்த ரூமத் தாண்டி அந்த ரூம். அந்த ரூமத் தாண்டி இன்னொரு ரூம். அப்பிடியே ஒண்ணுக்குள்ள ஒண்ணா போயிட்டே இருந்திச்சு. கடைசில அவரோட ஆபீஸ் அறையில போயி நிண்ணேன். அவுரு அங்க நிண்ணுகிட்டு இருந்தாரு. நெறயப்பேரு அவரச் சுத்தி நிண்ணுக்கிட்டிருந்தாங்க. எனக்கு தலை வணங்கக்கூட தோணல. எல்லா மரியாதைகளையும் மறந்து போயிட்டேன்.

வாயடச்சிப் போயி நிண்ணேன். என்னோட உதடுக நடுங்கிச்சு.காலுக நிக்க முடியலெ. காரணமில்லாத பயம். மொதல்லெ எனக்கு வந்தது அவமான உணர்ச்சிதான். அந்த அறையோட வலப்பக்கத்து சுவர்லெ ஒரு பெரிய கண்ணாடி இருந்திச்சு. அதில நான் என்னெப் பாத்தேன். பைத்தியம் புடிச்ச மாதிரி ஆயிடுச்சு. நானே காணாமப் போயிட்ட மாதிரி தோணுச்சு. பூமியில நான் இல்லெ.

ஆனா, தலைவருக்கு என்னோட இருப்பு நிசமானதுதான். தேவுஸ்கின்ங்கற ஒரு ஆளு, தன்னோட அலுவலகத்தில வேல செய்யறான்ங்கறதெ அவரு காத்து வாக்கில கேள்விப்பட்டிருக் கலாம்! ஆனா, அவரு என்னெ இதுக்கு முந்தி நேருக்கு நேராப் பாத்ததே இல்லெ.

கோவமாப் பேச ஆரம்பிச்சாரு! "எப்பிடி அய்யா, இப்படி செஞ்சீங்க? என்னதான் நெனச்சிட்டிருக்கீங்க? எவ்வளவு

முக்கியமான டாக்குமெண்ட். சீக்கிரம் வேணுண்ணு சொன்னதுக்குக் கெடுத்திட்டீங்களே! எப்படி இப்படி செய்யலாம்",ணு சொல்லிட்டு, வெவ்ஸ்டாஃபி பக்கம் திரும்பினாரு. எனக்கு ஒண்ணுமே தெரில. அவரோட பேச்சு மட்டுமே கேட்டது. "கவனக்குறைவு அலட்சியம்! தொல்லை கொடுக்கிற ஆளு!" அப்படீண்ணாரு. என்னால மன்னிப்புக் கேக்க முடியில. ஓடிப் போயிடவும் முடியில. ஆனா, மன்னிப்புக் கேக்க நெனச்சேன்... அப்ப.. அப்பதான்... என் அன்பானவளே, அது நடந்திச்சு!

என் கையில பேனாவக் கூட பலமாப் புடிச்சிக்க முடியில. அவமானத்தில கை நடுக்கம். எம் பொத்தான் - நாசமாப் போன பொத்தான் - எங்கோட்ல நூல்ல தொங்கிட்டிருந்திச்சா, அது அறுந்து போயி கீழ விழுந்திடுச்சு. விழுந்திச்சா, நான் கால ஒதறிட்டம் போல, அது எகிறிப் போயி, நேரா, வட்டமா நிமிந்து, உருண்டு தலைவர் கால் கிட்டப் போயி நிண்ணிடுச்சு.

இதெல்லாமெ ஒரு பிரபஞ்ச மவுனத்துக்கு நடுவுல நடந்த சம்பவம்! அவ்வளவுதான்! போச்சு! எல்லாமே போச்சு! நான் மன்னிப்புக் கேக்க நெனச்சிருந்த எல்லாமே போச்சு! பயங்கரமான நிலைமெ! என்ன செய்ய? அப்பதான் மரியாதைக்குரிய தலைவர் என்னெ மேலும் கீழும் பாத்தார். என்னோட உருவத்தையும், உடுப்புகளையும் உத்துப் பாத்தார். கண்ணாடியில என்னப் பாத்தது ஞாபகத்துக்கு வந்தது!

சட்டுண்ணு குனிஞ்சு அந்தப் பொத்தானெ எடுக்கப் போனேன்! அது சனியன் மறுபடியும் நழுவி உருண்டு போச்சு. புடிக்க முடியலெ. அவருக்கும் ஒரு சங்கடம். நான் மறுபடியும் ஒரு முயற்சி பண்ணினேன். முடியலெ. எல்லாமே போச்சு. நான். தொலஞ்சேன்! எங்கிட்ட இருந்த கடைசித் துளி சக்தியும் வடிஞ்சு போயிட்டது. அப்ப, தெரிசா ஃபால்டோனி சொன்னது ஞாபகத்துக்கு வந்தது.

கடைசில அந்தப் பொத்தானெ புடிச்சே புடிச்சிட்டேன். நிமிர்ந்து நிண்ணு, கோட்டை சரியா இழுத்துவிட்டுகிட்டு ஒரு முட்டாள் மாதிரி நிண்ணேன். கவனமா அவர் பேச்சக் கேக்கற மாதிரி நிண்ணேன்! ஆனா, எங்கையில அந்தப் பொத்தான் நூல்ல

தொங்கிட்டுதான் இருந்திச்சு. அதென்னமோ, தானே போயி, கேட்டில பொருந்திக்கும்ங்கற மாதிரி! கொஞ்சம் இளிச்சுக் கிட்டும் இருந்தேன். ஆமா. இளிச்ச மாதிரிதான்.

பெரியவர் சட்டுன்னு வேற பக்கம் திரும்புன மாதிரி தெரிஞ்சிது. அப்பறம் எம்பக்கம் திரும்புனாரு. யெவ்ஸ்டாஃபி கிட்ட சொன்னாரு: "எப்படி இப்படி? இந்த ஆளப் பாருங்க! எப்படி? என்ன இவரோட நிலமெ?....." அப்படீண்ணாரு.

ஆ! என் அன்பானவளே, எப்பிடி அவரு இப்படிப் பேசினாருண்ணே தெரியலெ. அப்ப யெவ்ஸ்டாஃபி, "அய்யா, இவர நாங்க கவனிக்கலெ. சரியாத்தான் இருக்காரு. ஊதியமெல்லாம் விதிமுறைப்படிதான் வாங்கிக்கிறாரு,"ண்ணு சொல்ல, "அதெல்லாம் சரியில்ல. விதிமுறையெத் தளர்த்தணும். கொஞ்சம் முன்பணம் கொடுக்கணும்" அப்படீண்ணாரு தலைவர்! "நல்ல ஒழுக்கமாத்தான் வேல செஞ்சு வர்றாரு. இவரெ ஏன் கவனிக்கலெ?"ங்கற மாதிரி சொல்லிட்டு, "சரி. இத மறுபடியும் நகல் எடுத்துக் குடுங்க. வாங்க, தேவுஸ்கின்! இத எடுத்திட்டுப் போயி தவறில்லாமெ நகலெடுத்துக் குடுங்க",ண்ணாரு! உடனே பலருக்கும் பலவிதமான உத்தரவுகள் போட்டாரு. அப்பறம், அவர் தன்னோட பணப் பையை எடுத்து நூறு ரூபிள் நோட்டை உருவி "செலவு பண்ணிக்கிங்க",ண்ணு சொல்லி அதெ எங்கையில வெச்சு அழுத்தினாரு!

எனக்கு என்ன ஆச்சிண்ணே தெரியில. அவரு கையப் புடிச்சுக் குலுக்க முயற்சி பண்ணினேன். அவர் மூஞ்சி அப்படியே செவந்து போச்சு. நான் கிடுகலங்கிட்டேன். உண்மையெ மாறாமச் சொல்றேன். என்னோட யோக்கிதயில்லாத கையப் புடிச்சு அவரு குலுக்கினாரு, என் அன்பே! தனக்கு சமமா நடத்தினாரு, கடைசியா, "சரி. போங்க! தப்பு எதுவும் பண்ணாமெ செஞ்சு குடுங்க. ரொம்ப விலை மதிப்புள்ள டாகுமென்ட் அது",ண்ணு சொல்லி அனுப்பிச்சாரு.

என் அன்பே, நான் உன்னயும் ஃபெடோராவயும் கேட்டுக்கறேன். எனக்குக் குழந்தைகள் இருந்தா அவங்களையும் கேட்டுக்குவேன், கடவுள்கிட்ட வேண்டிக்கிங்க, உங்க அப்பாக்களுக்காக அல்ல மேன்மை தங்கிய இந்தத் தலைவருக்காக!

இன்னொண்ணும் சொல்லிக்கிறேன். நீயும் நானும் பட்ட கஷ்டங்கள், நெருக்கடிகள், அவமானங்கள் எல்லாமே, இந்த நூறு ரூபிளுக்குச் சமமல்ல! என்னப்போல உதவாக்கரை குடிகாரன் கையப் புடிச்சிக் குலுக்கினாரே, அந்த சம்பவத்தாலே அந்தப் பெரிய மனுசர், என்னெ எனக்குத் திருப்பிக் கொடுத்தாரு. என் மானத்தையும், வாழ்வையும் அவர் உறுதிப்படுத்தி எனக்கு உற்சாகத்தையும், ஆனந்தத்தயும் குடுத்திருக்காரு. அவரோட சந்தோசத்துக்காவும், வளத்துக்காகவும் நான் ஆண்டவரெ வேண்டிக்கிறேன். அவரோட நல்ல மனசுக்காக அவர் கர்த்தரோட சிம்மாசனத்தெ நல்லபடியா நெருங்க முடியும்.

இப்ப நான் பயங்கர பதட்டத்திலயும், ஆத்மக் குழப்பத்திலயும்தான் அகப்பட்டிருக்கேன். என் நெஞ்சவிட்டு இருதயம் வெளில எட்டித்தாவிக் குதிச்சிடற மாதிரி. ரொம்ப தளர்ச்சியா பலவீனமாத் தோணுது.

சரி. இப்ப நான் உனக்கு நாப்பத்தஞ்சு ரூபிள் நோட்டுகளெ அனுப்பி வெக்கறேன். வீட்டுக்கார அம்மாளுக்கு இருவது. எனக்கு முப்பதஞ்சு. முப்பதஞ்சில உடுப்புகளுக்கு இருவது. பதினஞ்சு செலவுக்கு. இதெல்லாமே காலைல நடந்த நிகழ்ச்சியினாலதான். இந்த சம்பவம் என்னெ அடியோடு மாத்திடுச்சு.

கொஞ்சம் படுத்துக்கறேன், அமைதியா. இப்ப மனசு அமைதி ஆயிடுச்சு. ஆனா, ஆன்ம வலி, ஆழமா. அது நடுங்குது; கிடுகிடுண்ணு. உன்னெ வந்து பாக்கறேன். இப்ப இந்தச் சூழ்நிலைகளாலெ ஒரு மயக்கம்.

ஆண்டவர் எல்லாத்தயும் பாத்துகிட்டுத்தான் இருக்கார், இல்லயா என் அன்பே? என் விலைமதிக்க முடியாத இனியவள் நீதான்.

உன் தகுதிவாய்ந்த நண்பன்

மகார் தேவுஸ்கின்.

செப்டம்பர் 10

என்னருமை மகார் அலெக்சியேவிச் அவர்களே,

தங்கள் அதிர்ஷ்டம் பற்றி அறிந்து மிக மகிழ்ச்சி அடைவதோடு, தங்கள் மேலதிகாரியின் நற்பண்புக்காக நான் பாராட்டவும் விரும்புகிறேன். நண்பரே, தாங்கள் தற்போது கவலைகளிலிருந்து விடுபட்டு, சற்று மன ஆறுதல் பெறுவீர்கள் என்று நம்புகிறேன்.

இனிமேல் தாங்கள் நற்காரியங்கள் அல்லாதவற்றிற்குப் பணத்தை விரயம் ஆக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். முடிந்தவரை, அமைதியாகவும், நாகரிகமாகவும் வாழ முற்படவும். இன்று முதல் கொஞ்சமாவது சேமிப்பிற்காக ஒதுக்கி வைக்கவும். வேண்டாத நெருக்கடிகள், துரதிர்ஷ்டங்கள் முன்னறிவிப்பு இல்லாமல் எதிர்வரக் கூடும்.

அருள்கூர்ந்து எங்களைப் பற்றிக் கவலைப் பட வேண்டாம். ஃபெடேராவும், நானும் எப்படியும் சமாளித்துக் கொண்டு விடுவோம். எதற்காக இவ்வளவு பணத்தை அனுப்பி வைத்தீர்கள்? எங்களுக்கு இப்போது தேவையே இல்லை. எங்களிடம் இப்போது இருப்பதே எங்களுக்குப் போதுமானது.

நான் வசிப்பிடம் மாற்றிப் போகச் சிறிது பணம் தேவைதான். ஆனால், ஃபெடோராவுக்குப் பழைய பாக்கிப் பணம் ஏதோ ஒன்று நீண்ட நாளுக்குப் பிறகு வரப்போகிறது. ஆகவே, இருபது ரூபிள்கள் மட்டும் அவசரச் செலவுகளுக்கு வைத்துக் கொண்டு பாக்கியைத் திருப்பி அனுப்புகிறேன்.

பணத்தைப் பத்திரமாகக் கையாளுங்கள் மகார் அலெக்சியேவிச். சரி. முடிக்கிறேன். நீங்கள் பயங்கரமாகக் களைத்துப் போயிருப்பீர்கள். அமைதி பெறுங்கள். உற்சாகமாக இருங்கள். மீண்டும் விரிவாக எழுதுகிறேன். நான் தற்போது மிகவும் களைத்துப் போய்தான் படுத்துக் கிடக்கிறேன். படுக்கையை விட்டு எழவே முடியவில்லை. நேற்று முழுவதும் அப்படித்தான் கிடந்தேன். நீங்கள் என்னை வந்து பார்ப்பதாக வாக்களித்திருக்கிறீர்கள். தயவு செய்து வருகை தாருங்கள் மகார் அலெக்சியேவிச்.

வா. அலெ.

செப்டம்பர் 11

என்னோட இனியவளே, வார்வரா அலெக்சியேவ்னா,

தயவு செஞ்சி என்னவிட்டுப் போயிடாதேண்ணு உன்னக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். இப்ப எனக்கு எல்லாமே இருக்கு. நான் சந்தோசமாத்தான் இருக்கேன். என்னோட பொம்முக்குட்டியே, தயவு செஞ்சி அந்த ஃபெடோரா சொல்றத யெல்லாம் காது குடுத்துக் கேக்காதே. உனக்கு வேணுங்கறதெ எல்லாம் நான் செஞ்சு குடுக்கறேன்.

மேலதிகாரிக்காக மட்டுமில்லாமெ, நான் இனி நல்லபடியா நடந்துக்குவேன். நாம இனிமே சந்தோசமான விசயங்களெ கடிதங்கள்ல பகிர்ந்துக்குவோம். நம்ம எண்ணங் களுக்கு மதிப்புக் குடுப்போம். நம்ம சுக துக்கங்களெப் பகிர்ந்துக்குவோம். நாம சந்தோசமா, மனநிறைவா ஒண்ணா வாழ்வோம்!

நாம இலக்கியம் படிப்போம். என் சின்னத் தேவதையே, என்னோட விதி முழுசா மாறிடுச்சு. எல்லாமே நல்லதுக்கு மாறிடுச்சு. என்னோட வீட்டுக்கார அம்மா இப்பெல்லாம் ரொம்ப இணக்கமா இருக்காங்க. தெரிசா ரொம்ப புத்திசாலி ஆயிட்டா. ஃபால்டோனிகூட ரொம்ப நட்பா பழக ஆரம்பிச்சிட்டாரு. ரட்டாசியாயேவ் கிட்ட நானே போயி பேசினேன். அவுருக்கு ஒரே சந்தோசம். அவரப்பத்தி ஜனங்க மோசமாப் பேசினாலும், அவுரு ரொம்ப நல்லவரு. அவரப் பத்திப் பேசறதெல்லாம் சுத்தப் பொய்யி. வீண் பழி. அவுரு நம்மப் பத்தி எல்லாம் எதுவும் பேசல. அவரே சொன்னாரு. அவுரு புதுசா எழுதினதெ எனக்குப் படிச்சுக் காட்னாரு. என்னெ அவரு 'லவ்லேஸ்' அப்படீண்ணு சொன்னது கூட அவமானப்படுத்தற சொல் அல்லவாம். ஏதோ வேற ஒரு மொழியிலிருந்து எடுத்ததாம். அதுக்கு 'அறிவுக்கூர்மையான ஆளு' அப்படீண்ணு அர்த்தமாம். அத இலக்கியக் கண்ணோட்டத்தில பாக்கணுமாம். அப்படிப் பாத்தா 'எந்தப் பொருளையும் கவனமாப் பாத்துக்கற பையன்'னு அர்த்தமாம். பாத்தியா!

சும்மா வேடிக்கை பண்ணியிருக்காரு. என்னோட மடத்தனத்தினாலெ அதெத்தப்பா எடுத்துக்கிட்டேன். இப்ப நான் அதுக்காக மன்னிப்புக் கேட்டுக்கிட்டேன்.....

இண்ணிக்கிப் பாரு, வாரென்கா, பருவநிலை எவ்வளவு நல்லா இருக்கு! காலைல அப்படியே கொஞ்சம் மழைத்தூறல் கூட இருந்தது, பூவாளியில தண்ணி தூவுன மாதிரி! சரி விடு. காத்து சுத்தமாயிடுச்சு. புது பூட்ஸ் வாங்கறதுக்குப் போனேன். அருமையான பூட்சுகளெ வாங்கிட்டேன்! நெவ்ஸ்கி பகுதியில ஒரு நடை அப்பிடியே போனேன். அப்பறம், 'தேனீ' நாளிதழ்கூடப் படிச்சேன். சரி. முக்கியமான விசயத்தச் சொல்ல மறந்திட்டனே!

அது என்னண்ணா, இதுதான்:

இண்ணக்கிக் காலைல யெமல்யான் கிட்ட பேசிட்டிருந்தேன். ஆக்செண்டியும் அப்ப இருந்தாரு. ஆமா, வாரென்கா. எங்க தலைவரப் பத்தி விரிவா சொன்னாங்க. அவரு எனக்கு மட்டும் இல்லெ, எல்லாருக்கும் உதவி செய்யற கருணை வள்ளலாம். இது உலகத்துக்கே தெரியுமாம். எனக்கு அப்பிடியே கண்ணீர் வந்திருச்சு. எப்பேர்ப்பட்ட ஆளு அவரு! யாரே ஒரு அனாதப் பொண்ணக்கூட எடுத்து வளத்தி ஒரு பெரிய அரசாங்க உத்யோகஸ்தனுக்கு அவளெக் கட்டிக் குடுத்து, அவனெ தன்னோட மேற்பார்வையிலேயே பெரிய பதவியெல்லாம் வாங்கிக் குடுத்திருக்காறாம்.

அதே மாதிரி ஒரு விதவயோட பையனுக்கு நல்ல வேல வாங்கிக் கொடுத்துக் காப்பாத்தியிருக்காறாம். எவ்வளவோ உதாரணங்க சொன்னங்க. என்னோட ஆசை என்னண்ணா, அவரோட நல்ல நல்ல காரியங்களெ எழுதி எல்லாருக்கும் தெரியப்படுத்தணும். அப்பிடியே எல்லார்கிட்டயும் சொல்லிட்டு தான் வர்றேன். ஒரு விசயத்தக்கூட விடலெ.

என்னோட அவமானம் என்னோட சட்டைப் பைக்குள்ள தான் இருக்கு. அந்த மாதிரி ஒரு நல்ல காரியத்துக்கு முன்னாடி என்ன அவமானம் நிக்க முடியும்? என்ன கர்வம் நிக்க முடியும்? எல்லாப் புகழும் அவருக்கே ஆகட்டும்! வாழ்க!

கொஞ்சம் கூட வெக்கப்படாமெ நான் பெருமையோட அவரப்பத்தி எல்லார்கிட்டயும் புகழ்ந்து சொன்னேன். [ஆனா, வாரென்கா, உன்னப் பத்தி ஒரு வார்த்தகூட சொல்லலெ] எங்க ஊட்டுக்காரம்மா, ஃபால்டோனி ராட்டாசியேயவ் என்னோட பூட்ஸ், மார்க்வ், இவங்களப் பத்தி எல்லாமே சொன்னேன்.

எல்லாருமே ஒருத்தர ஒருத்தர் பாத்து லேசா சிரிச்சிக்கிட்டாங்க. என்னோட உருவத்தப் பாத்துதான் சிரிச்சிருக்கணும் - குறிப்பா என்னோட பூட்சுகளைப் பாத்து. ஆனா தப்பா நெனச்சு அல்ல. சின்ன வயசுக்காரங்க. அப்பறம் பணக்காரங்க. ஆனா, கேலி பண்ற நோக்கத்தில சிரிக்கலெ. தலைவரப் பத்திப் பேசறப்ப அப்படி கேலியா சிரிக்க முடியுமா? இல்ல, வாரென்கா?

நான் இன்னும், என்னோட பழைய சுவாதீன நிலைமைக்குத் திரும்பல, அன்பே. இந்த சம்பவங்க எல்லாமே என்னெக் கொளப்பி விட்டிருச்சு!

வாரென்கா, கணப்புக்கு உங்கிட்ட வெறகு இருக்கா? சளி பிடிக்காமெப் பாத்துக்க. அது திடீர்னு வந்து பிடிச்சிக்கும். என் அன்பானவளே, உன்னோட சிந்தனைகள் எல்லாம் என்னெக் கொல்லுது. நான் உனக்காக் கடவுள ரொம்ப ரொம்ப வேண்டிக்கிறேன். எவ்வளவு வேண்டிக்கிறேன் தெரியுமா!

உன் கால்களுக்கு உல்லன் காலுறைக இருக்கா? சூடு தர்ற மாதிரி ஆடைக இருக்கா? இனியவளே, உனக்கு எது தேவப்பட்டாலும் உடனே நேரா எங்கிட்ட வந்திரு. நான் கலங்கிடுவேனோன்னு நெனைக்கக்கூடாது. எல்லாக் கெட்ட காலமும் இப்ப முடிவுக்கு வந்திருச்சு. என்னப் பத்திக் கவலயே படாதே. இனி வரப்போற காலம் நிம்மதியா, சந்தோசமா இருக்கப் போகுது; பிரகாசமா இருக்கப் போகுது!

என்னண்ணா, அப்ப எங்கையில ஒருகாசு கூடக் கெடயாது. பசி குளிர்ல நடுங்குவேன். ஆனாலும் உற்சாகமாத் தான் இருந்தேன். அப்பிடி இருந்தது அந்தக் காலம்.

நெவ்ஸ்கி பக்கமா காலை நேரத்தில நடந்து போய்ப் பாத்தா, ஒரு உற்சாகமான அழகான முகத்தெ எதிர்ல பாக்கலாம்.

அதனால, அந்த நாள் முழுதும் உற்சாகமா இருக்க முடியும். அது ஒரு நல்ல காலம் வாரென்கா; குறிப்பா இதே பீட்டர்ஸ்பர்க் நகரத்தில.

நேத்து நான் கண்ணீர் விட்டு ஆண்டவர்கிட்ட பாவ மன்னிப்பு கேட்டுகிட்டேன். என்னோட பாவங்கள் என்னோட முணுமுணுப்பு, என்னோட சுதந்திரச் சிந்தனைகள், மொரட்டுத்தன மான சுவாபம், மண்ட கொதிச்சுப் போயி எதாச்சும் செய்யறது - எல்லாத்தையும் மன்னிக்கச் சொல்லி வேண்டிக்கிட்டேன்.

என்னோட பிரார்த்தனைல உனக்காகவும் வேண்டிக்கிட் டேன். என் சின்னத் தேவதையே, நீ மட்டும்தான் எனக்குப் பாதுகாப்பா இருந்தே, நீ மட்டும்தான் எனக்கு ஆறுதலா இருந்தே, நீ மட்டும்தான் எனக்கு அப்பப்ப அறிவுரை சொல்லி நல்வழிப்படுத் தினெ. என்னால எண்ணைக்கும் அதயெல்லாம் மறந்திட முடியாது அன்பே.

உன்னோட எல்லாக் குறிப்புகளையும் எடுத்து நான் இண்ணிக்கு முத்தம் கொடுத்தேன் என் பொம்முக் குட்டியே! சரிம்மா. முடிச்சிக்கிறேன். அன்பே எங்கேயோ பக்கத்திலதான் நல்ல துணி வெலக்கிக் கெடைக்கிறதா கேள்விப்பட்டேன். போயி விசாரிச்சுப் பாக்கறேன். சரி, விடை பெறுகிறேன் என் சின்னத் தேவதையே, வணக்கம்.

உன்னுடைய உண்மையான நன்றியறிதலுடைய

மகார் தேவுஷ்கின்.

செப்டம்பர் 15

அன்பு அய்யா, மகார் அலெக்சியேவிச்!

நான் இப்போது மிகுந்த பதற்றத்தில் இருக்கிறேன் அய்யா. என்ன நிகழ்ந்ததென்று கேளுங்கள். எனக்கு, முன்பே, ஏதோ அசம்பாவிதம் நடக்கப் போகிறதென்று ஓர் உள்ளுணர்வு தோன்றியது. என் மதிப்புமிக்க நண்பரே, நடந்ததைக் கேட்டு நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்.

திருவாளர் பைக்கோவ் பீட்டர்ஸ்பர்க் நகருக்கு வந்துவிட்டார். ஃபெடோரா அவரைச் சந்திக்க நேர்ந்திருக்கிறது. அவர் சாலை வழியாகப் போய்க் கொண்டிருந்தபோது, ஃபெடோராவைப் பார்த்ததும் வண்டியை நிறுத்தச் சொல்லியிருக்கிறார். 'எங்கே வசிக்கிறாய்?' என்று, கேட்டிருக்கிறார். அவள் சரியாகப் பதில் சொல்லவில்லை. [ஆன்னா ஃபியோதரோவ்னா மூலம் அவருக்கு எல்லாமே தெரிந்திருக்கிறது.] 'எனக்குத் தெரியும், நீ யார்கூட வசிக்கிறாய், என்று'- என்று சொல்லியிருக்கிறார்.

ஃபெடோரோவால் அதற்குமேல் மறைக்க முடியவில்லை. விவரம் சொன்னதோடு அவரால்தான் எங்களுக்கு எல்லாத் துன்பங்களும் ஏற்பட்டதென்றும், அவர் ஓர் ஒழுக்கங்கெட்ட மனிதர் என்றும், தெருவிலேயே காரசாரமாகப் பேசியிருக்கிறாள். துரதிர்ஷ்டம் ஏற்பட்டதால் நாங்கள் பணமின்றிக் கஷ்டப்படுவதாகவும், அவர் உதவ முன் வந்ததாகவும் பதிலளித்திருக்கிறாள்.

அதற்கு, ஃபெடோரா, நாங்கள் உழைத்துச் சாப்பிடுகிறோம். அதனால் உங்களுக்கென்ன என்று கடுமையாகப் பேசி விட்டு அவரால்தான் எங்கள் மகிழ்ச்சி யெல்லாம் தொலைந்தது என்றும் நான் அதனால் சாகக் கிடப்பதாகவும் பதில் சொல்லியிருக்கிறாள். அதற்கவர், நான் இளம்பெண் என்றும் என் மூளையில் தவறான யோசனைகள் நிறைந்திருப்பதாகவும், எங்கள் ஒழுக்கமும், களங்கப்பட்டுப் போனதாகவும், சொல்ல, ஃபெடோரா சட்டென விலகி வந்துவிட்டாள்.

அந்த ஆளுக்கு நாங்கள் இருக்கும் இடம் தெரியாது என்று நினைத்திருந்தோம். ஆனால், நேற்று நான் கடைக்குப் பொருள்

வாங்கப் போயிருந்தபோது, திடீரென அவர் எம் வீட்டிற்குள் நுழைந்துவிட்டார். ஃபெடோராவுடன் நிறைய விசாரித்திருக்கிறார். 'உங்களுடன் தொடர்பு வைத்திருக்கும் அந்த 'கிளார்க்' யார்?' என்று கேட்டிருக்கிறார். அப்போதுதான் நீங்கள் முற்றத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்தீர்கள். ஃபெடோரா உங்களைச் சுட்டிக் காட்டியிருக்கிறாள்.

ஃபெடோரா அவரை வெளியே போகச் சொல்லி கெஞ்சியிருக்கிறாள். 'நீங்கள் எங்களுக்குச் செய்த தீமையெல்லாம்போதும். போங்கள்' என்று சொல்ல, அவர் அவளுக்கு இருபத்தைந்து ரூபிள் கொடுக்க முன் வந்தபோது அவள் அதை ஏற்கவில்லை.

இதற்கு என்ன அர்த்தம்? இங்கே எதற்காக அவர் வந்தார்? எம் இருப்பிடம் அவருக்கு எவ்வாறு தெரிந்தது? நான் தகர்ந்து போனேன். ஃபெடோராவின் உறவுப் பெண் அக்சின்யா எங்களைப் பார்க்க வந்து போவதுண்டு. அவளுக்கு நஸ்டாசியா என்ற சலவைக்காரியைத் தெரியும். நஸ்டாசியாவின் சொந்தக்காரன் ஆன்னாவின் உறவினன் வேலை செய்யும் அலுவலகத்தில் சுமை தூக்கும் தொழிலாளி. இவர்களின் தொடர் கிசுகிசுப்புகளால் தகவல் போயிருக்கிறது. இதில் ஃபெடோராவின் தவறு எதுவும் இல்லை.

இப்போது என்ன செய்வது? அந்த ஆள் மறுபடியும் இங்கே வரப்போவதில்லை. ஆனால் அதை நினைத்தாலே நடுக்கம் உண்டாகிறது. நேற்று ஃபெடோரா நடந்ததை எல்லாம் சொன்னபோது நான் அரண்டு போய்விட்டேன். மயக்கம்கூட வந்தது.

அவர்களுக்கு என்ன வேண்டும் இப்போது? இந்த ஏழையுடன் ஏன் இப்படி விளையாடுகிறார்கள்? எவ்வளவு பயமாய் இருக்கிறது தெரியுமா? எந்தநேரத்தில் பைக்கோவ் வந்துவிடுவாரோ என்று நினைத்து அஞ்சிக் கொண்டே இருக்கிறேன். எனக்கு என்னதான் ஆகுமோ? ஆண்டவர் பேரால் வேண்டிக் கொள்கிறேன், தயவு செய்து உடனே வந்து என்னைப் பார்க்கவும், மகார் அவர்களே. வாருங்கள். என்னைப் பார்க்க விரைந்து வாருங்கள்.

வா. அலெ.

செப்டம்பர் 18

என்னருமை வார்வரா அலெச்சியேவ்னா,

எங்க குடியிருப்பில இண்ணைக்கி, சாத்தியமில்லாத, சோகமான, விளக்க முடியாத, எதிர்பாராத சம்பவம் ஒண்ணு நடந்திருச்சு. நம் ஏழை கொரஸ்கோவ் [இத நல்லாக் கவனிம்மா] நீதிமன்றத்தில சாதகமான தீர்ப்பப் பெற்றிட்டாரு.

தீர்ப்பு முன்னாடியே எழுதிவெச்சிட்டாங்கலாம். இப்பதான் இவரு விசாரிக்கப் போயிருக்காரு. இவர் அடஞ்ச சந்தோசத்துக்கு அளவே இல்லெ. கவனக்குறைவு, புறக்கணிப்புன்னு சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகள் எல்லாம் அடிபட்டுப்போச்சு. இவருக்குச் சேர வேண்டிய தொகையை எல்லாம் அந்த வியாபாரிகிட்ட இருந்து வசூல் பண்ணி இவருக்குக் கொடுக்கணும்னு தீர்ப்பாயிருக்கு! கணிசமான தொகை கெடைக்கும்போல.

அதனால, இவரோட மரியாதெ காப்பாத்தப்பட்டிருக்கு. சூழ்நிலை சுத்தமா மாறியிருக்கு. சுருக்கமா சொல்லப்போனா, இவர் எதிர்பார்த்த மாதிரியே நல்லபடியா எல்லாம் நடந்திருக்கு.

இந்த நிலைமயிலே இவரு வீட்டுக்கு வந்தாரு. என்னமோ தெரியில முகமெல்லாம் வெளுத்துப் போயி, உதடெல்லாம் நடுங்க, ஆனா சிரிச்ச மாதிரி தெரிஞ்சாரு! குழந்தை குட்டிகளை யும், மனைவியையும் கட்டித் தழுவி சந்தோசப்பட்ட மாதிரியும் தெரிஞ்சது.

நாங்க கும்பலாச் சேந்து அவரப் பாக்கப்போயி வாழ்த்துச் சொன்னோம். அவரு அப்படியே உருகிப் போயிட்டாரு. இனி அவரு கண்ணுல கண்ணீர்துளி தேங்கி நிக்காது. இனி நிமிந்து நிப்பாருண்ணு நெனச்சேன்.

ஆனா, அந்த மனுசன் ஏதோ படபடப்பா இருக்கற மாதிரியே தோணுச்சு! எதையாவது கையில எடுக்கறது, உடனே அதக் கீழ போடறது, தானே சிரிச்சிக்கறது, சும்மா தல குனிஞ்சு வணங்கறது இப்படி.....

"எல்லாம் கடவுளுக்குத் தெரியும். பெருமை, கவுரவம், நல்லபேர் எல்லாம் கெடச்சிருச்சு குழந்தைகளே," அப்படீண்ணும் சொன்னாரு. அப்பறம் அழ ஆரம்பிச்சிட்டாரு. நாங்க ஆறுதல் சொன்னோம். "நேர்மை என்ன ஆச்சு பாத்தீங்களா. சாப்பிடக்கூட பணமில்லாமப் போச்சு. பணந்தான் முக்கியம். இப்ப பணம் கெடச்சதுக்காகத்தான் நீங்க கடவுளுக்கு நன்றி சொல்லணும்," அப்படீண்ணு சொன்னப்ப அவரு தன்னோட தோள தட்டிகிட்டாரு. அவரு நான் சொன்னதுல வெறுப்படைஞ்ச மாதிரி தெரிஞ்சது. அதத்தான் அவரு மறைமுகமாகத் தெரிவிக்க விரும்பின மாதிரி தெரிஞ்சது.

ஆனா, அவரோட பார்வையே வித்தியாசமா தெரிஞ்சது. ராட்டாசியேயெவ், தோளிலிருந்து அவரு கையெ நீக்கினாரு. இந்த மாதிரி முன்னால நடந்ததில்லெ. மனுசருக வித்தியாசமாத்தான் இருக்காங்க.

நானா இருந்தா அந்த வெற்றி மிதப்பில மொரட்டுத்தனமா நடந்துகிட்டு இருந்திருப்பேன். சில சமயங்கள்லெ தேவையில்லாத தலை வணக்கங்கூட ஒரு விதமான அவமானமாவே தோணும். அதிகப் படியா மென்மை இருந்தா, கருணை இருந்தா, அதனோட தாக்குதல்தான் அதுக்குக் காரணம்.... அதெப்படியோ போகட்டும். விஷயம் என்னோடதல்ல. பணந்தான் முக்கியம்னு சொன்னமில்யா, அதுக்கு அவர், "ஆமா பணம்தான் முக்கியம். நல்லதுதான். அதுக்காக கடவுளுக்கு ஸ்தோத்ரம்,"அப்படீண்ணு சொன்னாரு. நாங்க அவர் கூடவேதான் இருந்தோம். அவர் கடவுளுக்கு நன்றி சொல்லிகிட்டே இருந்தாரு.

அவரோட சம்சாரம் நல்ல விருந்துக்கு ஏற்பாடு பண்ணினாங்க. வீட்டுக்கார அம்மாவும் அவங்களுக்காக சமைச்சாங்க. வீட்டுக்கார அம்மாளுக்கும் கொஞ்சம் இரக்க குணம் உண்டு!

ஆனா, கோரஸ்கோவால நிம்மதியா ஓரிடத்தில உக்காரவும் முடியலெ, நிக்கவும் முடியலெ. ஒவ்வொருத்தரோட அறைக்கா வந்தாரு, கூப்பிடாமயே வந்தாரு. உள்ளே போவாரு. கொஞ்சமா சிரிப்பாரு. எதுமே சொல்லமாட்டாரு. உடனே வெளில போயிருவாரு. அந்த நட அறைக்கும் போனாரு. சீட்டாட்டத்தில

உக்காந்தாரு, நாலாவது கையா ஆடுனாரு ஆடுனாரு அப்பிடி ஆடுனாரு தப்புத் தப்பா!

மூணு நாலு தடவெ ஆடிட்டி, சட்டுண்ணு எந்திரிச்சுப் போயிட்டாரு. சம்பந்தமில்லாமெ பேசினாரு. அவர் என்னயும் சந்திச்சாரு, வாசப்படிகிட்ட. என்னோட ரெண்டு கையயும் புடிச்சுகிட்டு, அப்பிடியே உத்துப் பாத்தாரு. பெறகு, கைகளை இறுக்கிப் புடிச்சாரு. வித்தியாசமாச் சிரிச்சாரு. அவர் சிரிப்பு செத்துப் போனவன் சிரிப்பு மாதிரியே இருந்திச்சு!

சம்சாரம் ஆனந்தக் கண்ணீர் சிந்தினாங்க. அங்க ஒரே சந்தோசம்தான். அப்பறம் விருந்து, விருந்து முடிஞ்ச பெறகு, தன்னோட சம்சாரத்துகிட்ட, "கொஞ்சம் அப்பிடியே படுத்துகிறேன்," அப்படீண்ணு சொல்லிட்டு படுக்கையில படுத்துகிட்டாரு. அப்பறம் தன்னோட மகளக் கூப்டாரு. தன்னோட கையெ அவ தலமேல வெச்சுத் மெல்லத் தட்டிக் குடுத்தாரு. அப்பறம், சம்சாரத்தப் பாத்து, "பேத்யா எங்கே?"ண்ணு கேட்டாரு! அந்த அம்மா சிலுவக்குறி போட்டுகிட்டு, "அவன் இறந்து போயிட்டானில்லயா?"ண்ணு அழுதுகிட்டே சொன்னாங்க. அதுக்கு அவர், "ஆமா, ஆமா. எனக்கு அதெல்லாந்தான் தெரியுமே. இப்ப அவன் ஆண்டவரோட தேவ சாம்ராஜ்யத்தில இருப்பான்," அப்படீண்ணாரு.

அவர் சுயாதீனத்தில இல்லேங்கறது அந்த அம்மாவுக்குத் தெரிஞ்சு போச்சு. அவங்க ரொம்ப பயந்து போயி, "நீங்க கொஞ்சம் நிம்மதியா படுத்துத் தூங்குங்க,"ண்ணு சொல்ல, அவரும், "சரி, சரி"ண்ணு சொல்லிட்டு மறுபக்கம் திரும்பிப் படுத்துகிட்டாரு. மறுபடியும் திரும்பி எதோ சொல்ல அது என்னண்ணு புரியலெ. "என்ன சொன்னீங்க நண்பரே?"ண்ணு அந்த அம்மா கேட்டாங்க. அவர் ஒண்ணும் பேசாமெ திரும்பிப் படுத்துக்கிட்டாரு. அந்தம்மா கொஞ்சம் நிண்ணு பாத்தாங்க. அப்பறம் அவர் தூங்கிட்டார்னு வீட்டுக்கார அம்மாகிட்ட பேசப் போயிட்டாங்க.

ஒரு மணிநேரங் கழிச்சுத் திரும்பி வந்து அவரெ எழுப்புனா, அவர் அசையவே இல்லெ! அசந்து தூங்கறாரேண்ணு படுக்க கிட்டயே உக்காந்து எதோ வேல செஞ்சிட்டிருந்தாங்க. அரமணி நேரம் கழிச்சும் அந்தம்மா மறந்தே போயிட்டாங்க. திடீர்னு

ஏதோ ஒரு பயம் வந்து அவரெ எழுப்பினா, அவர் படுத்தபடியே அசையாமக் கெடக்கறாரு.ஆளு போயிட்டாரு! செத்துப் போயிட்டாரு! ஒரு மின்னல் வந்து தாக்கின மாதிரி போயிட்டாரு!

என்ன ஆச்சோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம். இன்னும் என்னால அதயெல்லாம் நெனச்சே பாக்க முடியலெ வாரென்கா. என்னால அதை நம்பவும் முடியலெ. அவர் செத்திருக்க கூடாது. எவ்வளவு பாவப்பட்ட மனுசன். என்ன விதமான தலவிதி இது? அந்தம்மா கண்ணீரப் பாக்க எனக்குப் பயமா இருந்தது, அந்தச் சின்னப் பெண் கொழந்தே, ஒரு மூலைல போயி ஒடுங்கி உக்காந்திட்டா. அய்யோ, அங்க எவ்வளவு துக்கம்! டாக்டர்கூட வந்து பாத்தாரு என்ன செய்ய. என்ன பரிதாபம்!

சாவு எப்ப வருமோ, எந்த நாள் எந்த நேரம்கறது யாருக்குத் தெரியும்? அப்பிடியே தான் நமக்கும்.... அழிஞ்சுபோயிடுவோம். ஒண்ணுமே இல்லாமப் போயிடுவோம்.

உன்

மகார் தேவுஸ்கின்.

செப்டம்பர் 19

மேடம், வார்வரா அலெக்சியேவ்னா,

ரட்டாசியேயெவ், எனக்கொரு வேல குடுத்திருக்காருங் கறதெ ஒடனே உனக்குத் தெரிவிக்கத்தான் இத எழுதறேன்.

அவர யாரோ வந்து பாத்து, ஒரு கைப்பிரதியெ நகலெடுக்க கேட்டிருக்காரு. வேல நெறைய இருக்கும்போல. கடவுளுக்கு நன்றி. கைப்பிரதி ரொம்ப மோசம் போல கிறுக்கலா இருக்கும்போல; புரியாதபடி.

சீக்கிரமா அழகா, தெளிவா நகலெடுத்துக் கொடுக் கணும். ஒரு பக்கத்திற்கு நாப்பது காசு. இத எதுக்காக உனக்குத் தெரிவிக்கறேண்ணா, இனி கொஞ்சம் காசு புரளும். கவலப்பட வேண்டியதில்ல. சரி. முடிச்சிக்கறேன். வேலய ஆரம்பிச்சிட்டேன் என் அன்பே.

உன்னுடைய நன்றியுள்ள நண்பன்,

மகார் தேவுஷ்கின்

செப்டம்பர் 23

அன்பு நண்பர் மகார் அலெக்சியேவிச் அவர்களே,

மூன்று நாள்களாக உங்களுக்கு நான் கடிதம் எழுதவே இல்லை. எனக்குப் பல கவலைகள், தவிப்புகள் வந்து சேர்ந்து விட்டன.

இரண்டு நாள்களுக்கு முன்னால் பைக்கோவ் வந்திருந்தார். அப்போது நான் தனியாகத்தான் இருந்தேன். ஃபெடோரா எதற்காகவோ வெளியில் போயிருந்தாள்.

நான் கதவைத் திறந்தேன். வாயிற்படியில் அவர்! நான் அரண்டு போனேன்! அப்படியே அசையாமல் அங்கேயே நின்றுவிட்டேன். என் முகம் வெளிறிப்போனது எனக்கே தெரிந்தது.

அவர் தயங்காமல் உரக்கச் சிரித்தபடி உள்ளே வந்தார். நான் சுய உணர்வுக்கு வர நீண்ட நேரம் ஆனது. அவர் ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டார். அவர் மெல்லத்தான் சிரிப்பை நிறுத்தினார். என்னுடைய தோற்றம் படுமோசம். இளைத்துப் போய் மெலிந்திருந்தேன். கன்னங்கள் குழி விழுந்து, கண்கள் உள்ளேபோய், ஒரு கைக்குட்டைபோல வெளுத்துப் போயிருந்தேன்.

ஒரு வருடத்திற்கு முன்னால் என்னைப் பார்த்தவர்கள், இப்போது பார்த்தால், என்னை அடையாளமே கண்டு கொள்ள மாட்டார்கள். அவர் என்னை வெறித்துப் பார்த்தபடி வெகு நேரம் அமர்ந்திருந்தார். கடைசியில் உற்சாகமாக எதையோ சொன்னார். நான் பதில் பேசவில்லை. என்ன பேசுவது? ஒரு மணிநேரம் அவர் அங்கே இருந்தார். என்னன்னவோ கேட்டுக் கொண்டிருந்தார். போகுமுன், அவர், கடைசியாக, என் இரு கைகளையும் எடுத்துப் பிடித்துக் கொண்டார். பேசினார். [அதை அப்படியே மாறாமல் சொல்லிவிடுகிறேன்.]

“வார்வரா அலெக்சியேவ்னா, உனக்கும் எனக்கும் இடையில் வந்த ஆன்னா படு மோசக்காரி. உன் சொந்தம் போலவும், எனக்கு நல்லது செய்வது போலவும் அவள்

பேசியதெல்லாம் பாசாங்கு. அவள் ஒரு கேடுகெட்ட பெண். [இந்தச் சந்தர்ப்பத்தில் அவர், ஆன்னாவை பல கேவலமான வார்த்தைகளால் திட்டினார்!] அவள் உன் உறவுப் பெண்ணை நாசம் செய்தது போலவே, உன்னையும் நாசம் செய்யவே திட்டமிட்டிருந்தாள். நானும்கூட ஏமாந்து போய் ஒரு வில்லன் போலவே நடந்து கொண்டுவிட்டேன்," என்றார். அப்போது அவர் உள்ளுக்குள் சிரித்துக் கொள்வது தெரிந்தது.

தனக்கு சாமர்த்தியமாகப் பேசத் தெரியாது என்றும், சுருக்கமாகச் சொல்லிவிடுவதாகவும் சொல்லி, என்னைக் கரம்பிடித்துத் திருமணம் செய்து கொண்டு, என் கவுரவத்தைக் காப்பதாகவும், தான் பெரும் செல்வந்தன் எனவும், திருமணம் முடிந்தவுடனே, ஸ்தெப்பி புல்வெளிகள் சூழ்ந்த தன் கிராமத்திற்கு என்னை அழைத்துச் சென்று விடுவதாகவும், தனக்கு இந்த பீட்டர்ஸ்பர்க் நகரமே பிடிக்கவில்லையென்றும், எப்போதும் இங்கே திரும்பி வரப் போவதில்லை என்றும், வெறுப்பைத் தரும் இந்த நகரமே வேண்டாம் என்றும், அவருடைய உறவினர் ஒருவரின் பெரும் சொத்து தனக்கு வரவிருப்பதாகவும், திருமணம் செய்து கொண்டால்தான் அது கிடைக்குமென்றும், இப்போதைய அவசரத்திற்குக் காரணமே அதுதான் என்றும் கூறினார்.

அப்புறம், என்னுடைய ஏழ்மை நிலையைக் குறிப்பிட்டு இப்படியே போனால் நான் விரைவில் செத்துப்போவேன் என்றும், ஒரு மாதம்கூட நான் தாக்குப் பிடிக்க மாட்டேன் என்றும், பீட்டர்ஸ்பர்க் நகரத்தின் குடியிருப்புகள் படுமோசமான வெறுப்பு அளிக்கும் இடங்களென்றும் கூறி, எனக்கு எதாவது வேண்டுமா என்றும் கேட்டார்.

அதையெல்லாம் கேட்டு, நான் பொங்கிக் கண்ணீர் விட்டு அழுதேன். அவருடைய பெருந்தன்மை கண்டு நான் கண்ணீர் விடுவதாக எண்ணிக் கொண்டார். நான் அன்பான, படித்த பெண் என்பதால் எண்ணிப் பார்க்கும்படியும், என்னைப் பற்றிய எல்லா விவரங்களும் தெரிந்திருப்பதால் உதவ முன் வந்ததாகவும் கூறி, உங்களைப் பற்றியும் விசாரித்தார்.

நீங்கள் ஒரு கவுரமான நல்ல மனிதர் என்று தாம் அறிந்திருப்பதாகவும், நீங்கள் எனக்குச் செய்திருக்கும் உதவிகளை

அவர் மறக்கவில்லை என்றும், உங்களுக்காக ஒரு ஐநூறு ரூபிள்கள் கொடுக்க விரும்புவதாகவும் தெரிவித்தார்.

நீங்கள் எனக்குப் பணத்திற்காக எதையும் செய்யவில்லை என்று சொன்னபோது, அப்படியெல்லாம் மடத்தனமாக நான் நினைக்கக் கூடாதென்றும், நாவல்களில்தான் அப்படியெல்லாம் வருமென்றும், இந்தக்காலத்து இளம்பெண்கள் நாவல்கள் படித்துக் கெட்டுப்போவதாகவும், அதனால் ஒழுக்கம் கெட்டுப் போவதாகவும் கூறி, திருமண விஷயம் பற்றித் தீவிரமாகச் சிந்தித்து முடிவெடுக்கும்படியும் கூறினார்.

அப்படி நான் முடிவெடுக்காவிட்டால், வரப்போகும் சொத்துக்காக ஒரு விதவைப் பெண்ணை மணமுடிக்க நேரும் என்றும் கூறினார். போகும்போது, ஐநூறு ரூபிள் கொடுத்துவிட்டுப் போவதாகவும், நல்ல இனிப்புகள் வாங்கிச் சாப்பிட்டு உடம்பை மாவுப் பணியாரம் மாதிரி ஆக்கிவிட வேண்டும் என்றும் கூறினார். தனக்கிருக்கும் ஏராளமான வேலைகளுக்கிடையில் என்னைப் பார்க்க வந்ததாகவும் கூறிப் புறப்பட்டுச் சென்றார்.

நான் நீண்ட நேரம் யோசித்துப் பார்த்தேன். மனம் மிகவும் சஞ்சலமடைந்தது என் நண்பரே. அதனால், நண்பரே, நான் அவரை மணந்து கொள்வது என்று முடிவெடுத்துவிட்டேன்! என்னுடைய கொடிய வறுமை, அவமானங்கள், என் குடும்ப கவுரவம், என் துரதிர்ஷ்டங்கள் ஆகியவற்றை யோசித்தபோது இவற்றிலிருந்து மீட்க அவரால் மட்டுமே முடியும் என்று நினைக்கிறேன்!

இல்லாவிட்டால், நான் எவ்வகையான எதிர்காலத்தை நம்பி இருப்பது? என் விதி என்னவாகும்? என் மகிழ்ச்சி போய்விடும் என்கிறாள் ஃபெடோரா. இப்போது என்ன வகையான மகிழ்ச்சியை நான் பெற்றிருக்கிறேன்? இதைத் தவிர மீட்சிக்கு வேறு வழியே தெரியவில்லை நண்பரே. நான் வேறு என்ன செய்ய?

என் உடல்நிலை அடியோடு நாசமாகிவிட்டது. என்னால் இனி உழைக்கவும் முடியாது. இப்போது எதுவும் என் மனநிறைவாக இல்லை. நான் யாருக்கும் எந்த உதவியும் செய்ய முடியாத நிலை. நான் இயல்பாகவே நோயாளி. நான் அனைவருக்கும் பாரம்தான். நான் இப்போது போகப்போவது

சொர்க்கம் இல்ல என்பது எனக்குத் தெரியும். வேறுநான் என்ன செய்ய முடியும்? நண்பரே, சொல்லுங்கள், நான் இனி என்னதான் செய்ய முடியும்? எதை நான் தேர்ந்தெடுப்பது? தேர்ந்தெடுக்க எனக்கு முன் வேறு என்னதான் இருக்கிறது?

உங்களிடம் நான் எந்த ஆலோசனையும் கேட்கப் போவதில்லை. நான் தனியே சிந்திக்க விரும்புகிறேன். இப்போது நான் எடுத்திருக்கும் இந்த முடிவு மாற்ற முடியாதது. நான் பைக்கோவிடம் உடனே என் சம்மதத்தைத் தெரிவித்துவிடப் போகிறேன்! அவர் அவசரப்படுத்துகிறார். உடனே அவர் இந்த ஊரைவிட்டுப் போக வேண்டியிருக்கிறது. இதற்குமேல் தாமதிக்க முடியாது என்கிறார்.

என் தலைவிதி எனக்கு மகிழ்ச்சியைத் தருமோ என்னவோ, அது கடவுளுக்கே வெளிச்சம். நான் முடிவெடுத்துவிட்டேன். பைக்கோவ் நல்ல மனிதர் என்றுதான் சொல்கிறார்கள். அவர் என்னை மதிப்பார். நானும்கூட அவரை மதிக்கும் நிலை வரக் கூடும். வேறு என்னதான் எங்கள் திருமணத்தின்மூலம் எதிர்பார்க்க முடியும்?

நான் எல்லாவற்றையும் உங்களிடம் சொல்லிவிட்டேன் மகார் அலெக்சியேவிச் அவர்களே. என்னுடைய நிலைமையை நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன். தயவு செய்து என்னைத் தடுக்க முயல வேண்டாம்! உங்கள் முயற்சி வீணாகிவிடும்! உங்கள் இதயத்தில் இந்தப் பிரச்சனையை எடைபோட்டுப் பாருங்கள். என்னுடைய நிர்பந்தமான நிலைமையைப் புரிந்து கொள்ளுங்கள்.

முதலில் எனக்குக் குழப்பமாகத்தான் இருந்தது. இப்போது நான் தெளிவும் நிம்மதியும் அடைந்து விட்டேன். எதிரில் என்ன இருக்கிறதோ எனக்குத் தெரியவில்லை. என்ன நடக்குமோ அது நடக்கட்டும். எல்லாம் ஆண்டவரின் விருப்பம்.....

பைக்கோவ் இதோ வந்துவிட்டார். கடிதத்தை முடிக்க முடியவில்லை. உங்களிடம் நிறையச் சொல்ல நினைத்தேன். பைக்கோவ் இதோ வந்துவிட்டார்.

வா. அலெ.

செப்டம்பர் 23

என்னருமை வார்வரா அலெக்சியேவ்னா,

அன்பே, நான் அவசரமா உனக்கு இதை எழுதறேன். அவசரமா இதை அறிவிக்கிறேன். எனக்கு ஒரே திகைப்பு. இதெல்லாமே சரியில்லை.... நேற்று கோர்ஸ்கோவை அடக்கம் செய்தோம். ஆமாம், வாரென்கா, ஆமாம். அது அப்படித்தான் நடந்தது.

பைக்கோவ் பெருந்தன்மையா நடந்திருக்காரு. பாரும்மா, என் அன்பே நீ அதை ஏத்துகிட்டிருக்கே. நிச்சயமா ஆண்டவரோட விருப்பம் எதுவோ அது அப்படித்தான் நடக்கும். ஆமா, தவறாமெ அப்படித்தான் நடக்கும். சகல லோகங்களையும் படைச்ச சர்வேசுவரனுடைய விதி தப்பவே தப்பாது. அது நல்லதாதான் இருக்கும். ஆமா, அப்பிடியேதான்.

ஃபெடோராவுக்குக்கூட உன்னப் பத்திதான் கவலெ. நிச்சயமா இப்ப நீ சந்தோசமா இருப்பே. என் இனியவளே, என் சின்னப்பூவே, என் சின்னத் தேவதையே, வாரென்கா, எப்பிடி அது இவ்வளவு சீக்கிரமா?....... ஆமா, வியாபாரம்....பைக்கோவுக்கு வியாபாரம் இருக்கு..... ஆமா, அதையெல்லாம் முடிக்கணும் அல்ல........யாருக்குத்தான் இல்லெ....

உங்க குடியிருப்ப விட்டு அவர் வெளியெ போனப்ப நான் பாத்தேன். நல்ல உருவம். நல்ல... ரொம்ப அழகான உருவம். அது சரிதான். அவர் அப்படி இருக்கறது ஒண்ணும் பெரிய விசயம் இல்லெ. நான் ரொம்ப மோசமா இருக்கேன். அதான், இப்ப. எப்படி இருந்தாலும் நாம கடிதம் எழுதிக்குவம் இல்லெ? நான்...... நான் எப்பிடி இங்க தனியா இருக்கறது? நான் எல்லாத்தயும் இப்ப ஆழமா யோசிச்சிட்டிருக்கேன். என் சின்னத் தேவதையே, எல்லாத்தையும் ஆழமா யோசிச்சிட்டிருக்கேன். உன்னப் பத்திதான்.

நகல் எடுக்கற வேலைல இருவது பக்கம் இப்ப முடிச்சிட்டேன். இந்தச் சந்தர்ப்பத்திலதான இதெல்லாம் நடந்திருச்சு. அன்பானவளே, நீ கடைவீதிக்குப் போயி நல்ல நல்ல

பொருள்கள் எல்லாம் வாங்கப்போற. உடுப்புக, காலணிகள் மாதிரி. கொரோஸ்கோவ்யா பக்கம் அந்தமாதிரி கடைக நெறைய இருக்கு... அப்பறம் என்ன, பருவநிலைதான் மோசமா இருக்கு....

நான் உனக்கு அந்த கடை வீதியெ நல்லா விளக்கி சொல்லியிருக்கனே. ஆனா, அய்யோ! எப்பிடிம்மா இது? எப்பிடி? இதுக்கு என்ன அர்த்தம்? நீ இப்போ போயிடப்போறே. அது எப்பிடி அது முடியாதே! முடியவே முடியாதே! இல்லெ, உன்னால கடையில எதுவும் வாங்க முடியாது. ஒரு வண்டி புடிச்சுக்கோ. பருவநிலை மோசமா இருக்கு. பாரு, பாதயப் பாரு. ஒரே மழை கொட்டுது. இந்த மழயில நனஞ்சு... அப்பறம்... உனக்கு சளி புடிச்சுக்குமே.

என் சின்னத் தேவதையே, உன் சின்ன இதயம் இந்தப் பருவ நிலையத் தாங்காது. உனக்குப் புது ஆளுகளெக் கண்டா பயம், இல்லெ. ஆனா, நீ போகப்போறே. அப்பறம் இங்க யார் இருக்கப் போறாங்க, என்னத் தவிர? உனக்கு பெரிய அதிர்ஷ்டம் காத்திருக்கறதா ஃபெடோரா சொல்றா.... ஆனா, அவ வெவகாரமான பொம்பள. என்னெ அடியோடு அழிச்சிட நினைக்கறா. இண்ணக்கி ராத்திரி நீ தேவாலயத்துக்குப் போவ இல்லயா என் அன்பே? உன்னப் பாக்க நான் அங்க வரப் போறேன். நீ ரொம்பப் படிச்சவ, ரொம்ப ஒழுக்கமான பொண்ணு, உணர்ச்சி வசப்படறவ, ஆமா, இதெல்லாம் உண்மெ. அந்த மனுசன், அந்த விதவப் பொண்ணயே கல்யாணம் பண்ணிகிட்டுமே! நீ என்னம்மா நெனக்கிறே?

இருட்டின பெறகு நான் வருவேன். ஒரு மணிநேரம் பேசனும். இந்த மாசம் சீக்கிரமாவே இருட்டிடுச்சு. என் சின்ன வாரென்கா, அந்த ஆளு அந்த விதவப் பொண்ணையே கல்யாணம் பண்ணிகிட்டும். இப்ப பைக்காவெ எதிர் பாத்துகிட்டு இருக்கிறயா? அவர் வெளியே போன உடனே நான் வந்திருவேன். காத்திரு... என் அன்பே, நான் வர்றேன்.....

மகார் தேவுஸ்கின்

செப்டம்பர் 27

அன்பு நண்பரே, மகார் அலெக்சியேவிச்!

எனக்கு மூன்று டஜன் மேலாடைகள் போதாதென்று பைக்கோவ் கடிந்து கொள்கிறார். இரண்டு டஜன் ஆடைகளை விரைவில் தயாரித்துவிட முடியும் என்று தையற்காரப் பெண்மணி உறுதியளித்தாள். எங்களுக்கு இன்னும் சில நாள்கள்தானே இருக்கின்றன. துணிகள் விஷயத்தில் அவருக்கு மிகுந்த கோபம். இன்னும் ஐந்து நாள்களே இருக்கின்றன, திருமணத்திற்கு. திருமணத்திற்கு மறுநாளே நாங்கள் புறப்படவேண்டியிருக்கிறது.

சின்னச் சின்ன விஷயங்களுக்காக நேரத்தை வீணடிக்க வேண்டாம் என்று அவர் சொல்கிறார். தயாரிப்புகளில் நான் களைத்துப் போகிறேன். காலை ஊன்றி நிற்கக்கூட முடியவில்லை. நிறைய வேலைகள் காத்திருக்கின்றன.

இன்னொரு விஷயம். என்னிடம் வெள்ளை சில்க் லேஸ் இல்லை. வாங்கப் போகலாம் என்றால், பைக்கோவ் மறுக்கிறார். 'என்னுடைய மனைவி ஒரு சமையல்காரி மாதிரி தெருவில் பொருள் வாங்கப் போவதை என்னால் சகித்துக் கொள்ள முடியாது' என்கிறார்.

அதனால், என்னருமை மகார், நீங்கள் கொரகோவயா பகுதிக்குச் சென்று மேடம் சிஃப்பான் அவர்களிடம் சொல்லி, உடனே என் இருப்பிடத்திற்கு ஒரு தையற்காரியை அனுப்பச் சொல்ல வேண்டும். முடிந்தால் அந்த மேடமே வரலாம்.

இன்றைக்கு என் உடல்நிலை சரியில்லை. எங்கள் புதிய குடியிருப்பு மிகவும் குளிராக இருக்கிறது. பைக்கோவின் அத்தையால் மூச்சுகூட விடமுடியவில்லை. இங்கு எல்லாமே தாறுமாறாகக் கிடக்கிறது. அந்த அம்மாள் வயதானவர்கள். எங்கள் திருமணத்திற்கு முன்பே அந்த அம்மாள் இறந்துவிடுவார்களோ என்று பயமாக இருக்கிறது. அப்படியொன்றும் நடக்காது. அவர் தேறிவிடுவார் என்கிறார் பைக்கோவ். இவர் இப்போது எங்களுடன் வசிக்கவில்லை.

ஃபெடோரா எங்களுக்கு உதவியாகத்தான பணியாற்றி வருகிறாள். பைக்கோவின் பணப்பை காணாமல் போய்விட்டது. எங்கே போயிற்று, என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை. இன்று மூன்றாவது நாள். கிடைக்கவில்லை. இந்தக் குடியிருப்பு பணி மேற்பார்வையாளருக்கும் காவல்துறைக்கும் ஏதோ விவகாரம். கடிதம் அனுப்ப ஆள் கிடைக்கவில்லை. அதனால், இதை நகர அஞ்சல் வழி அனுப்புகிறேன்.

திரு. பைக்கோவ் தினசரி காலையில் இங்கே வருகிறார். சில விஷயங்களில் கோபப்படுகிறார். மேற்பார்வையாளனை நேற்று அடித்து விட்டார். ஒரு முக்கியமான விஷயத்தை மறந்து விட்டேனே.

நேற்று நான் வாங்கிய துணிக்கு ஏற்றபடி பட்டு லேஸ் இருக்க வேண்டுமென்று மேடம் சிஃப்பானிடம் சொல்லுங்கள். என்னை நேரில் வந்து பார்த்து, புதிய துணிகளைக் காட்டச் சொல்லுங்கள். கொஞ்சம் மாற்றங்கள் இருப்பதாகச் சொல்லுங்கள்.

கைக்குட்டைகளில் போட வேண்டிய சின்னம் சங்கிலித் தையலில்தான் போட வேண்டும். என்ன புரிகிறதா? சங்கிலித் தையலில், சாட்டின் துணித் தையல் கூடாது. மறந்துவிடாதீர்கள். இன்னொன்றும் மறந்துவிட்டது. அதில் இலைகள் கொஞ்சம் மேலே தூக்கியதாக தடிப்பாக இருக்க வேண்டும். சன்னக் கொடிகள் வளையம் வளையமாக சுருள் சுருளாக இருக்க வேண்டும். சட்டைக் காலரில் கூட லேஸ் பதிக்க வேண்டும். இதையும் மறக்காமல் சொல்லிவிடுங்கள் மகார் அலெக்சியேவிச்.

தங்கள்

வா. அலெ.

பி.கு:

உங்களுக்கு இந்த சின்ன வேலைகள் கொடுப்பதற்கு வருத்தமாக இருக்கிறது. நீங்கள் இப்படி ஓடிக் கொண்டிருப்பது, மூன்றாம்நாள். வேறு வழி என்ன? இங்கே

எல்லாம் ஒரே குழப்பம். தாறுமாறாகக் கிடக்கின்றன. எனக்கும் உடம்பு சரியில்லை. கவலைப்பட வேண்டாம். என்ன குழப்பம்! என் நண்பரே, என் அன்பான மகார் எனக்கு என்னதான் நேரப்போகிறது? எனக்கு அச்சமாக இருக்கிறது. கண்ணாடியில் என்னைப் பார்க்கவே பயமாக இருக்கிறது. ஏதோ நடக்கப்போவதாக என் உள்மனம் சொல்லிக் கொண்டே இருக்கிறது. ஏதோ ஒரு மூடுபனிக்குள் இருப்பது போன்ற உணர்வு.

பி.கு:

என் நண்பரே, அருள்கூர்ந்து நான் சொன்னதை மறந்து விடாதீர்கள். குழப்பத்தில் நீங்கள் எதாவது தவறு செய்து விடக் கூடும். மறந்துவிட வேண்டாம், சங்கிலித் தையல், துணித் தையல் அல்ல.

வா. அ.செ.

செப்டம்பர் 27

மேடம், வார்வரா அலெக்சியேவ்னா,

நீ சொன்ன வேலைகளயெல்லாம் கவனமா செஞ்சு முடிச்சிட்டேன். மேடம் சிஃப்பான், நீ சொன்ன மாதிரி சங்கிலித் தையல் போடத்தான் நெனச்சிட்டிருந்தாங்களாம். அதுதான் கவுரவமா இருக்கும்னு சொன்னாங்க. எனக்கு அதையெல்லாம் புரிஞ்சுக்க முடியலெ. நீ சொன்ன மாற்றங்கள எல்லாம் அந்த மேடம்கிட்ட சொல்லிட்டேன். அவங்க நேர்ல வந்து எல்லாம் வெவரமா சொல்வாங்க.

இண்ணிக்கி எனக்கு என்னவோ மாதிரி ஒரே சோர்வா இருக்கு. வேலைக்குக் கூடப் போக முடியலெ. நீ ஒண்ணும் இதுக்காகக் கவலப்படாதே. உன்னோட நிம்மதிக்காக நான் கடைகடையா ஏறத் தயாரா இருக்கேன்.

எதிர்காலத்தெ நெனைக்கவே பயமா இருக்கறதா நீ எழுதியிருக்கே. ஆனா, இண்ணிக்கு ஏழு மணிக்குமேல உனக்கு எல்லாமே தெரிஞ்சிடும். தையற்கார மேடம் வந்து உன்னப் பாப்பாங்க. நம்பிக்கையோட இரு. கவலப்படாதே. எல்லாமே நல்லபடியா நடக்கும். நீ சொன்னதெல்லாம் எனக்கு வெளங்கா விட்டாலும், அப்பிடியே வந்து எட்டிப் பாப்பேன். ரெண்டு தடவெ உன் வீட்டு கேட்டு வரைக்கும் வந்திட்டேன். பைக்கோவ் பாத்திட்டா கோவிப்பாரோங்கற பயந்தான் உள்ள வரலெ. அப்பிடி வரக்கூடாதில்லயா? என்ன சொல்றே?

மகார் தேவுஷ்கின்.

செப்டம்பர் 28

அன்புள்ள அய்யா, மகார் அலெக்சியேவிச்!

தயவு செய்து நகைக் கடைக்கு உடனே ஓடுங்கள். அந்த முத்து, பவள, காதணிகள் செய்ய வேண்டியதில்லை என்று சொல்லிவிடுங்கள். திருவாளர் பைக்கோவ் அது மிகவும் ஆடம்பரமாகத் தோன்றும் என்றும், விலை அதிகம் என்றும் சொல்கிறார். அவருக்குக் கோபம். பணத்தைக் கொள்ளையடிப்பது போல நினைக்கிறார்! இப்படிப் பேராசை கொண்டு செய்வேன் என்று நினைத்திருந்தால், இந்த விவகாரத்திலேயே தலையிட்டிருக்க மாட்டேன் என்கிறார்!

திருமணத்திற்கு மறுநாளே புறப்பட்டுவிட வேண்டுமாம். விருந்தினர்கள் என்று யாரும் இருக்க மாட்டார்களாம். யாரையும் நான் அழைக்கக்கூடாதாம்! விருந்து வைக்க இன்னும் நீண்ட காலம் இருக்கிறது என்கிறார். ஆமாம், அப்படித்தான் பேசுகிறார்!

இதெல்லாம் எனக்குத் தேவைதானா? எல்லாம் கடவுளுக்கே வெளிச்சம்! எல்லாவற்றையும் அவரே நேரடியாக வாங்குகிறார். நான் குறுக்கே எதுவுமே பேச முடியவில்லை. எனக்கு இனி என்னதான் ஆகப்போகிறதோ?

வா. அலெ.

செப்டம்பர் 28

இனியவளே, வார்வரா அலெக்சியேவ்னா!

நான் - நகக் கடக்காரர் சரிண்ணு சொல்லிட்டார் - ஒண்ணு சொல்லணும். எனக்கு ஒடம்பு சரியில்லாமப் போயிடுச்சு. படுக்கய விட்டு எந்திரிக்கவே முடியலெ. இப்படி பரபரப்பான நேரத்தில வந்திடுச்சே! குளிர் காய்ச்சல்! நாசமாப் போக!

என்னோட துரதிர்ஷடங்களுக்குச் சிகரமா ஒரு காரியம் நடந்திருச்சு. எங்க தலைவர், யெர்மல்யான்மேல கடுங்கோபத்தில திட்டித் தீத்திருக்காரு. ஆளு, பாவம் தகர்ந்து போயிட்டாரு. இங்க நடந்த எல்லாத்தயும் தெரிவிக்கதான் நான் இத எழுதினேன். இன்னொரு விஷயத்தயும் எழுத வேண்டி இருக்கு. உன்ன சிரமப் படுத்தறனோ?

பாக்கப்போனா நானொரு மடயன். வெத்து ஆளு. எம் மண்டக்குள்ள என்னன்ன வருதோ அதயெல்லாம் எழுதிடறேன். அதில ஏதாவது இருந்தா நீ அதை - சரி. அதுக்கென்ன இப்ப!

உன்

மகார் தேவுஷ்கின்

செப்டம்பர் 29

என் அன்பானவளே, வார்வரா அலெக்சியேவ்னா,

நேத்து நான் ஃபெடோராவப் பாத்தேன் என் இனியவளே. நாளைக்கு உனக்குத் திருமணம் முடிந்துவிடும் என்றும், நாளை மறுநாள் புறப்பட்டுவிடுவீர்கள் என்றும், பைக்கோவ் வாடகைக் குதிரைகளுக்கு ஏற்பாடு செய்து விட்டார் என்றும் சொன்னா.

என் அலுவலகத் தலைவர் பற்றி நான் உங்கிட்ட முன்னாடியே சொல்லியிருக்கேன். அப்பறம், கொரக்கோவயா கடைகளுக்குப் போயி பில்களை எல்லாம் சரி பாத்திட்டேன். எல்லாம் சரியாவே இருக்கு. அப்பறம் பைக்கோவ் எதுக்கு உன்மேல கோவப்பட்டாரு? ஒருவேள பணம் அதிகமா செலவழிச்சிட்டதாலயோ? கொஞ்சம் ஜாஸ்திதான்.

நீ சந்தோசமா இருப்பே. எனக்கும் சந்தோசம். நான் மாதா கோயிலுக்கு வரத்தான் ஆசை. ஆனா இடுப்பு வலி. எனக்குக் கடிதங்க பத்திதான் கவலை. இனி யாரு கொடுப்பா? நீ ஃபெடோரா விசயத்தில ரொம்பக் கருணையோடதான் நடந்துகிட்டிருக்கே. நல்ல காரியம். ஒவ்வொரு நல்ல காரியத்துக்கும் கடவுள் கருண காட்டுவாரு. அதுக்கான பரிசு இல்லாமப் போகாது. ஒழுக்கம், ஆண்டவர் நீதியின் மணி மகுடம் பெற்றே தீரும். இப்போ, பின்னாடியோ.

என் அன்பே, உனக்கு நெறைய எழுதணும்னு ஆசை. ஒவ்வொரு மணி நேரமும், ஒவ்வொரு நிமிஷமும் உனக்கு எழுதிகிட்டே இருப்பேன். எங்கிட்ட உன்னோட புத்தகம் ஒண்ணு நிண்ணு போச்சு. 'பெல்கின் கதைகள்'னு பேரு. உனக்கு நெனவிருக்கும். தயவு செஞ்சு அதக் கேக்காதே. அது எங்கிட்டயே இருக்கட்டும். எனக்கு அதக் குடுத்திடு. இப்ப அவசரமா படிக்க அல்ல. குளிர்காலம் வரப்போகுது. மாலை நேரங்க ரொம்ப நீளமா இருக்கும். அப்ப படிக்க நேரம் கெடைக்கும்.

நான் என் இருப்பிடத்த மாத்தப் போறேன். நீ இருந்த அறைக்கு! ஃபெடோரா கிட்ட இருந்து அதெ வாடகைக்கு

எடுத்திட்டேன். வேற அவளோட எந்தத் தொடர்பும் இல்லெ. நேத்து காலியா இருந்த அதப் போயிப் போத்திட்டு வந்தேன். மேசை இருந்தது. அதுமேல தையல் பொருள்கள். ஒரு துண்டு துணிகூட அப்பிடியே இருந்திச்சு. என்னோட கடிதங்களை எல்லாம் சுருட்டி நூல் போட்டுக் கட்டி வெச்சிருந்தே. இழுப்பறைல காகிதங்க இருந்திச்சு. ஒரு காயிதத்தில, 'அன்பான மகார் அலெக்சியேவிச், எனக்கு இப்ப அவசரம்'னு எழுதியிருந்திச்சு. அவ்வளவுதான். யாரோ வந்து எழுதவிடாமெ செஞ்சிருக்காங்க.

ரொம்ப சுவையான விசயம், எழுத முடியாமப் போயிருக்கு. ஒரு மூலைல உன்னோட படுக்கை, ஒரு சின்னத் திரைக்குப் பின்னால இருந்திச்சு. என் இனியவளே!!! சரி. போய்வா! போய் வா! தயவு செஞ்சு இந்த கடிதாசிக்கு ஒரு பதில் வேணும், சீக்கிரமா.

மகார் தேவுஸ்கின்

செப்டம்பர் 30

எனது விலை மதிக்க முடியாத நண்பர், மகார்

அலெக்சியேவிச் அவர்களே!

எல்லாம் முடிந்துவிட்டது. எவ்வளவோ விஷயங்கள் முடிவுக்கு வந்துவிட்டன. இனி என்ன நடக்குமோ எனக்குத் தெரியாது. ஆனால், நான் ஆண்டவரின் ஆணைக்கு என்னை ஒப்புக் கொடுத்துவிட்டேன்.

நாங்கள் நாளைக்குப் புறப்படப்போகிறோம். கடைசியாக உங்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன், என் பிரியமானவரே, விலை மதிக்க முடியாத நண்பரே, என் நலன் நாடுபவரே! எனக்காகக் கவலைப்படாதீர்கள். மகிழ்ச்சியாக வாழ்க! என்னை மறந்துவிடாதீர்கள். கடவுள் உங்களுக்கு அருள் புரிவார்!

நான் உங்களை என்றும் நினைத்திருப்பேன். உங்களுக்காகப் பிரார்த்திப்பேன். எல்லாம் இப்போது ஒரு முடிவுக்கு வந்துவிட்டது. என் கடந்த கால நினைவுகள் காரணமாக எனக்கு ஏற்பட்டிருக்கும் ஆறுதல் கொஞ்சம்தான். உங்கள் நினைவுகள் எனக்குப் பிடித்தமானவை. என் இதயத்தில் இடம் பெற்றவர் நீங்கள். எனக்கு உள்ள ஒரே நண்பர் நீங்கள் மட்டுமே. என்னை நேசித்தவர் நீங்கள் மட்டுமே. நீங்கள் எந்த அளவுக்கு என்னை நேசித்தீர்கள் என்பதை நான் அறிவேன்.

உங்களுக்கு என் ஒரு புன்முறுவல் மட்டுமே போதுமான தாக இருந்தது ஆனந்தப்படுவதற்கு. என் ஒரு வரி உங்களுக்குப் போதுமானதாக இருந்தது, பரவசப்படுவதற்கு. இனி நீங்கள் நானில்லாமல் வாழப் பழகிக் கொள்ள வேண்டும். நீங்கள் தனியாக எப்படி இருக்கப் போகிறீர்களோ! உங்களை இனி யார் கவனித்துக் கொள்ளப் போகிறார்கள்? கடவுளே, என் நல்ல இனிய நண்பரே, விலைமதிக்க முடியாத ஒரே நண்பரே, நான் என் புத்தகத்தை உங்களிடமே விட்டுப் போகிறேன். மற்றும் மேசை, முடிக்காதுவிட்ட கடிதம் எல்லாவற்றையும் விட்டுவிட்டுப்

போகிறேன். நான் ஆரம்பித்த கடித வரியை நீங்கள் பார்க்கும்போது, நீங்கள் கேட்க வேண்டிய எல்லாவற்றையும் உங்கள் எண்ணத்தில் படித்துப் பார்ப்பீர்களாக; நீங்கள் என்னிடத்திலிருந்து கேட்க வேண்டிய எல்லாவற்றையும், நான் எழுதியிருக்கப் போகிற விஷயங்கள் எல்லாவற்றையும்! இப்போது எழுதும் இதையும்.

இந்த ஏழை வாரென்காவை உங்களை மிகவும் நேசித்த இவளை மறந்து விடாதீர்கள். உங்கள் கடிதங்கள் எல்லாம், ஃபெடோராவின் மேசை இழுப்பறையில் பத்திரமாக உள்ளன. உங்களுக்கு உடல்நிலை சரியில்லை என்று எழுதியிருந்தீர்கள். பைக்கோவ் வெளியில் என்னை அனுப்ப மறுக்கிறார். என்றாலும் உங்களுக்கு நான் எழுதுவேன். சத்தியமாக எழுதுவேன் நண்பரே. ஆனால், எனக்கு என்ன நேரப்போகிறதோ என்பதை ஆண்டவரே அறிவார், என் நண்பரே, என் இனியவரே, என் அன்பரே..... இப்போது உங்களைப் பற்றிக் கொள்ள எவ்வளவு விரும்புகிறேன் தெரியுமா?

சரி. விடை பெறுகிறேன். நண்பரே விடை பெறுகிறேன். விடை பெறுகிறேன். மகிழ்ச்சியாக வாழுங்கள். உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள். என் பிரார்த்தனை என்றும் உங்களுக்காகவே. அய்யோ, எவ்வளவு துக்கம்! என் உயிர் எவ்வாறு உடைத்து நொறுக்கப்பட்டுவிட்டது! இதோ, பைக்கோவ் அழைக்கிறார். என்றென்றும் உங்களை நேசிக்கும்

வா.

பி.கு:

என் ஆத்மா நிறைய நிறைய ஏராளமான கண்ணீர்...... கண்ணீர் என்னை நொறுக்கிவிட்டது. என்னை இரண்டாகக் கிழித்துவிட்டது. விடைபெறுகிறேன்! கடவுளே! என்ன துயரம்! என்ன சோகம்! உங்கள் ஏழை வாரென்காவை மறந்து விடாதீர்கள், மறந்து விடாதீர்கள்!

என்னருமை வாரென்கா, என் இனிய நெஞ்சமே, என் விலை மதிக்க முடியாத மாணிக்கமே! நீ போன போக்கில போயிட்டயே! நீ போகப் போறயே! இப்ப நெஞ்சுக் குழியில இருந்து இருதயத்தெ பிச்சு எடுத்து வெளியில வீசினா நல்லா இருக்குமே! எப்பிடி, எப்பிடி இப்படி செஞ்சே? ஆகவே, நீ அழுகறே, அதே சமயம் நீ போகப்போறே, இல்லயா? உங்கிட்ட இருந்து இப்பதான் ஒரு கடிதம், கண்ணீரால் நனஞ்ச கடிதம் கெடச்சது. அதில இருந்து நீ போக விரும்பலேங்கறது தெரியுது. உன்ன வற்புறுத்திக் கொண்டுபோறாங்கண்ணு தெரியிது. எனக்காக நீ கவலப் படறேங்கறதும் தெரியிது. உன் சின்ன இதயம் துக்கமா, நோய்ப்பட்டு, இறுகிப்போயி இருக்கும். இப்ப உனக்குத் துணையா யார் இருக்காங்க?

கவலை உன் இதயத்தெ கடிச்சுத் திங்கும்; துக்கம் அதெ ரெண்டா கிழிச்சிடும். நீ அங்கயே செத்துப்போவெ. கடுகடுண்ணு இருக்கற தரையில உன்னக் கெடத்திருவாங்க. உங்கிட்ட உக்காந்து அழுகறதுக்குக்கூட ஆளிருக்காது.

அப்ப, பைக்கோவ் முயல் வேட்டையில மும்முரமா ஈடுபட்டிருப்பாரு........

ஆ, என் அன்பே, அன்பே, எதுக்காக இப்படி ஒரு முடிவெடுத்தே? எப்படி இப்படி ஒரு முடிவெ எடுக்க உனக்கு மனசு வந்தது. என்ன காரியம் பண்ணிட்டே, என்ன காரியம் பண்ணிட்டே. உனக்கே கெடுதல் பண்ணிட்டயே. உன் சவக் குழிக்கு உன்ன வெரட்டிட்டாங்களே. உன்ன முழுசா முடிச்சுக் கட்டிட்டாங்களே, என் சின்னத் தேவதையே!

நீ ஒரு லேசான பறவை இறகு, என் அன்பே, இப்ப என்னோட நிலைமை என்ன? நான் இப்ப ஏன் இப்படி மோட்டு வளையெ ஒரு முட்டாள் மாதிரி பாத்திட்டிருக்கேன்? நீ ஒரு முட்டாள் கொழந்தேங்கறது தெரியிது. கொழந்தைக்கு தலவலி. சாதரணமா ஒரு.... இல்ல இல்ல நான் சுத்த மடையன். நான் எதப்

பத்தியும் நெனக்க முடியலெ. எனக்கு எதுவுமே கண்ணில படலெ. ஆனா, இதெல்லாம் என்னோட விவகாரம் இல்லெ. இந்த லட்சணத்தில ஒரு சால்வைக்காக நான் ஓடிட்டிருக்கறேன்.....

வாரென்கா, நான் குணமாயி எந்திருச்சிருவேன். நாளைக்கே கொஞ்சம் சரியாயிடும். அப்ப நான் எந்திரிச்சுக் குவேன்! ..... நான் என்னெ வண்டிச் சக்கரங்களுக்கு அடியில காவு குடுத்திரப் போறேன் என் அன்பே! உன்னெ நான் போக விடமாட்டேன். இல்லெ, இதெல்லாம் என்ன வாரென்கா?

என்ன உரிமையில இதெல்லாம் நடந்திருக்கு? நான் உங்கூட வரத்தான் செய்வேன். உன்னோட கோச்சு வண்டிக்குப் பின்னால நான் ஓடி வருவேன். ஓடி வந்துகிட்டே இருப்பேன்... என்ன நீ வண்டியில ஏத்திக்கலே, என்னால முடிஞ்ச வரைக்கும் உம் பின்னால ஓடி வந்துகிட்டே இருப்பேன், செத்து விழுகற வரைக்கும்!

உனக்குத் தெரியுமா அங்க எப்படி இருக்கும்னு? நீ எங்க போயிட்டிருக்கேண்ணு உனக்குத் தெரியுமா? உனக்குத் தெரியாது. என் அன்பே அங்க கண்ணுக்கெட்ன தூரம் வரண்ட புல்வெளி. ஸ்தெப்பி புல்வெளி என் உள்ளங்கை மாதிரி ஒண்ணுமே இல்லாத வரண்ட புல்வெளி. அங்க விவசாயிக மட்டும்தான் இருப்பாங்க. அப்பறம் உணர்ச்சியே இல்லாத பெண்கள். படிப்பில்லாதவங்க. ஆம்பளைங்க குடிகாரனுக.

மரமெல்லாம் இலை உதிர்த்து மொட்ட மொட்டையா நிக்கும். மழ பேஞ்சுகிட்டே இருக்கும். குளிர் கடுகடுப்பா இருக்கும். நீ அங்க போறே. பைக்கோவுக்கு அங்க எத்தனையோ வேல இருக்கும். தன்னோட முயல்களோட அவரு இருப்பாரு. ஆனா, உன்னோட நிலைமெ என்ன? நீ வெறும் நிலப்பிரவுவோட சம்சாரம். அவ்வளவுதான்.

என் அன்பானவளே, தேவதைக் குழந்தயே, கொஞ்சம் உன்னெ நீயே பாரு. எப்பிடி இருக்கே? நீ ஒரு நிலப்பிரவுவோட சம்சாரம் மாதிரி இருக்கியா? அப்படித் தோணுதா? அது எப்படி சாத்தியமாகும் வாரென்கா? என் அன்பானவளே, இனி நான் யாருக்கு கடிதங்கள் எழுதுவேன்!

இதயெல்லாம் கொஞ்சம் யோசிச்சுப் பாரு. "பாவம், அவரு யாருக்குக் கடிதங்கள் எழுதுவாரு?"ண்ணு நீ நெனச்சுப் பாக்கணும். நான் யார இனி பேர் சொல்லிக் கூப்பிடுவேன். உன் அழகான பேரச் சொல்லி நான் யாரக் கூப்பிடறது? நான் செத்துப் போயிருவேன் வாரென்கா. நிச்சயமா நான் செத்தே போயிருவேன். இதுக்கு மேல என் நெஞ்சு தாங்காது. இந்த துரதிர்ஷ்டத்தெத் தாங்காது.

தேவனின் ஒளியெ நேசிக்கிற மாதிரி உன்ன நேசிச்சேன், என் சொந்த மகளப் போல உன்ன நேசிச்சேன். உன் சம்பந்தப்பட்ட எல்லாத்தயுமே நான் நேசிச்சேன், அன்பே! நான் உனக்காக மட்டுமே வாழ்ந்திருந்தேன். நான் ஒழச்சது, டாக்குமெண்ட்டுகளெ நகல் எடுத்தது, நடை நடந்தது, என் மனசில பட்டதயெல்லாம் காயிதத்தில பதிஞ்சது, நட்பான கடிதங்கள் வடிவத்தில அதெ எழுதி உனக்கு அனுப்பிச்சது எல்லாமே நீ இங்க இருந்ததனால தான். இதெல்லாம் உனக்குத் தெரியாமப் போகலாம். ஆனா, எல்லாமே அப்படித்தான்.

கொஞ்சம் நான் சொல்றதெக் கேளு. என் இனியவளே, நீயே முடிவெடு. எப்படி எங்களவிட்டு உன்னால பிரிஞ்சு போக முடிஞ்சது? அன்பானவளே, நீ போகக்கூடாது. அது சாத்தியமில்லேங்கறது உனக்கே தெரியும். நிச்சயமா உன்னால முடியாது. மழை கொட்டுது. நீ ரொம்ப பலவீனமா இருக்கே. உனக்கு சளி புடிச்சுக்கும்.

உன்னோட கோச்சு வண்டி பூரா நனஞ்சு தொப்பலாயிடும். இந்த நகரத்தோட எல்லை தாண்டின ஒடனே வண்டி ஒடஞ்சு சாய்ஞ்சிரும்! எனக்குத் தெரியும். அது இந்த ஊர்ல கட்டின வண்டிதானே! பீட்டர்ஸ்பர்க்ல இருக்கற எல்லா கோச்சு வண்டி தயாரிப்பாளர்களையும் எனக்குத் தெரியும். ரொம்ப அழகா இருக்கற மாதிரி செய்வாங்க. ஆனா, உறுதியா செய்யத் தெரியாது. பொம்ம செய்யற மாதிரிதான் செய்வாங்க. வலுவா இருக்காது. எனக்கு நல்லாவே தெரியும். அந்த வண்டி ஒடஞ்சிரும். சத்தியமா சொல்றேன் அவங்களுக்கு செய்யத் தெரியாது. என் அன்பே, பைக்கோவ் முன்னால மண்டிபோட்டு கெஞ்சிக் கேக்கப் போறேன்! அவரு நிலைமயப் பாக்கட்டும். அவரப் பாக்க வெப்பேன். எல்லாத்தயும் அவரெப் பாக்க வெப்பேன்.

'நீ இங்கதான் இருக்கப் போற. போகப்போறது இல்லெண்ணு' சொல்லப்போறேன்...... அடடா, அவர் ஏன் அந்த இறந்துபோன வியாபாரியோட மனைவியக் கல்யாணம் கட்டிக்கக் கூடாது? அங்க மாஸ்கோவுல கல்யாணம் பண்ணிகிட்டு அங்கயே இருந்திரலாமே. அந்த விதவப் பெண் அவருக்கு ரொம்பப் பொருத்தமா இருப்பாளே! காரணம் என்னாண்ணு எனக்குத் தெரியும்.

அப்ப நான் உன்னெ இங்கயே வெச்சிக்கலாம். அவருக்கும் உனக்கும் என்ன ஒறவு? அன்பே இந்த பைக்கோவ் உனக்கு யாரு? எப்படி அவரு தன்னெ உனக்கு வேண்டியவரா ஆக்கிட்டாரு?

ஒரு வேள உனக்கு விலையுயர்ந்த சால்வை வாங்கிக் குடுத்ததனாலயா? அது அப்படியா? என்ன பெரிய சால்வை! எதுக்கு அது? பாக்கப்போனா அது மடத்தனமாத்தான் எனக்குத் தோணுது.

நாம இங்கே மனுச உயிர்களப் பத்திப் பேசிட்டிருக்கோம். இதில சால்வைக்கு என்ன வந்தது? அன்பே அது வெறும் துணி. வாரென்கா, என் அன்பே அது வெறும் ஒரு துண்டுத் துணி! இது உனக்குத் தெரியுமில்லயா?

எனக்கு மட்டும் சம்பளம் வரட்டும், ஒரு மூட்டை சால்வகளெக் கொண்டு வந்து குவிச்சிடுவேன். ஆமா. மலமலயா வாங்கிக் குவிச்சிற மாட்டனா! அந்தக் கட எனக்குத் தெரியும். ஒரு சின்னக் கடதான். சம்பளம் வரட்டும் வாரென்கா. சம்பளம் வரட்டும், என் தேவ குழந்தையே!

கடவுளே, கடவுளே, நீ நிச்சயமா, அந்த பைக்ரோ கூட ஸ்தெப்பி புல்வெளி பிரதேசத்துக்குப் போகவே போறயா? போகப் போறயா? போனாத் திரும்பி வர மாட்டயா? ஆ, என் அன்பான வளே, எனக்கு இன்னம் கொஞ்சம் எழுது. எதயாச்சும் எழுது. எல்லாத்தயும் எழுது.

என் தேவதையே, நீ அங்க போனப்பறம் அந்த சூழ்நிலை பத்தி, விவரமா, எல்லாத்தயும் எழுது. இல்லாட்டி இதுதான் நான் உனக்கு எழுதற கடைசீக் கடிதமா இருக்கும். இது உனக்குத்

தெரியும். நீ எழுதலேண்ணா இதுதான் என்னோட கடைசீக் கடிதமா இருக்கும்!

அது எப்படி இது என்னோட கடைசீக் கடிதமா ஆகும்? உறுதியா அது எப்படி சொல்ல முடியும்? இல்லெ, நான் எழுதுவேன். நீயும் எழுதத்தான் போறெ. என்னோட மொழிநடைகூட கொஞ்சம் நல்லபடியா மாறிட்டுதான் வருது... அன்பே, மொழி நடை எப்படி இருந்தா என்ன? அதுக்கு எதுக்கு முக்கியத்துவம்? இப்ப நான் என்ன மாதிரி எழுதிகிட்டு இருக்கேன்கறது கூட எனக்குத் தெரியாது.

எனக்கு என்னம்மா தெரியும். ஒண்ணுமே தெரியாது. எழுதின அப்பறம் நான் படிச்சுப் பாக்கறதுகூட இல்லெ. பிழை திருத்தறதுகூட இல்லெ. மொழிநடையத் திருத்தம் பண்றதுகூட இல்லெ.

எழுதறேன் எழுதறதுக்காகவே எழுதறேன். உனக்கு நெறைய எழுதணுங்கறதுக்காகவே எழுதறேன்.

என் இனிமையானவளே, என் அன்பானவளே,

என் அன்பே!

